# கணக்குப் பதிவியல்

தொகுதி II

## மேல்நிலை - முதலாம் ஆண்டு

தீண்டாமை ஒரு பாவச்செயல்
தீண்டாமை ஒரு பெருங்குற்றம்
தீண்டாமை மனிதத்தன்மையற்ற செயல்



தமிழ்நாட்டுப்
பாடநூல் நிறுவனம்
சென்னை

முதல் பதிப்பு—1981

மறு பதிப்பு —1983

**ஆங்கில மூல நூல்**

பதிப்பாசிரியர் குழுத்தலைவர் &
மதிப்புரையாளர் தலைவர்

பேராசிரியர் S. **சுவாமிநாதன்,**
வாணிகவியல் பேராசிரியர்,
சென்னை கிறித்துவக் கல்லூரி,
தாம்பரம், சென்னை.

**ஆசிரியர்**

பேராசிரியர் S. **ஆரோக்கியசாமி,**
வாணிகவியல் பேராசிரியர்,
லயோலா கல்லூரி,
சென்னை.

**மதிப்புரையாளர்கள்**

1. டாக்டர் **M. O. மாத்தியூ,**
வாணிகவியல் பேராசிரியர்,
அண்ணாமலைப் பல்கலைக்
கழகம், அண்ணாமலை நகர்.

2. பேராசிரியர் **K. L. நாகராஜன்,**
வாணிகவியல் துறைத்தலைவர்,
D. G. வைஷ்ணவக் கல்லூரி,
சென்னை.

**தமிழ் மொழி பெயர்ப்பும்
திருத்தமும்**

மொழி பெயர்ப்புக் குழுத்
தலைவர் &
மதிப்புரையாளர் குழுத்தலைவர்

பேராசிரியர் **பு. சி. கந்தசாமி,**
முதல்வர்,
அறிஞர் அண்ணா அரசு ஆண்கள்
கலைக்கல்லூரி,
நாமக்கல்.

**மொழி பெயர்ப்பாளர்**

பேராசிரியர் **பு. சி. கந்தசாமி,**
முதல்வர்,
அறிஞர் அண்ணா அரசு ஆண்கள்
கலைக்கல்லூரி,
நாமக்கல்.

**மதிப்புரையாளர்கள்**

1. பேராசிரியர் **த. சு. மணி,**
வாணிகவியல் பேராசிரியர்,
பச்சையப்பன் ஆடவர் கல்லூரி,
காஞ்சிபுரம்.

2. பேராசிரியர் **ம. பு. வெல்லூர்,**
வாணிகவியல் பேராசிரியர்,
புனித சூசையப்பர் கல்லூரி,
திருச்சிராப்பள்ளி.

**விலை ரூ. 5-30**

இந்திய அரசு சலுகை விலையில் வழங்கிய 60 ஜி.எஸ்.எம்.
தாளில் இந்நூல் அச்சிடப்பட்டது.

**அச்சிட்டோர் :**

**முத்துக்குமரன் பிரஸ், சென்னை 600 001**

# பொருளடக்கம்

## அத்தியாயம் 13

# இறுதிக் கணக்குகள்
## (Final Accounts)

நமது தொழில் சார்ந்த கணக்குகளைத் தயாரிப்பதில் பல கட்டங்கள் (Stages) இருக்கின்றன. அவற்றில் ஒரு கட்டம்தான் இருப்பாய்வு (Trial Balance) தயாரித்தல் ஆகும். குறிப்பிட்ட காலப்பகுதியைத் தழுவிய நடவடிக்கைகள் அனைத்தையும் நாம் முறையாக ஏடுகளில் பதிந்து, எடுத்தெழுதி, இருப்புக்கட்டியும் விட்டோம் எனும் நிலையில் இருப்பாய்வு தயாரிக்கும் கட்டம் எழுகிறது.

இருப்பாய்வு தயாரித்தல் ஒரு முக்கியப் பணியாக விளங்கிடினும், அத்துடன் நாம் கணக்குகளைப் பதிந்து வருவதன் நோக்கம் ஈடேறிவிடுவதில்லை. நாம் கணக்குகளை எந்த நோக்கங்களோடு தயாரிக்கிறோம் என ஈண்டு சற்று நினைவு கூர்ந்தால் இக் கூற்றின் உண்மை புலனாகும். தொழில் நமக்கு இலாபம் ஈட்டித்தருகிறதா அல்லது இழப்பை உருவாக்குகிறதா, தொழிலின் நிதி நிலை எத்தகையதாக இருக்கிறது போன்ற அரிய செய்திகளை வேண்டும்பொழுது நமக்குக் காட்டிடுதலே கணக்குப் பதிவியலின் நோக்கங்களாகும். சுருங்கக் கூறின், நாம் இதுவரை தொழில் செய்தோமே அதன் விளைவுகள் யாவை, தொழிலின் நிலை திடமானதாக இருக்கிறதா எனும் செய்திகளைத் தெரிவித்தலே கணக்குப்பதிவியலின் குறிக்கோள்களாம். இந்த முக்கியமான செய்திகளை அறிய இருப்பாய்வு போதாது; இறுதிக் கணக்குகளையும் தயாரிக்க வேண்டும். இக் கணக்குகள் இருப்பாய்வைக் கொண்டே தயாரிக்கப்படுகின்றன. இதுவே இருப்பாய்வின் முக்கியத்துவத்திற்குக் காரணமாகும். ஆகவேதான் இருப்பாய்வு, பேரேட்டுக் கணக்கையும் இறுதிக் கணக்குகளையும் இணைக்கும் பாலம் எனச் சொல்லப்படுகிறது.

# 2

## இறுதிக் கணக்குகள்

| வியாபார, இலாப-நட்டக் கணக்கு (வியாபார நிறுவனமாயின்)<br>தயாரிப்பு, இலாப-நட்டக்கணக்கு (தயாரிப்பு நிறுவனமாயின்) | இருப்புநிலைக் குறிப்பு |
|---|---|

இறுதிக் கணக்குகள் இரு பகுதிகள் கொண்டவை. வியாபார, இலாப-நட்டக் கணக்கு இறுதிக் கணக்குகளின் முதலாவது பகுதியாகும். அவற்றின் இரண்டாவது பகுதி இருப்புநிலைக் குறிப்பு. மேலேயுள்ள வரைபடம் இப் பகுதிகளைத் தெளிவாகக் காட்டுகிறது. இக் கணக்குகள் ஆண்டு அல்லது அதன் பகுதி இறுதியில் தயாரிக்கப்படுவதால் **இறுதிக் கணக்குகள்** எனப்பெயர் பெறுகின்றன.

## வியாபார, இலாப-நட்டக் கணக்கு

ஒரு வாணிகர் ஒரு குறிப்பிட்ட காலப்பகுதியில் செய்த நடவடிக்கைகளிலிருந்து அவருக்கு ஏற்படும் நிகர இலாபம் அல்லது நிகர நட்டம் எவ்வளவு என்பதை இக் கணக்கு காட்டுகிறது. இக் கணக்கின் முதல் பகுதி 'வியாபாரக் கணக்கு (Trading Account) எனவும், இரண்டாம் பகுதி 'இலாப-நட்டக் கணக்கு' எனவும் அழைக்கப்படுகின்றன.

## வியாபாரக் கணக்கு (Trading Account)

வியாபாரம் என்பது பொருள்களை வாங்கி, விற்பதைக் குறிக்கிறது. பொருள்களை வாங்கி விற்பதால் ஏற்படும் மொத்த இலாப-நட்டத்தை வியாபாரக் கணக்கு காட்டுகிறது. எடுத்துக்காட்டாக, ஒரு வியாபாரி ஓர் ஆண்டில் 1,000 மூட்டை நெல்லை ரூ. 75,000க்குக் கொள்முதல் செய்து அதை ரூ. 90,000க்கு விற்றால் அவருக்கு ஏற்படும் மொத்த இலாபம் (Gross Profit) ரூ. 15,000 ஆகும். இங்கு ரூ. 75,000 என்பது விற்ற நெல்லைக் கொள்முதல் செய்த வகையில் அவருக்கு ஏற்பட்ட (விற்றவற்றின்) அடக்கத்தைக் (Cost of Sales) குறிக்கிறது; இதில் அவர் செலுத்திய கொள்முதல் விலை, கொள்முதல் செய்த சரக்கை அவரது கிடங்கிற்குக் கொணர்ந்து அதை விற்பனை செய்யத்தக்க நிலைக்குக் கொண்டுவருவதற்கு ஆகும் செலவுகள் ஆகியவை அடங்கும். இச் செலவுகளுக்கு நேரடிச் செலவுகள் (Direct Expenses) எனப்பெயர்.

இந்த எடுத்துக்காட்டில் அவர் விற்றவற்றின் அடக்கம் (Cost of Sales) ரூ. 75,000 ஆகும். ஆனால் அவர் விற்பனை செய்த தொகையோ ரூ. 90,000. இந்த இரண்டிற்கும் உள்ள வேறுபாடு **மொத்த இலாபம்** அல்லது **மொத்த நட்டம்** என அழைக்கப்படுகிறது. விற்பனைத் தொகை (Sale Proceeds) விற்றவற்றின் அடக்கத்தினும் அதிகமாக இருந்தால் அந்த வேறுபாடு மொத்த இலாபம் எனப்படும்; மாறாக விற்பனைத் தொகை, விற்றவற்றின் அடக்கத்தினும் குறைவாக இருந்தால், 'மொத்த நட்டம்' ஏற்படும். இந்த மொத்த இலாபம் அல்லது மொத்த நட்டத்தை வியாபாரக் கணக்கு காட்டிடும்.

இக் கணக்கின் எளிமையான வடிவம் இவ்வாறு தோன்றும்:

1975 டிசம்பர் 31ஆம் நாளோடு முடிவடையும் ஆண்டுக்கான வியாபாரக் கணக்கு

| பற்று | ரூ. | | வரவு ரூ. |
|---|---|---|---|
| கொள்முதல் | ........ | விற்பனை | ........ |
| மொத்த இலாபம் | ........ | | |
| | ........ | | ........ |

மேலே காட்டப்பட்டுள்ள வியாபாரக் கணக்கில் மூன்று செய்திகள் மட்டுமே தோன்றுகின்றன: அந் நிலையில் விற்பனைக்கும் கொள்முதலுக்குமுள்ள வேறுபாடு மொத்த இலாபம் அல்லது நட்டம் எனப்படுகிறது.

ஆனால் நடைமுறையில் இக் கணக்கில் மேலும் பல விவரங்கள் தோன்றிடக் காணலாம். அவ்வாறு **பற்றுப் பகுதியில் தோன்றத்தக்க செய்திகளாவன:**

(1) ஆண்டு அல்லது அக் காலப்பகுதியின் தொடக்கத்தில் கையிலுள்ள சரக்கிருப்பு—இதைத் தொடக்கச் சரக்கிருப்பு எனவும் கூறலாம்.

(2) அந்த ஆண்டு ரொக்கமாகவும் கடன் அடிப்படையிலும் செய்த மொத்தக் கொள்முதலும், சரக்களிப் போருக்குத் திருப்பப்பட்ட சரக்கின் மதிப்பும்.

அதாவது திருப்பிய சரக்கை, மொத்தக் கொள்முதலி லிருந்து கழித்துக் காண்பிக்க வேண்டும்.

(3) கொள்முதல் செய்யும் சரக்குகளின் அடக்கத்தை (cost) அதிகப்படுத்தத்தக்க (அதாவது அடக் கத்தில் சேர்க்கத்தக்க) செலவுகள்.

கொள்முதல் செய்த சரக்குகளைக் கொள்முதல்-செய்நரின் இடங்கிற்குக் கொண்டுவருவதற்குச் செலுத்தத் தக்க சத்தம் (Freight), ஏற்றிச்செல் செலவு (Carriage) என்பவற்றை இத்தகைய செலவுகளுக்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம். இவற்றை முறையே உள்-சத்தம் (Freight Inward), உள்-ஏற்றிச்செல் செலவு (Carriage Inward) எனவும் கூறுவதுண்டு. சத்தம் என்றாலே உள்-சத்தம் எனக் கொள்க. அதுபோலவே ஏற்றிச்செல் செலவு என்றாலே உள்-ஏற்றிச்செல் செலவு என எடுத்துக்கொள்ள வேண்டும். இப் பாகுபாட்டில் அடங்கும் ஏனைய செலவுகளாவன: கொள்முதல் மீது செலுத்திய வரி, அகற்றீட்டுக் கட்டணங்கள் (Clearing Charges), கப்பல்துறைக் கட்டணம், சரக்குகளை உற்பத்தி செய்வதற்குப் பயன்படுத்தும் நிலக்கரி, எரிவளி (Gas), நீர் போன்றவையாகும்.

வியாபாரக் கணக்கின் வரவுப் பகுதியில் தோன்றத்தக்க செய்திகளாவன.

(1) கடன் விற்பனை, ரொக்க விற்பனை ஆகிய இரண்டும் சேர்ந்த மொத்த விற்பனையிலிருந்து நமது வாடிக்கையர் நமக்குத் திருப்பிய சரக்குகளின் மதிப்பு கழிந்த நிகர விற்பனை (Net Sales).

(2) ஆண்டு அல்லது அக் காலப்பகுதியின் இறுதியில் தம் கைவசமுள்ள சரக்கிருப்பு. இதை இறுதிச் சரக்கிருப்பு எனவும் கூறலாம்.

**வியாபாரக் கணக்கின் பற்றுப் பகுதியில் தோன்றும் செய்திகள் பற்றிய விளக்கம்.**

(1) **கொள்முதல் :—** இருப்பாய்வில் கொள்முதல் கணக்கு எனும் இனத்திற்கு (Item) நேரே பற்றிருப்பு (Debit Balance) தோன்றும். இத் தொகை அந்த ஆண்டில் ரொக்க அடிப்படையிலும் கடன் அடிப்படையிலும் செய்யப் பட்ட கொள்முதலின் மொத்தத்தைக் குறிக்கும்.

இதை வியாபாரக் கணக்கில் காட்டும்பொழுது, இதிலிருந்து (அதாவது மொத்தக் கொள்முதலிலிருந்து) வெளித் திருப்பம் (அல்லது கொள்முதல் திருப்பம்) குறித்த சரக்கு மதிப்பைக் கழித்துக் காண்பிக்க வேண்டும். இவ்வாறு கழித்துப் பெறப்படும் நிகரத் தொகைக்கு 'நிகரக் கொள் முதல்' (Net Purchases) எனப் பெயர். இந் நிகரக் கொள்முதல் தொகையே வியாபாரக் கணக்கின் தொகைப் பத்தியில் தோன்றும்.

வியாபாரத்தின் சொந்தக்காரர் வியாபாரப் பணத்தைக் கொண்டு அவரது சொந்தப் பயனுக்காகப் பொருள்களைக் கொள்முதல் செய்து, அவை மொத்தக் கொள்முதலில் சேர்க் கப்பட்டிருந்தாலோ அல்லது வியாபாரத்திற்காக முன்னர் கொள்முதல் செய்துவைத்திருந்த சரக்குகளைப் பின்னர் தமது சொந்தப் பயனுக்குப் பயன்படுத்தினாலோ அச் சரக்கு களுக்குரிய அடக்க மதிப்பை வியாபாரக் கணக்கில் தோன்றும் மொத்தக் கொள்முதலிலிருந்து கழித்துக் காண்பிக்க வேண்டும்.

**(2) நேரடிச் செலவுகள் :—** வியாபாரக் கணக்கின் பற்றுப் பகுதியில் இடம்பெறும் மற்றொரு முக்கியமான தகவல் 'நேரடிச் செலவுகள்' என்பவை. மூன்று வகையான செலவுகள் நேரடிச் செலவுகள் எனப்படும். அவையாவன:

(அ) கொள்முதல் செய்த சரக்குகளை நமது கிடங் கிற்குக் கொண்டுவரும்வரை செய்யப்படவேண்டிய செலவுகள்;

(ஆ) கொள்முதல் செய்யும் சரக்குகளை விற்பனைக்கு ஏற்ற நிலைக்குக் கொண்டுவருவதற்குச் செய்யப் படும் செலவுகள், கொள்முதல் செய்யும் சரக்கு எண்ணெய், நெய் போன்று திரவப் பொருளாக இருப்பின் அதை டின்களிலோ சீசாக்களிலோ அடைக்காமல் விற்க முடியாது. அதைத் தக்க கொள்கலனில் (Container or Package) இட்டால் தான் விற்பதற்கு ஏற்ற நிலைக்குக் கொணர இயலும். இத்தகைய கட்டுமக் கட்டணங்களை (Packing Charges) இச் செலவுகளுக்கு எடுத்துக் காட்டாகக் கூறலாம்;

(இ) நாமே சரக்குகளை உற்பத்தி செய்வதாக இருப் பின், உற்பத்திச் செலவுகள் அனைத்தும் இக் கணக்கில் (வியாபாரக் கணக்கில்) இடம் பெறும்.

நேரடிச் செலவுகள் வியாபாரக் கணக்கின் பற்றுப் பகுதியில் தோன்றும். அவற்றில் முக்கியமானவையாவன:

(அ) **சத்தம்:** இதைக் கொள்முதல் மீதான சத்தம் எனவும், உள் சத்தம் (Freight Inwards) எனவும் கூறலாம்.

(ஆ) **ஏற்றிச்செல் கட்டணம்:** இதை உள் ஏற்றிச்செல் கட்டணம் எனவும் அழைப்பதுண்டு. கொள்முதல் செய்த சரக்குகள் குறித்த செலவுகள் 'உள்' (Inwards) என்ற அடைமொழி சேர்த்து அழைக்கப்படுவது அறியற்பாலது.

(இ) **கூலி:** இது உற்பத்தி சார்ந்த கூலியாதலால் இதை உற்பத்திக் கூலி அல்லது தயாரிப்புக் கூலி எனவும் அழைக்கலாம்.

(ஈ) **நகர் நுழைவு வரி:** நகராட்சி எல்லைக்குள் நுழையும் சரக்குகளுக்கு இது விதிக்கப்படுகிறது.

(உ) **இறக்குமதி வரி, கப்பல்துறைக் கட்டணம் (Dock dues), அகற்றீட்டுக் கட்டணம்** (Clearing Charges), நாட்டடைக் கட்டணம் (Landing Charges) ஆகியவை. இக் கட்டணங்கள் இறக்குமதி குறித்துச் செய்யப்படும் செலவுகளாகும். சில நேரங்களில் இறக்குமதி வரியைப் பொதுப் படையாகச் 'சுங்க வரி' (Customs Duty) எனவும் சொல்லுவதுண்டு. அந் நிலையில், சுங்க வரியாகச் செய்யப்படும் செலவு வியாபாரக் கணக்கின் பற்றுப் பகுதிக்கு எடுத்துச் செல்லப்படும்.

(ஊ) **எரிபொருள், மின்திறன்** (Power), **ஒளி:** உற்பத்தி தொடர்பான இச் செலவுகள் வியாபாரக் கணக்கின் பற்றுப் பகுதியில் இடம் பெறும்.

(எ) **மசகெண்ணெய்** (Oil), **மசகுப்பசை** (Grease), **கழிவுத்துணி** (Waste): இவையும் உற்பத்தி சார்ந்த செலவுகளே. தயாரிப்பு நிறுவனங்கள் 'தயாரிப்புக் கணக்கு' (Manufacturing Account) எனத் தனியாகக் கணக்கு தயாரிக்காத நிலையில், இச் செலவுகள் அவற்றின் வியாபாரக் கணக்கில் இடம் பெறுவது அறியற்பாலது.

(ஏ) **கட்டுமச் செலவுகள்** (Packing Expenses)**:** உற்பத்தி செய்யப்படும் பொருள்களை விற்பனைக்கு ஏற்றவையாகச் செய்வதற்காக அவற்றை டின், குப்பி, ஏனைய கொள்கலனில் அடைப்பது குறித்த கட்டுமச் செலவுகள் வியாபாரக் கணக்கில் இடம்பெறும்.

மாறாக, விளம்பரம், பாதுகாப்பு, கவர்ச்சி போன்ற நோக்கங்கள் கருதியும் பொருள்கள் கட்டுமம் செய்து தரப்படுவதுண்டு. அதாவது பொருள்களை விற்பனைக்கு ஏற்றவையாகச் செய்வதற்காகச் செய்யப்படுவதல்ல, இத்தகைய கட்டுமங்கள்; இக் கட்டுமச் செலவுகள் வியாபாரக் கணக்கில் தோன்றா; மாறாக, அவை இலாப-நட்டக் கணக்கில் தோன்றும்.

**வியாபாரக் கணக்கில் சரக்கிருப்பு**

(1) **தொடக்கச் சரக்கிருப்பு:** இது அந்த ஆண்டின் அல்லது காலப்பகுதியின் தொடக்கத்தில் கையிலுள்ள சரக்கிருப்பாகும். இத் தகவல் இருப்பாய்வில் தோன்றும். தொடக்கச் சரக்கிருப்பை அந்த ஆண்டில் செய்த நிகரக் கொள்முதலோடு கூட்டுங்கால், நம்மிடம் அந்த ஆண்டு விற்பனைக்காக இருந்த சரக்குகளின் மொத்த மதிப்பு புலப்படும். (இந்த மொத்த மதிப்பிலிருந்து இறுதிச் சரக்கிருப்பைக் கழித்தால், அந்த ஆண்டு விற்றவற்றின் அடக்கம்—Cost of Sales—கிடைக்கும்).

(2) **இறுதிச் சரக்கிருப்பு:** பொதுவாக இத் தகவல் இருப்பாய்வில் இடம் பெறுவதில்லை; இருப்பாய்வுக்கு வெளியே ஒரு கூடுதல் செய்தியாக இது காணப்படும். அந்த ஆண்டு அல்லது காலப்பகுதியின் இறுதியில் நம் கைவசமுள்ள சரக்கிருப்பை இது குறிக்கும். இறுதிச் சரக்கிருப்பு பின்வருமாறு மதிப்பிடப்படும்:

(அ) ஆண்டு இறுதியில் நம் கைவசமுள்ள சரக்குகளை ஒவ்வொன்றாக எண்ணியோ, அளந்தோ, எடைபோட்டோ பார்த்து ஒரு பட்டியல் தயாரித்துக் கொள்ளவேண்டும். இதற்குச் **சரக்கிருப்பு எடுத்தல்** எனப் பெயர்.

(ஆ) பிறகு அப்பட்டியலிலுள்ள சரக்குகளின் மதிப்பைக் கணக்கிடவேண்டும். இதற்குச் **சரக்கிருப்பை மதிப்பிடல்** எனப் பெயர். சரக்கின் அடக்க விலை

சந்தை விலை இந்த இரண்டில் எது குறைவானதோ அந்த விலையில் சரக்கிருப்பை மதிப்பிட வேண்டும். எதிர்பார்க்கப்படும் இலாபத்தைக் கணக்கில் சேர்த்துக் கொள்ளக்கூடாது—உண்மையாகவே எழுந்த இலாபத்தை மட்டுமே கணக்கில் சேர்த்துக்கொள்ள வேண்டும்—என்ற தத்துவத்தின் அடிப்படையில் சரக்கிருப்பு இவ்வாறு மதிப்பிடப் படுகிறது. இந்த ஆண்டின் இறுதிச் சரக்கிருப்பு அடுத்த ஆண்டின் தொடக்கச் சரக்கிருப்பு என்பது தெளிவு.

**வியாபாரக் கணக்கு குறித்த குறிப்பேட்டுப் பதிவுகள்**

வியாபாரக் கணக்கைத் தயாரிப்பதற்குப் பின்வரும் குறிப்பேட்டுப் பதிவுகளைச் (Journal Entries) செய்ய வேண்டும் இப் பதிவுகளைச் செய்வதால், வியாபாரக் கணக்கிற்கு எந்தெந்தக் கணக்குகளின் இருப்புகள் மாற்றப்படுகின்றனவோ, அந்தக் கணக்குகள் முடிக்கப் பெறுகின்றன.

| நாள் | விவரம் | பே. ப. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | வியாபாரக் க/கு பற்று | | ...... | |
| | தொடக்கச் சரக்கிருப்பு | | | ...... |
| | கொள்முதல் | | | ...... |
| | நேரடிச் செலவுகள் (தனித்தனியாக) | | | ...... |
| | (இக் கணக்குகளை வியாபாரக் கணக்கிற்கு மாற்றுவது குறித்த பதிவு) | | | |
| | விற்பனைக் க/கு பற்று | | ...... | |
| | இறுதிச் சரக்கிருப்புக் க/கு பற்று | | ...... | |
| | வியாபாரக் க/கு | | | ...... |
| | (வியாபாரக் கணக்கிற்கு மாற்றுவது குறித்த பதிவு) | | | |
| | வியாபாரக் க/கு பற்று | | ...... | |
| | இலாப-நட்டக் க/கு | | | ...... |
| | (மொத்த இலாபத்தை இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்றுவது குறித்த பதிவு) | | | |

**குறிப்பு:** இப் பதிவுகளைச் செய்வதற்கு முன்னதாக, விற்பனைத் திருப்பக் கணக்கையும் கொள்முதல் திருப்பக் கணக்கையும் முடிக்க வேண்டும். அதற்கு விற்பனைத் திருப்பக் கணக்கை விற்பனைக் கணக்கிற்கும், கொள்முதல் திருப்பக் கணக்கைக் கொள்முதல் கணக்கிற்கும் மாற்ற வேண்டும். அதற்குரிய பதிவுகளாவன:

(அ) கொள்முதல் திருப்பக் க/கு பற்று ......
கொள்முதல் க/கு ......
(கொள்முதல் திருப்பக் கணக்கை முடிப்பதற்குரிய பதிவு)

(ஆ) விற்பனைக் க/கு பற்று ......
விற்பனைத் திருப்பக் க/கு ......
(விற்பனைத் திருப்பக் கணக்கை முடிப்பதற்குரிய பதிவு)

**அறிக:** இருப்பினும் வியாபாரக் கணக்கில் கொள்முதல் திருப்பத்தைக் கொள்முதலிலிருந்தும், விற்பனைத் திருப்பத்தை விற்பனையிலிருந்தும் கழித்துக் காண்பிக்க வேண்டும்.

### வியாபாரக் கணக்கின் மாதிரி வடிவம்

1973 டிசம்பர் 31ம் நாளோடு முடிவடையும் ஆண்டுக்கான வியாபாரக் கணக்கு

| பற்று | ரூ | | வரவு ரூ |
|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு | ........ | விற்பனை ...... | |
| கொள்முதல் ...... | | கழிக்க: | |
| கழிக்க: | | விற்பனைத் திருப்பம் ...... | ........ |
| கொள்முதல் திருப்பம் ...... | ........ | | |
| சத்தம் | ........ | இறுதிச் சரக்கிருப்பு | ........ |
| உள் ஏற்றிச்செல் செலவு | ........ | | |
| அகற்றீட்டுக் கட்டணம் | ........ | | |
| கப்பல்துறைக் கட்டணம் | ........ | | |
| கூலி | ........ | | |
| மொத்த-இலாபம் (இலாப நட்டக் கணக்கிற்கு மாற்றப்படுவது) | ........ | | |
| | ........ | | ........ |

**எடுத்துக்காட்டு 1**

ஒரு வியாபாரியைப் பற்றிய கீழ்வரும் செய்திகளி லிருந்து வியாபாரக் கணக்கு தயாரிக்க:

1977ஆம் ஆண்டு அவர் செய்த கொள் முதல் மொத்தம் ரூ. 8,000

அதே ஆண்டு அவர் செய்த விற்பனை மொத்தம் ரூ. 11,000

**குறிப்பு:** அந்த ஆண்டு தொடக்கச் சரக்கிருப்பும் இறுதிச் சரக்கிருப்பும் இல்லை எனக் கொள்க.

**விடை:**

1977 டிசம்பர் 31ஆம் நாளோடு முடிவடையும் ஆண்டுக்கான வியாபாரக் கணக்கு

பற்று | | | வரவு
---|---|---|---
| ரூ. | | ரூ.
கொள்முதல் | 8,000 | விற்பனை | 11,000
மொத்த இலாபம் (இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்றப்படுவது) | 3,000 | |
| 11,000 | | 11,000

**எடுத்துக்காட்டு 2**

ஒரு வியாபாரியின் ஏடுகளில் காணப்படும் செய்திகளாவன:

| | ரூ. |
|---|---|
| 1976 ஜனவரி 1ஆம் நாளைய சரக்கிருப்பு | 5,000 |
| அந்த ஆண்டு செய்த கொள்முதல் | 11,000 |
| அந்த ஆண்டு செய்யப்பட்ட விற்பனை | 20,500 |

வியாபாரக் கணக்கு தயாரித்து, அவரது மொத்த இலாபத்தைக் கணக்கிடுக.

**விடை :**

1976 டிசம்பர் 31ஆம் நாளோடு முடிவடையும் ஆண்டுக்கான வியாபாரக் கணக்கு

பற்று | | | வரவு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| சரக்கிருப்பு (1-1-1976) | 5,000 | விற்பனை | 20,500 |
| கொள்முதல் | 11,000 | | |
| மொத்த இலாபம் (இலாப நட்டக் கணக்கிற்கு மாற்றப்படுவது) | 4,500 | | |
| | 20,500 | | 20,500 |

**எடுத்துக்காட்டு 3**

பின்வரும் செய்திகளிலிருந்து 1975 டிசம்பர் 31 ஆம் நாளோடு முடிவடையும் ஆண்டுக்குரிய மொத்த இலாபம் கணக்கிடுக:

| | ரூ. |
|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு (1-1-1975) | 25,000 |
| 1975ஆம் ஆண்டு செய்யப்பட்ட கொள்முதல் | 1,40,000 |
| 1975ஆம் ஆண்டு செய்யப்பட்ட விற்பனை | 1,90,000 |
| இறுதிச் சரக்கிருப்பு (31-12-1975) | 30,000 |

**விடை :**

1975 டிசம்பர் 31ஆம் நாளோடு முடிவடையும் ஆண்டுக்கான வியாபாரக் கணக்கு

பற்று | | | வரவு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு | 25,000 | விற்பனை | 1,90,000 |
| கொள்முதல் | 1,40,000 | இறுதிச் சரக்கிருப்பு | 30,000 |
| மொத்த இலாபம் (இலாப நட்டக் கணக்கிற்கு மாற்றப்படுவது) | 55,000 | | |
| | 2,20,000 | | 2,20,000 |

**எடுத்துக்காட்டு 4**

1973 டிசம்பர் 31ஆம் நாளன்றைய பின்வரும் பேரேட்டு இருப்புகளிலிருந்து வியாபாரக் கணக்கு தயாரிக்க:

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| 1973 ஜனவரி 1-ஆம் நாளன்று சரக்கிருப்பு | 2,000 | |
| கொள்முதல் க/கு | 18,000 | |
| விற்பனைக் க/கு | | 25,000 |
| உள் திருப்பக் க/கு | 1,000 | |
| வெளித் திருப்பக் க/கு | | 500 |
| 1973 டிசம்பர் 31ஆம் நாளன்று சரக்கிருப்பு | 1,500 | |

**விடை :**

1973 டிசம்பர் 31ஆம் நாளோடு முடிவடையும் ஆண்டுக்கான வியாபாரக் கணக்கு

பற்று | வரவு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு | 2,000 | விற்பனை 25,000<br>கழிக்க :<br>உள் திருப்பம் 1,000 | 24,000 |
| கொள்முதல் 18,000<br>கழிக்க :<br>வெளித் திருப்பம் 500 | 17,500 | இறுதிச் சரக்கிருப்பு | 1,500 |
| மொத்த இலாபம் (இலாப - நட்டக் கணக்கிற்கு மாற்றப்படுவது) | 6,000 | | |
| | 25,500 | | 25,500 |

**எடுத்துக்காட்டு 5**

பின்வரும் செய்திகளிலிருந்து வியாபாரக் கணக்கிற்குத் தொடர்பானவற்றைத் தேர்ந்தெடுத்து, 1973 டிசம்பர் 31 ஆம் நாளோடு முடிவடையும் ஆண்டுக்குரிய வியாபாரக் கணக்கைத் தயாரிக்க:

| 1973 | ரூ. |
|---|---|
| ஜனவரி 1 சரக்கிருப்பு | 2,000 |
| டிசம்பர் 31 கொள்முதல் | 7,000 |
| கூலி (உற்பத்தி சார்ந்தது) | 1,500 |
| கொள்முதல் செய்த சரக்கு மீதான சத்தம் | 750 |
| கொள்முதல் மீதான கடல்சார் காப்பீடு | 250 |
| இறக்குமதி செய்த சரக்கு மீதான தீர்வை | 400 |
| எழுத்தாளர்களுக்குச் சம்பளம் | 1,200 |
| அலுவலகத் துணைஞர்களுக்கும் அங்காடித் துணைஞர்களுக்கும் (Shop Assistants) கூலி | 300 |
| உந்து திறன் (Motive power) | 120 |
| உள் ஏற்றிச்செல் செலவு (Carriage Inwards) | 75 |
| விற்பனை | 15,000 |
| சரக்கிருப்பு | 3,000 |
| கட்டுமப் பொருள்கள் (Packing Materials) | 200 |
| உள் திருப்பம் | 400 |
| வெளித் திருப்பம் | 300 |
| அலுவலக ஒளியாக்கம் | 250 |

**குறிப்பு:** வியாபாரக் கணக்கிற்குரிய செலவு இனங்களைத் தேர்ந்தெடுக்கும் பொழுது அவை கொள்முதல் அடக்கத்தை அதிகப் படுத்துகின்றனவா என ஆராய்ந்து பார்த்துத் தேர்ந்தெடுக்க வேண்டும். எழுத்தர்களுக்குச் சம்பளம், அலுவலகத்துணைஞர்களுக்கும் அங்காடித் துணைஞர்களுக்கும் கூலி, அலுவலக ஒளியாக்கம் போன்ற செலவுகள் அலுவலகத்தைப் பேணுவதற்குச் செய்யப் படுவன; ஆகையால் அத்தகைய செலவுகள் வியாபாரக் கணக்கில் தோன்றா.

**வியாபாரக் கணக்கை இருப்புக்கட்டல்**

வியாபாரக் கணக்கின் இரு பக்க மொத்தங்களுக்கிடையேயுள்ள வேறுபாடு, மொத்த இலாபம் அல்லது மொத்த நட்டத்தைக் குறிக்கும். வரவுப் பக்க மொத்தம் அதிகமானதாக இருப்பின் அந்த வேறுபாடு மொத்த இலாபத்தை உணர்த்தும். மாறாக, பற்றுப் பக்க மொத்தம் அதிகமானதாக இருப்பின், அந்த வேறுபாடு மொத்த நட்டத்தைக் குறிக்கும். மொத்த நட்டம் அல்லது மொத்த இலாபம் வியாபாரக் கணக்கிலிருந்து இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்றப்படும். அப்பொழுதுதான் நாம் இலாப-நட்டக் கணக்கிலிருந்து உண்மையான இலாபம் அல்லது உண்மையான நட்டத்தைக் கணக்கிட முடியும்.

விடை :

1973 டிசம்பர் 31ஆம் நாளோடு முடிவடையும் ஆண்டுக்குரிய வியாபாரக் கணக்கு

| பற்று | ரூ. | | வரவு ரூ. |
|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு | 2,000 | விற்பனை 15,000<br>கழிக்க :<br>உள் திருப்பம் 400 | 14,600 |
| கொள்முதல் 7,000<br>கழிக்க :<br>வெளித் திருப்பம் 300 | 6,700 | இறுதிச் சரக்கிருப்பு | 3,000 |
| கொள்முதல் மீதான சத்தம் | 750 | | |
| கொள்முதல் மீதான கடல்சார் காப்பீடு | 250 | | |
| இறக்குமதி செய்த சரக்கு மீதான தீர்வை | 400 | | |
| உள் ஏற்றிச்செல் செலவு | 75 | | |
| உந்து திறன் | 120 | | |
| கூலி (உற்பத்தி சார்ந்தது) | 1,500 | | |
| கட்டுமப் பொருள்கள் | 200 | | |
| இலாப-நட்டக் கணக்கிற்கு (மொத்த இலாபம்) | 5,605 | | |
| ரூபாய் .. | 17,600 | ரூபாய் .. | 17,600 |

## இலாப - நட்டக் கணக்கு

ஒரு வாணிகர் ஆண்டுக்காண்டு எவ்வளவு நிகர இலாபம் ஈட்டுகிறார் அல்லது எவ்வளவு நிகர நட்டம் ஏற்கிறார் என்பதை அவருடைய இலாப-நட்டக் கணக்கு காட்டிடும்.

இலாப-நட்டக் கணக்கைத் தயாரிப்பதற்கு முதன் முதலாகச் செய்ய வேண்டுவது, வியாபாரக் கணக்கு காட்டிடும் இருப்பை—அதாவது மொத்த இலாபத்தைக்—கீழ்க் கொணர்ந்து இலாப-நட்டக் கணக்கின் வரவுப் பக்கத்தில் காட்ட வேண்டும். வியாபாரக் கணக்கின் இருப்பு மொத்த நட்டமாயின் அதைக் கீழ்க் கொணர்ந்து இலாப நட்டக் கணக்கின் பற்றுப் பக்கத்தில் (பகுதியில்) காண்பிக்க வேண்டும். அதாவது இலாப-நட்டக் கணக்கு, மொத்த இலாபம் அல்லது மொத்த நட்டத்தோடு தொடங்குகிறது.

### இலாப - நட்டக் கணக்கின் வரவுப் பகுதி (மருங்கு)

இலாப நட்டக் கணக்கின் வரவுப் பகுதியில் தோன்றும் முதலாவது செய்தி மொத்த இலாபம். அதற்குப் பிறகு அத் தொழிலில் ஏற்பட்ட ஏனைய வருமானங்களும் ஆதாயங்களும் அப் பகுதியில் காண்பிக்கப்படும். முதலீட்டின் மீது பெற்ற வட்டி, வங்கியிலுள்ள நிலை வைப்பிலிருந்து பெற்ற வட்டி, ஈட்டிய வட்டம் (Discount Earned), ஈட்டிய கழிவு போன்ற பல்வேறு சில்லறை வருமானங்கள் அல்லது ஆதாயங்கள் ஒவ்வொரு தொழிலுக்கும் இருப்பது இயல்பு. ஆயினும் இவை சில்லறை வருமான இனங்களே. ஒரு தொழிலின் முக்கிய வருமானம், கொள்முதல்—விற்பனை அல்லது உற்பத்தி—விற்பனையிலிருந்து அது பெற்றிடும் வருவாயேயாகும்; இதற்கு இயக்க வருமானம் (Income from Operation) எனப் பெயர். ஆக, இலாப-நட்டக் கணக்கின் வரவுப் பகுதியில் மொத்த இலாபமும், சில்லறை வருமான இனங்களும் தோன்றும்.

### இலாப - நட்டக் கணக்கின் பற்றுப் பகுதி (மருங்கு)

ஒரு தொழிலினூடே பல செலவுகள் செய்ய வேண்டியதாக இருப்பது கண்கூடு. இவற்றில் உற்பத்தி அடக்கத்திலோ கொள்முதல் அடக்கத்திலோ சேரும் செலவுகள் நீங்கலாக, ஏனைய செலவுகளை (மறைமுகச் செலவுகளை) இலாப-நட்டக் கணக்கின் பற்றுப் பகுதியில் காண்பிக்க வேண்டும். இச்செலவுகளை நான்கு தலைப்புகளில் தொகுக்கலாம் :

| | | |
|---|---|---|
| (i) | விற்பனைச் செலவுகள் (Selling Expenses) | விளம்பரம், பயணச் செலவுகள், விற்பாண்மையர் சம்பளம், மாதிரிச் சரக்கு அடக்கம் (Cost of Samples), கட்டுமச் செலவுகள் போன்றவை. |
| (ii) | மேலாண்மைச் செலவுகள் (Management Expenses) | அலுவலகச் சம்பளம், அலுவலக வாடகை, அலுவலக ஒளியாக்கம், எழுதுபொருள்-அச்சுச் செலவு இன்ன பிற. |
| (iii) | பேணுகைச் செலவுகள் (Maintenance Expenses) | பழுதுபார்ப்பு - புத்தாக்கச் செலவுகள் (Repairs and Renewals), தேய்மானம் இன்னபிற. |
| (iv) | நிதியச் செலவுகள் (Financial Expenses) | கடன்மீது வட்டி, மேல்வரைப்பற்று மீது வட்டி, (Interest on Overdraft) இன்ன பிற. |

**குறிப்பு:** உற்பத்தி அடக்கத்திலோ கொள்முதல் அடக்கத்திலோ சேரும் செலவுகள் (நேரடிச் செலவுகள்) வியாபாரக் கணக்கிற்கு எடுத்துச் செல்லப் படுவதை ஈண்டு நினைவிற் கொள்ளவேண்டும்.

## இலாப - நட்டக் கணக்கின் மாதிரிப் படிவம்

31-12-1793ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய இலாப-நட்டக் கணக்கு.

| பற்று | ரூ. | வரவு | ரூ. |
|---|---|---|---|
| வியாபாரக் கணக்கு— மொத்த நட்டம் கீ/கொ | ...... | வியாபாரக் கணக்கு — மொத்த இலாபம் கீ/கொ | ..... |
| சம்பளம் | ...... | பெற்ற வட்டம் | ...... |
| வாடகை, உள்ளூர் வீதமும் வரியும் | ...... | ஈட்டிய கழிவு | ...... |
| எழுதுபொருள்-அச்சுச்செலவு | ...... | பெற்ற வட்டி | ...... |
| அஞ்சல்-தந்திச்செலவு | ...... | முதலீட்டிலிருந்து வட்டி | ...... |
| காப்பீட்டு முனைமம் | ...... | பணிபயிலுநர் முனைமம் | ...... |
| பழுதுபார்ப்பும் புத்தாக்கமும் | ...... | குடியிருப்போரிடமிருந்து வாடகை | ...... |
| பல்வகை வியாபாரச் செலவுகள் | ...... | முதல் கணக்கிற்கு நிகர நட்டம் | ...... |
| வட்டி | ...... | | |
| வங்கிக் கட்டணம் | ...... | | |
| அலுவலகச் செலவுகள் | ...... | | |
| நிறுவனச் செலவுகள் | ...... | | |
| பெறுதுச் செலவுகள் | ...... | | |
| இலாயச் செலவுகள் | ........ | | |
| அலுவலக ஒளியாக்கம் | ...... | | |
| ஊர்திகள் பேணுகை | ...... | | |
| தீ அல்லது களவு மூலமான இழப்பு | ...... | | |
| கழிவு | ...... | | |
| விளம்பரம் | ...... | | |
| வெளி ஏற்றிச் செல் செலவு | ...... | | |
| வட்டம் | ...... | | |
| பயணச் செலவு | ...... | | |
| வழங்கற் செலவு | ...... | | |
| தேய்மானம் | ...... | | |
| போக்கெழுதிய வராக்கடன் | ...... | | |
| முதல் கணக்கிற்கு— நிகர லாபம் | ...... | | |
| ரூ. | ...... | ரூ. | ...... |

குறிப்பு : (1) இலாப-நட்டக் கணக்கின் தொடக்கத்தில் வரவுப் பகுதியில் மொத்த இலாபமும், பற்றுப் பகுதியில் மொத்த நட்டமும் தோன்றுகின்றன. நடைமுறையில் இவற்றில் ஏதாவது ஒன்றுதான் தோன்றும்.

(2) இலாபநட்டக் கணக்கிலிருந்து முதல் கணக்கிற்கு மாற்றப்படும் தொகையான நிகர இலாபம் இலாப-நட்டக் கணக்கின் பற்றுப் பகுதியிலும், நிகர நட்டம் அதன் வரவுப் பகுதியிலும் தோன்றுகின்றன. ஓரே சமயத்தில் இலாபமும் நட்டமும் எழமுடியாதாகையால் இவற்றில் ஏதாவது ஒன்றுதான் ஒரு பொழுது தோன்ற முடியும்.

### எடுத்துக்காட்டு 6

பின் வரும் பேரேட்டு இருப்புகளிலிருந்து வியாபார, இலாப-நட்டக் கணக்கைத் தயாரிக்க:

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| 1-1-1973 அன்று சரக்கிருப்பு | 2,000 | |
| கொள்முதல் க/கு | 18,000 | |
| விற்பனைக் க/கு | | 21,000 |
| கூலிக் க/கு | 300 | |
| உள் ஏற்றிச்செல் செலவுக் க/கு | 100 | |
| வெளி ஏற்றிச்செல் செலவுக் க/கு | 150 | |
| உள் திருப்பக் க/கு | 2,000 | |
| வெளித் திருப்பக் க/கு | | 1,000 |
| சம்பளக் க/கு | 2,400 | |
| வாடகைக் க/கு | 600 | |
| பொதுச் செலவுகள் க/கு | 500 | |
| வட்டக் க/கு | 50 | |
| கழிவுக் க/கு | | 1,800 |

குறிப்பு : 31-12-1973 அன்று இறுதியில் இருந்த சரக்கிருப்பு ரூ. 9,000 என மதிப்பிடப்படுகிறது.

விடை:

குறிப்பு: (1) வட்டம், கழிவு என்பவை செலவுகளாகவும் இருக்கலாம், வருமானங்களாகவுமிருக்கலாம், செலவா, வருமானமா என்பது அக்கணக்கு இருப்புகளின், தன்மையைச் சார்ந்து இருக்கும். இங்கு வட்டக்கணக்கு பற்றிருப்பைக்காட்டுவதால் அதைச் செலவாக வும், கழிவுக் கணக்கு வரவிருப்பைக் காட்டு வதால் அதை வருமானமாகவும் கொள்ள வேண்டும்

(2) வருமான இனங்களைப் பொறுத்தவரை, சரக்கு விற்பனையைத் தவிர ஏனைய வருமான இனங்கள் அனைத்தும் இலாப-நட்டக் கணக்கிலேயே தோன்றும்.

(3) செலவுகளைப் பொறுத்தவரை, உற்பத்தி அடக்கம் அல்லது கொள்முதல் அடக்கத் தைச் சார்ந்த செலவுகள் (நேரடிச் செல வுகள்) வியாபாரக் கணக்கிலும், ஏனைய செலவுகள் (மறைமுகச் செலவுகள்) இலாப-நட்டக் கணக்கிலும் தோன்றும். இந்த எடுத்துக் காட்டில், கூலி, உள் ஏற்றிச்செல் செலவு ஆகிய இரு செலவுகள் வியாபாரக் கணக்கிலும், ஏனையவை இலாப-நட்டக் கணக்கிலும் தோன்ற வேண்டும். 'கூலி' என்பது உற்பத்தி சார்ந்த கூலியையே குறிக்கும்.

(4) வியாபாரக் கணக்கைப் படம்பிடித்துக் காட் டும் வாய்ப்பாடு பின்வருமாறு:

| | | |
|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு<br>+ கொள்முதல்<br>+ நேரடிச் செலவுகள்<br>+ மொத்த இலாபம் | = | விற்பனை<br>+ இறுதிச் சரக்கிருப்பு |

**1973 டிசம்பர் 31ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கு**

| பற்று | ரூ. | வரவு | ரூ. |
|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு | 2,000 | விற்பனை 21,000<br>கழிக்க :<br>உள் திருப்பம் 2,000 | 19,000 |
| கொள்முதல் 18,000<br>கழிக்க :<br>வெளித் திருப்பம் 1,000 | 17,000 | இறுதிச் சரக்கிருப்பு | 9,000 |
| கூலி | 300 | | |
| உள் ஏற்றிச்செல் செலவு | 100 | | |
| இலாப-நட்டக் கணக்கிற்கு—<br>மொத்த இலாபம் | 8,600 | | |
| | 28,000 | | 28,000 |
| சம்பளம் | 2,400 | வியாபாரக் க/கு—<br>மொத்த இலாபம் கீ/கொ | 8,600 |
| வாடகை | 600 | | |
| பொதுச் செலவுகள் | 500 | கழிவு | 1,800 |
| வட்டம் | 50 | | |
| வெளி ஏற்றிச் செல் செலவு | 150 | | |
| முதல் கணக்கு-<br>—நிகர இலாபம் | 6,700 | | |
| | 10,400 | | 10,400 |

**குறிப்பு :** இலாப - நட்டக் கணக்கைப் படம்பிடித்துக் காட்டும் வாய்ப்பாடு பின்வருமாறு:

மறைமுகச் செலவுகள் + நிகர இலாபம் } = மொத்த இலாபம் + சில்லறை வருமானங்கள்.

**எடுத்துக்காட்டு 7**

*ச. குமார் என்னும் வியாபாரி தரும், 1-1-1973 முதல் 31-12-1973 ஈறான காலப்பகுதிக்குரிய செய்திகளாவன :*

| | ரூ. |
|---|---|
| கொள்முதல் | 2,200 |
| வாங்கிய சரக்கு மீதான சத்தம் | 150 |
| உள் ஏற்றிச்செல் செலவு | 40 |
| கூலி | 60 |
| தொடக்கச் சரக்கிருப்பு | 800 |
| விற்பனை | 4,500 |
| மொத்த இலாபம் | 4,100 |
| உள் திருப்பம் | 250 |
| வெளித் திருப்பம் | 100 |

*அவர் இறுதிச் சரக்கிருப்பை மதிப்பிட்ட பட்டியலைத் தவறவிட்டுவிட்டதால் அவரது இறுதிச் சரக்கிருப்பு மதிப்பைக் கணக்கிடுமாறு உம்மை வேண்டுகிறார். அவருக்கு உதவுக.*

**விடை:**

*வியாபாரக் கணக்கு பற்றிய உமது அறிவைப் பயன்படுத்துவதன் மூலம் நீவிர் அவருக்கு உதவலாம். கொடுக்கப்பட்டுள்ள செய்திகளைப் பயன்படுத்தி நாம் வியாபாரக் கணக்கு தயாரித்து அதை இருப்புக் கட்டினால் இறுதிச் சரக்கிருப்பின் மதிப்பை அறியலாம்.*

31-12-1973ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய
ச. குமார் என்பவரது வியாபாரக் கணக்கு.

| பற்று | ரூ. | | வரவு ரூ. |
|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு | 800 | விற்பனை 4,500<br>கழிக்க:<br>உள்திருப்பம் 250 | 4,250 |
| கொள்முதல் 2,200<br>கழிக்க:<br>வெளித்திருப்பம் 100 | 2100 | இறுதிச் சரக்கிருப்பு (சமன்செய் தொகை) | 3,000 |
| கூலி | 60 | | |
| கொள்முதல் மீதான சத்தம் | 150 | | |
| உள்ஏற்றிச்செல்ல செலவு | 40 | | |
| மொத்த இலாபம் கீ/இ | 4,100 | | |
| | 7,250 | | 7,250 |

ஆக, ச. குமார் என்பவரது இறுதிச் சரக்கிருப்பின் மதிப்பு ரூ. 3,000.

**வியாபாரக் கணக்கிற்கும் இலாப-நட்டக் கணக்கிற்கும் உள்ள வேறுபாடுகள்.**

வியாபாரக் கணக்கும் இலாப-நட்டக் கணக்கும் ஒரே கணக்கின் இரு பிரிவுகளேயாகும். இவை இரண்டும் ஆண்டு தோறும் இலாப-நட்டத்தைக் கணக்கிட உதவும் பெயரளவுக் கணக்குகள் அனைத்தையும் கொண்டுள்ள ஒரே தொகுப்பாகும். இத் தொகுப்பின் முதல் பிரிவாக வியாபாரக் கணக்கும், இரண்டாம் பிரிவாக இலாப-நட்டக் கணக்கும் அமைந்துள்ளன.

வியாபாரக் கணக்கு அந்த ஆண்டு விற்ற சரக்குகளின் அடக்கத்தையும், விற்பனைத் தொகையையும் தொடர்பு படுத்திக் காட்டி, அவற்றின் வேறுபாட்டுத் தொகையான மொத்த இலாபம் அல்லது மொத்த நட்டத்தை வெளிக் கொணர்கிறது.

மாறாக, இலாப-நட்டக் கணக்கு மொத்த இலாபம் அல்லது மொத்த நட்டத்தைத் தொடக்கமாகக் கொண்டு, வியாபாரத்தினூடே ஈட்டிய பல்வகைச் சில்லறை வருமானங் களை ஒருபுறமும், விற்பனை கருதிச் செய்யப்பட்ட செலவு களான விற்பனை-வழங்கற் செலவுகள், மேலாண்மைச் செலவுகள், பேணுகைச் செலவுகள், நிதியச் செலவுகள் ஆகிய வற்றை மறுபுறமும் ஒப்பிட்டுக் காட்டி, அந்த ஆண்டு இறுதியாக வெளிப்படும் நிகர இலாபம் அல்லது நிகர நட்டத்தை முகிழ்விக்கிறது. நிகர இலாபம் அத் தொழிலில் ஈடுபடுத்தப்பட்டுள்ள முதலை அதிகப்படுத்துகிறது. மாறாக நிகர நட்டத்தினால் அம் முதல் குறைகிறது

**வேறு சில செய்திகள்**

ஒரு தொழில் நிலையத்தில் ஆண்டுதோறும் இறுதிக் கணக்குகள் தயாரிக்கப்படுகின்றன. அப்போது சிறப்பாகக் கவனம் செலுத்தவேண்டிய இரு இனங்களாவன:

(i) எடுப்புகள்

(ii) வருமான வரி.

(i) **எடுப்புகள் (Drawings)**: வியாபார நிலையத்தின் உரிமையாளர் தொழில் தேவைகளுக்காக எவ்வாறு அவ்வப் பொழுது முதல் இடுகிறாரோ அதுபோலவே தமது சொந்தத் தேவைகளுக்காகத் தொழில் நிலையத்திலிருந்து அவ்வப் பொழுது பணமோ சரக்குகளோ எடுத்துக் கொள்வார். அவர் திரும்ப எடுத்துக்கொள்ளும் பணமும் சரக்குகளின் அடக்கமும் முறையாக அவரது எடுப்புக் கணக்கில் பற்று வைக்கப்படும். அதுபோலவே அவர் தொழில் நிலையத்தின் மகிழ்வுந்தைத் (Car) தமது சொந்தக் காரியங்களுக்குப் பயன்படுத்தி னாலும் அதற்குரிய தொகை அவரது எடுப்புக் கணக்கில் பற்று வைக்கப்படும். ஆக, எடுப்புக் கணக்கு பற்றிருப்பு காட்டி நிற்கும். இது அவரது தனிப்பட்ட செலவேயன்றி தொழில் நிலையத்தின் செலவு அல்ல. எனவே இதை இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்லக்கூடாது; மாறாக, நாம்

சற்று பின்னர்க் காணவிருக்கும் இருப்பு நிலைக் குறிப்பிற்கு எடுத்துச் சென்று அங்கு முதல் கணக்கிலிருந்து கழித்துக் காண்பிக்கவேண்டும்.

(ii) **வருமான வரி :** தனி வாணிக நிலையங்கள் செலுத்தும் வருமான வரி அவற்றின் உரிமையாளர்களது சொந்தச செலவாகவே கருதப்படும். இந்த நிலையங்களின் இருப்பாய்வில் 'வருமான வரி' எனும் இனம்தோன்றினால் அதை அவற்றின் இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்லக்கூடாது, மாறாக, அதை (வருமான வரியை) உரிமையாளர்களது முதல் கணக்கில் பற்று வைக்க வேண்டும். அவற்றின் இருப்பு நிலைக் குறிப்பில் உரிமையாளர்களது முதலில் இருந்து கழித்துக் காண்பிக்கவேண்டும்.

எடுப்புகள், வருமான வரி ஆகிய இரு இனங்களை முதல் கணக்கில் பற்று வைப்பதற்குரிய பதிவு பின் வருமாறு:

| | | | ரூ. | ரூ. |
|---|---|---|---|---|
| | முதல் கணக்கு பற்று | | .......... | |
| | எடுப்புக் கணக்கு | | | .......... |
| | வருமான வரிக் க/கு | | | .......... |
| | (எடுப்புகள், வருமான வரி இவற்றை முதல் கணக்கிற்கு மாற்றுவது குறித்த பதிவு) | | | |

**எடுத்துக்காட்டு 8**

பின் வரும் இருப்புகள் ச. ராஜ் என்பவரது ஏடுகளிலிருந்து 1973 டிசம்பர் 31ஆம் நாளன்று எடுக்கப் பட்டவை. இவற்றிலிருந்து அவரது வியாபார, இலாப-நட்டக் கணக்கு தயாரிக்க :

இருப்பாய்வு (31-12-1973 நாளன்றையது)

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு | 10,600 | வெளித் திருப்பம் | 150 |
| கூலியும் சம்பளமும் | 2,200 | விற்பனை | 25,200 |
| ஏற்றிச்செல் செலவு | 200 | பெற்ற வட்டம் | 400 |
| கொள்முதல் மீதான கழிவு | 300 | முதல் | 7,000 |
| கொள்முதல் | 12,000 | கடனீந்தோர் | 830 |
| உள் திருப்பம் | 440 | கடன் | 1,400 |
| வியாபாரச் செலவுகள் | 580 | | |
| வாடகை | 200 | | |
| பொறி வகை | 2,600 | | |
| பொறிக்குப் பழுது பார்ப்பு | 460 | | |
| கைவச ரொக்கம் | 200 | | |
| வங்கிவச ரொக்கம் | 1,000 | | |
| கடனாளிகள் | 3,000 | | |
| வருமான வரி | 500 | | |
| எடுப்புகள் | 700 | | |
| ரூ. | 34,980 | ரூ. | 34,980 |

31-12-1973 அன்று விற்காமலுள்ள சரக்கிருப்பு ரூ. 3,000.

**விடை :**

31-12-1973ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கு.

| பற்று | ரூ. | வரவு | ரூ. |
|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு | 10,600 | விற்பனை 25,200 | |
| கொள்முதல் 12,000 | | கழிக்க : உள் திருப்பம் 440 | 24,760 |
| கழிக்க: வெளித் திருப்பம் 150 | 11,850 | இறுதிச் சரக்கிருப்பு | 3,000 |
| கூலியும் சம்பளமும்* | 2,200 | | |
| ஏற்றிச்செல் செலவு | 200 | | |
| கொள்முதல் மீதான கழிவு | 300 | | |
| இலாப-நட்டக் கணக்கிற்கு — மொத்த இலாபம் கீ/இ | 2,610 | | |
| ரூ. | 27,760 | ரூ. | 27,760 |
| வியாபாரச் செலவு** | 580 | வியாபாரக் கணக்கு— மொத்த இலாபம் கீ/கொ | 2,610 |
| வாடகை | 200 | | |
| பொறிப் பழுது பார்ப்பு | 460 | பெற்ற வட்டம் | 400 |
| முதல் கணக்கு — நிகர இலாபம் | 1,770 | | |
| ரூ. | 3,010 | ரூ. | 3,010 |

* கூலி (Wages) என்பது பொதுவாக உற்பத்தி சார்ந்தது; எனவே அது வியாபாரக் கணக்கில் தோன்றத்தக்க நேரடிச் செலவாகும். மாறாக, சம்பளம் (Salaries) என்பது உற்பத்திசாரா மறைமுகச் செலவாகும்; எனவே அது பெரும்பாலும் இலாப - நட்டக் கணக்கிலேயே தோன்றத்தக்கது. சில நேரங்களில், உற்பத்திசாராக்

கூலியும் உற்பத்திசார்ந்த சம்பளமும் இருப்பதுண்டு. கூலியும் சம்பளமும் (Wages and Salaries) எனக் கொடுக்கப்பட்டிருந்தால் அவை இரண்டும் உற்பத்தி சார்ந்தவை என எடுத்துக்கொண்டு, அந்த இனத்தை வியாபாரக் கணக்கில் காண்பிக்கவேண்டும். மாறாக, சம்பளமும் கூலியும் (Salaries and Wages) என்ற இனம் கொடுக்கப்பட்டிருந்தால், அதிலடங்கியுள்ள சம்பளமும் கூலியும் உற்பத்தி சாராதவை ; எனவே அந்த இனத்தை இலாபநட்டக் கணக்கிற்கே எடுத்துச் செல்ல வேண்டும்.

** அலுவலகச் செலவுகள் (Office Expenses), வியாபாரச் செலவுகள் என்ற இரண்டு இனங்களும் இருப்பாய்வில் தோன்றினால், அலுவலகச் செலவுகளை இலாப - நட்டக் கணக்கிற்கும், வியாபாரச் செலவுகளை வியாபாரக் கணக்கிற்கும் எடுத்துச்செல்ல வேண்டும். மாறாக, இந்த எடுத்துக்காட்டில் இருப்பது போன்று, வியாபாரச் செலவுகள் மட்டும் இருப்பாய்வில் தோன்றினால், அந்த இனத்தை இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச்செல்ல வேண்டும்.

மேலேயுள்ள எடுத்துக்காட்டிற்குரிய விடை இன்னும் முற்றுப்பெறவில்லை. அதை இப்பொழுது பார்ப்போம்,

இலாப-நட்டக் கணக்கைத் தயாரித்தபின், நிகர இலாபத்தை முதல் கணக்கில் வரவுவைக்க வேண்டும். அது போலவே, எடுப்புகள், வருமான வரி ஆகிய இரண்டையும் முதல் கணக்கில் பற்றுவைக்க வேண்டும். அவற்றிற்குரிய பதிவுகளாவன :

| தேதி | விவரம் | பே.ப. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | இலாப - நட்டக் க/கு பற்று | | 1,770 | |
| | முதல் க/கு | | | 1,770 |
| | (நிகர இலாபத்தை முதல் கணக்கிற்கு மாற்றுவது குறித்த பதிவு) | | | |
| | முதல் க/கு பற்று | | 1200 | |
| | எடுப்புகள் க/கு | | | 700 |
| | வருமான வரிக் க/கு | | | 500 |
| | (எடுப்புகள், வருமான வரி இவற்றை முதல் கணக்கிற்கு மாற்றுவது குறித்த பதிவு) | | | |

## இருப்புநிலைக் குறிப்பு (Balance Sheet)

**வரைவிலக்கணம்:** இருப்பு நிலைக் குறிப்பு இறுதிக் கணக்குகளின் இரண்டாம் பகுதியாக அமைகிறது. முதல் பகுதியாகிய வியாபார, இலாப - நட்டக் கணக்குகள் தயாரித்து முடிக்கப்பட்டவுடன் இது தயாரிக்கப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட நாளன்று ஒரு நிறுவனத்தின் நிதி நிலைமை எவ்வாறு இருக்கிறது என்பதைக் காட்டிடுவதே **இருப்பு நிலைக் குறிப்பு** ஆகும்; அன்று அந் நிறுவனத்திலுள்ள சொத்துகள், பொறுப்புகள் பற்றிய விவரங்களைத் தருவதன் மூலம் அது அந் நிறுவனத்தின் நிதி நிலைமையைக் காண்பிக்கிறது. பொறுப்புகளைக் காட்டிலும் சொத்துக்கள் எவ்வளவு மிகுதியாக இருக்கின்றனவோ அந்த எச்சமே முதல் ஆகும். ஒரு நிறுவ்னத்தின் திடமான நிதி நிலைமையை எடுத்துக் காட்டும் அளவுகோலாக இந்த எச்சம் விளங்குகிறது. இருப்புநிலைக் குறிப்புக்கு இவ்வாறு வரைவிலக்கணம் வடிக்கலாம்:

ஒரு குறிப்பிட்ட நாளன்று ஒரு தொழில் நிலையத்தின் சொத்துகள், பொறுப்புகள் ஆகியவற்றைத் தொகுத்துக் காட்டி அதன் மூலம் அந் நிலையத்தின் அன்றைய நிதி நிலைமையை அறிய உதவிடுவதே இருப்பு நிலைக் குறிப்பாம்.

இருப்புநிலைக் குறிப்பின் இடது மருங்கில் (பகுதியில்) பொறுப்புகளும் முதலும் காண்பிக்கப்படுகின்றது; வலது மருங்கில் சொத்துகள் காட்டப்படுகின்றன. இந்த இரு பகுதிகளின் மொத்தங்களும் எப்பொழுதும் சமமாகவே இருத்தல் வேண்டும்; அவ்வாறு சமமாக இன்றேல் எங்கோ தவறு அல்லது தவறுகள் ஏற்பட்டிருக்கின்றன என்பது பொருள்.

## இருப்புநிலைக் குறிப்பின் மாதிரிப் படிவம்

(நிறுவனப் பெயர்)................ நிறுவனத்தின்..........
நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பு.

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| பற்பல கடனீந்தோர் (கடனாளர்) | ........ | கைவச ரொக்கம் | ........ |
| செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுகள் | ........ | வங்கிவச ரொக்கம் | ........ |
| வங்கி மேல் வரைப் பற்று | ........ | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | ........ |
| கடன்கள் | ........ | பற்பல கடனாளிகள் | ........ |
| அடைமானம் (அதாவது அடைமானக் கடன்) | ........ | (இறுதி) வாணிகச் சரக்கிருப்பு | ........ |
| காப்பு நிதி | ........ | முதலீடுகள் | ........ |
| முதல் ...... | ........ | அறைகலனும் பொருத்துகளும் | ........ |
| கூட்டுக: | | அலுவலகச் சாதனங்கள் | ........ |
| நிகர இலாபம்...... | | விடு கருவிகள் | ........ |
| கழிக்க : | | பொறியும் இயந்திரமும் | ........ |
| எடுப்புகள் ...... | | குதிரைகளும் வண்டிகளும் | ........ |
| வருமான வரி.... | | நிலமும் கட்டிடமும் | ........ |
| | | சொந்த அல்லது குத்தகை நிலம் | ........ |
| | | தொழில் வளாகம் (Business Premises) | ........ |
| | | புனைவும் வாணிகக் குறிப்புகளும் | ........ |
| | | வாணிக நற்பெயர் | ........ |
| மொத்தம் ரூ. | ........ | மொத்தம் ரூ. | ........ |

**இருப்புநிலைக் குறிப்பைச் சார்ந்த சமன்பாட்டு வாய்பாடு:**

சொத்துகள் — பொறுப்புகள் = முதல்

(அல்லது)

சொத்துகள் — முதல் = பொறுப்புகள்

## இருப்பு நிலைக் குறிப்பின் இயல்பு

(1) இருப்புநிலைக் குறிப்பு ஒரு காலப் பகுதியைத் தழுவியதாகத் தயாரிக்கப்படுவதில்லை. ஒரு குறிப்பிட்ட நாளில் அத்தொழில் நிறுவனத்தின் நிலைமை என்ன என்பதைக் காட்டுவதற்கே அது தயாரிக்கப்படுகிறது. எனவே அது காட்டும் செய்தி அந்த நாளுக்கு மட்டுமே பொருந்தும்; முந்தைய நாளுக்கோ பிந்தைய நாளுக்கோ அது பொருந்தாது. நிறுவனங்களின் முதலின் நிலைமை காலத்திற்குக் காலம் மாறிக்கொண்டேயிருப்பது அறியற்பாலது.

(2) இருப்பு நிலைக் குறிப்பு ஒரு பேரேட்டுக் கணக்கு அன்று. அது ஒரு நிறுவனத்தின் சொத்துகள், பொறுப்புகள், முதல் ஆகியவற்றைக் காட்டிடும் பட்டியலே ஆகும்.

(3) ஒரு நிறுவனத்தின் நிதி நிலையை வெளிப்படுத்துவதே இருப்புநிலைக் குறிப்பின் நோக்கமாகும். அந் நிறுவனத்தின் வியாபார, இலாப - நட்டக் கணக்கு ஒரு குறிப்பிட்ட காலப்பகுதியில் அது ஈட்டிய இலாபம் அல்லது அதற்கேற்பட்ட நட்டம் எவ்வளவு என்பதைக் காட்டுவதோடு நின்று விடுகிறது. ஆனால் நமக்கு அந் நிறுவனம் பற்றி மேலும் செய்திகள் தேவைப்படுகின்றன. அந் நிறுவனத்தின் நிதி வகைப் பெறுமானம் (Financial Worth) எவ்வளவு? இந்த வினாவுக்கு விடை காண நாம் அந் நிறுவனத்தின்

(i) சொத்துகளின் தன்மை, அவற்றின் மதிப்பு

(ii) பொறுப்புகளின் தன்மை அவற்றின் அளவு

(iii) முதல் தொகை

ஆகிய செய்திகளை அறிய வேண்டும். இச் செய்திகளை விவரமாகக் காட்டுவதே இருப்புநிலைக் குறிப்பின் பணியாகும்.

## சொத்துகள் (Assets)

ஒரு தொழில் நிலையத்திற்குச் சொந்தமாகவுள்ள பண மதிப்புடைய பொருள்கள் அனைத்தும் அதன் சொத்துகளாம்.

## சொத்து வகைகள்

**நிலைச் சொத்துகள்** (Fixed Assets) : இவை நீண்டு உழைக்கும் சொத்துகள். இவை வியாபாரச் சரக்குகளை உற்பத்தி செய்வதற்கோ விற்பதற்கோ பயன் படுத்தப் படுபவை. இவற்றின் இயல்புகளாவன:

(அ) நீண்டு உழைக்குந் தன்மை;

(ஆ) தொழிலில் திரும்பத் திரும்பப் பயன் படுத்தப் படும் தன்மை.

நிலம், கட்டிடம், பொறி, இயந்திரம், லாரிகள், வாணிக நற்பெயர், புனைஉரிமை (Patents) பதிப்புரிமை (Copyright) ஆகியவற்றை இவற்றிற்கு எடுத்துக்காட்டுகளாகக் கூறலாம்.

இவற்றில் முதல் ஐந்து சொத்துகள் 'புலனாகும் சொத்துகள்' (Tangible Assets) எனவும், கடைசி மூன்று சொத்துகள் 'புலனாகாச் சொத்துகள்' (Intangible Assets) எனவும் பாகுபடுத்தப்படும். தொட்டோ பார்த்தோ அறியக் கூடியவை புலனாகும் சொத்துகளாம்; ஏனையவை புலனாகாச் சொத்துகள் எனப்படும்.

**மிதக்கும் (மாறும்) சொத்துகள்** (Floating Assets): இவற்றிற்கு நடப்புச் சொத்துகள் (Current Assets) என்றும் பெயர். இவற்றின் இயல்புகளாவன:

(அ) இவை வாங்கி வாங்கி விற்கப்படுபவை;

(ஆ) இவை உற்பத்திக்குப் பயன் படுத்தப்படுவதாலோ விற்கப்படுவதாலோ உருமாறத் தக்கவை;

(இ) இவை ரொக்கமாக மாறத்தக்கவை.

கைவச ரொக்கம், வங்கிவச ரொக்கம், ஏட்டுக் கடன், சரக்கிருப்பு, முன்கூட்டிச் செலுத்திய செலவு ஆகியவற்றை மிதக்கும் சொத்துகளுக்கு எடுத்துக்காட்டுகளாகக் கூறலாம்.

**கற்பனைச் சொத்துகள்** (Fictitious Assets) கற்பனைச் சொத்துகள் என்பவை உண்மையாகவே மதிப்பு ஏதும் இல்லாதவை. அவை சொத்துகளே அல்ல. ஆனால் இருப்பு நிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் தோன்றுகின்றன. எனவே அவற்றை மதிப்பு ஏதும் இல்லாத கற்பனைச் சொத்துகள் என அழைக்கிறோம்.

நிறுமங்களை உருவாக்குவதற்குச் செய்யப்படும் 'தொடக்கச் செலவுகளை' (Preliminary Expenses) கற்பனைச் சொத்திற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

இச் சொத்துகளின் கணக்குகள் பேரேட்டில் பற்றிருப்பு காட்டி நிற்பதால் அவை இருப்பு நிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் இடம்பெற்று 'சொத்து' எனும் அடைமொழியைப் பெறுகின்றன. உண்மையில் அவை போக்கெழுதப்பட்டுவரும் செலவுகள் அல்லது இழப்புகளில் இன்னும், போக்கெழுதாமல் எஞ்சியுள்ள பகுதியே ஆகும்.

## பொறுப்புகள்

தொழில் நிறுவனங்கள் பிறருக்குத் தரவேண்டியவை அனைத்தும் அவற்றின் பொறுப்புகளாம். அவை அவற்றின் உரிமையாளர்களுக்குச் செலுத்த வேண்டியதாக உள்ள பணமும்-அதாவது அவற்றின் முதல் கணக்கு காட்டிடும் இருப்புத் தொகையும் - அவற்றின் பொறுப்புகளில் அடங்கும். இன்னும் தெளிவாகக் கூறவேண்டுமாயின் ஒரு தொழில் நிலையத்தின் வியாபார, இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்லப்படாமல் வரவு இருப்புக் காட்டி நிற்கும் கணக்குகள் அனைத்தும் அதன் பொறுப்புகளாகும்.

## பொறுப்புகளின் வகைகள்

### நெடுங்காலப் பொறுப்புகள் (Long-term Liabilities)

நெடுங்காலப் பொறுப்புகளின் இயல்பு அவை நீண்ட காலத்திற்குப் பிறகு செலுத்தத் தக்கவையாக இருப்பதுவே யாம். நீள் தவணைக் கடன், முதல் ஆகியவற்றை நெடுங் காலப் பொறுப்புகளுக்கு மேற்கோளாகக் கூறலாம்.

### நடப்புப் பொறுப்புகள் (Current Liabilities)

நடப்புப் பொறுப்புகள் என்பன அடுத்த ஓராண்டுக்குள் செலுத்த வேண்டியதாக இருப்பவை. வாணிகக் கடனீந்தோர் (அதாவது நமக்குக் கடன் அடிப்படையில் சரக்கு விற்று முற்றும் பணம் செலுத்தப்படாமல் இருப்பவர்கள்), செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுகள், குறுந் தவணைக் கடன்கள் ஆகியவற்றை இவற்றிற்கு எடுத்துக் காட்டுகளாகக் கூறலாம்.

**நிகழ்வடைவுப் பொறுப்புகள் (Contingent Liabilities)**

நிகழ்வடைவுப் பொறுப்புகள் இரு இயல்புகளைப் பெற்றிருத்தல் வேண்டும்:

(அ) அவை தற்பொழுது உண்மையாகவே பொறுப்புகளாக இல்லாமல் இருத்தல்வேண்டும்;

(ஆ) குறிப்பிட்ட நிகழ்ச்சிகள் நிகழுதலாலோ நிகழாமல் இருப்பதாலோ எதிர்காலத்தில் பொறுப்புகளாக உருவாக்கத்தக்க வாய்ப்பை அவை பெற்றிருத்தல் வேண்டும். இன்னும் தீர்ப்பளிக்கப் படாமலுள்ள வழக்கினின்றும் எழத்தக்க பொறுப்பை இங்கு மேற்கோளாகக் கூறலாம். இத்தகைய பொறுப்புகள் தனி வாணிக நிலையங்கள், கூட்டாண்மை நிறுவனங்கள் ஆகியவற்றின் இருப்புநிலைக் குறிப்பில் காட்டப்படுவதில்லை.

**இருப்புநிலைக் குறிப்பில் பொறுப்புகள், சொத்துகள் ஆகியவற்றை வரிசைப்படுத்தும் விதங்கள்**

இருப்புநிலைக் குறிப்பில் சொத்துகளும் பொறுப்புகளும் ஒரு குறிப்பிட்ட வரிசையில் காண்பிக்கப்படவேண்டும். அவற்றை இரு வேறு விதமாக வரிசைப்படுத்தலாம்.

**சொத்துகளை வரிசைப்படுத்தும் விதங்கள்**

| எளிவரல் தன்மை அடிப்படையில் வரிசைப்படுத்துதல் | நிலையான தன்மை அடிப்படையில் வரிசைப்படுத்துதல் |
|---|---|
| கைவச ரொக்கம் | வாணிக நற்பெயர் |
| வங்கிவச ரொக்கம் | கட்டடம் |
| சந்தையிடத்தகு பிணையங்கள் | அறைகலன் (Furniture) |
| பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | பொறிவகையும் இயந்திரமும் |
| பற்பல கடனாளிகள் | சரக்கிருப்பு |
| சரக்கிருப்பு | பற்பல கடனாளிகள் |
| பொறிவகையும் இயந்திரமும் | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகள் |
| அறைகலன் | சந்தையிடத்தகு பிணையங்கள் (Marketable Securities) |
| கட்டடம் | வங்கிவச ரொக்கம் |
| வாணிக நற்பெயர் | கைவச ரொக்கம் |

## பொறுப்புகளை வரிசைப்படுத்தும் விதங்கள்

| | |
|---|---|
| தீர்க்கவேண்டிய விரைவு அடிப்படையில் வரிசைப் படுத்துதல். (அதாவது அவசரமாகத் தீர்க்க வேண்டிய பொறுப்புகளை முதலாவதாகவும், அவற்றைத் தொடர்ந்து நிலையான பொறுப்புகளையும் காண்பிக்கும் முறை) | நிலைத்த தன்மை அடிப்படையில் வரிசைப்படுத்துதல் (அதாவது இறுதியாகத் தீர்க்க வேண்டிய பொறுப்புகளை முதலாவதாகவும், விரைந்து தீர்க்க வேண்டிய பொறுப்புகளை அடுத்தபடியாகவும் காண்பிக்கும் முறை) |
| செலுத்தற்குரிய மாற்று சீட்டுகள் | முதல் |
| வாணிகக் கடனீந்தோர் (கடனாளர்) | கடன்கள் |
| கடன்கள் | வாணிகக் கடனீந்தோர் |
| முதல் | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுகள் |

## இருப்பாய்வுக்கும் இருப்புநிலைக் குறிப்பிற்கும் உள்ள வேறுபாடுகள்

| இருப்பாய்வு (Trial Balance) | இருப்புநிலைக் குறிப்பு (Balance Sheet) |
|---|---|
| (1) இது பேரேட்டுக் கணக்குகள் அனைத்தின் இருப்புகளையும் கொண்ட பட்டியாகும். (இதில் இடம் பெறாத பேரேட்டுக் கணக்கு (இருப்புக் காட்டி நிற்கும் பேரேட்டுக் கணக்கு) எதுவும் இருக்கவியலாது. | இது சொத்துகள், பொறுப்புகளைக் காட்டிடும் குறிப்பாகும். இதில் ஆள்சார் கணக்குகள், மெய்க் கணக்குகள், (Real Account) மட்டுமே இடம் பெறும்: |
| (2) கணக்கேடுகளின் எண்சார் துல்லியத்தைச் (Arithmetical Accuracy) சோதிப்பதே இதன் நோக்கமாகும். | பார்த்த மாத்திரத்தில் தொழில் நிலையங்களின் நிதி நிலையைக் காட்டுவதே இதன் நோக்கமாகும். |

| இருப்பாய்வு (Trial Balance) | இருப்புநிலைக் குறிப்பு (Balance Sheet) |
|---|---|
| (3) விரும்பும் பொழுதெல்லாம் இதைத் தயாரிக்கலாம். பல நிறுவனங்களில் இது ஒவ்வொரு மாத இறுதியிலும் தயாரிக்கப்படுகிறது. | பொதுவாக இது வியாபாரப் பருவமாகிய ஆண்டு இறுதியில் மட்டுமே தயாரிக்கப்படுகிறது. |
| (4) பொதுவாக இது சரிக்கட்டுகள் எதுவும் செய்யப்படாமலேயே தயாரிக்கப்படுகிறது. | கொடுபட வேண்டியவை, முன்கூட்டிச் செலுத்தியவை போன்றவைகளுக்குத் தக்க சரிக்கட்டுகள் செய்த பின்னரே இது தயாரிக்கப்படுகிறது. தக்க சரிக்கட்டுகள் செய்யாமல் இதைத் தயாரிப்பது பயனற்றது. |
| (5) அப் பருவத்தில் அல்லது அந்த ஆண்டில் ஈட்டிய இலாபம் எவ்வளவு என்பதை இது காட்டிடுவதில்லை. இதில் தோன்றும் முதல் கணக்கு காட்டிடும் இருப்பு அந்த ஆண்டுக்குரிய இலாபம் சேராத இருப்பாகும். | இதில் தோன்றும் முதல் கணக்கில் காட்டப்படும் விவரங்களிலிருந்து அந்த ஆண்டு ஈட்டிய இலாபம் எவ்வளவு என்பதை அறியலாம். அந்த ஆண்டு ஈட்டிய இலாபம் சேர்ந்த மொத்த இருப்பை இதில் தோன்றும் முதல் கணக்கு காட்டி நிற்கிறது. |
| (6) இருப்பாய்வைத் தயாரித்துத்தான் ஆகவேண்டும் என்ற தேவையில்லை. இதைத் தயாரிக்காமலேயே இறுதிக் கணக்குகளைத் தயாரிக்க இயலும். | ஆண்டு துவக்கத்தில் தொடங்கிய கணக்குப் பதிவுச் செயல்பாட்டை முழுமைக்குக் கொண்டுவர இருப்பு நிலைக் குறிப்பைத் தயாரித்துத்தான் ஆக வேண்டும். |
| (7) இருப்பாய்வில் தொடக்கச் சரக்கிருப்பு தோன்றும். | இருப்புநிலைக் குறிப்பில் இறுதிச் சரக்கிருப்பு தோன்றும். |
| (8) இருப்பாய்விலுள்ள இரு பகுதிகளும் 'பற்று', 'வரவு' எனும் தலைப்பைக் கொண்டிருக்கின்றன. | இருப்புநிலைக் குறிப்பிலுள்ள இரு பகுதிகள் 'பொறுப்புகள்', 'சொத்துகள்' எனும் தலைப்பைக் கொண்டிருக்கின்றன. |

**எடுத்துக்காட்டு 9**

திரு. செல்வம் என்பவரது ஏடுகளிலிருந்து 1970 திசம்பர் 31 ஆம் நாளன்று எடுக்கப்பட்ட இருப்புகள் பின் வருமாறு: அவற்றைக் கொண்டு (i) இருப்பாய்வு (ii) 1970 திசம்பர் 31 ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கு (iii) அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைத் தயாரிக்க.

| | ரூ. |
|---|---|
| செல்வம்—முதல் கணக்கு .. .. | 15,000 |
| செல்வம்—எடுப்புக் கணக்கு .. .. | 3,000 |
| அறைகலனும் பொருத்துகளும் .. .. | 500 |
| தட்டச்சுகள் .. .. | 1,000 |
| சைக்கிள்கள் (மிதிவண்டிகள்) .. .. | 250 |
| பற்பல கடனாளிகள் .. .. | 15,000 |
| பற்பல கடனீந்தோர் .. .. | 13,500 |
| வாடகை .. .. | 2,400 |
| சம்பளம் .. .. | 3,600 |
| வாடிக்கையருக்கு அனுமதித்த வட்டம் .. | 425 |
| சரக்கிருப்பு (1-1-1970) .. .. | 15,000 |
| கொள்முதல் .. .. | 60,000 |
| விற்பனை .. .. | 80,000 |
| வெளித் திருப்பம் .. .. | 500 |
| உள் திருப்பம் .. .. | 1,000 |
| உள் ஏற்றிச்செல் செலவு .. .. | 750 |
| வெளி ஏற்றிச்செல் செலவு .. .. | 1,250 |
| உள்ளூர் வீதங்களும் வரியும் .. .. | 600 |
| கைவச ரொக்கம் .. .. | 2,425 |
| பொதுச் செலவுகள் .. .. | 1,800 |

31-12-1970 அன்று கைவசச் சரக்கிருப்பு ரூ. 11,000

விடை :

திரு. செல்வம் என்பவரது 31-12-1970 ஆம் நாளைய இருப்பாய்வு.

| பற்று | தொகை | வரவு | தொகை |
|---|---|---|---|
| செல்வம்— எடுப்புக் கணக்கு | 3,000 | செல்வம்—முதல் கணக்கு | 15,000 |
| அறைகலனும் பொருத்துகளும் | 500 | பற்பல கடனீந்தோர் | 13,500 |
| தட்டச்சுகள் | 1,000 | விற்பனை | 80,000 |
| சைக்கிள்கள் | 250 | வெளித் திருப்பம் | 500 |
| பற்பல கடனாளிகள் | 15,000 | | |
| வாடகை | 2,400 | | |
| சம்பளம் | 3,600 | | |
| வாடிக்கையருக்கு அனுமதித்த வட்டம் | 425 | | |
| பொதுச் செலவுகள் | 1,800 | | |
| சரக்கிருப்பு (1-1-1970) | 15,000 | | |
| கொள்முதல் | 60,000 | | |
| உள் திருப்பம் | 1,000 | | |
| உள் ஏற்றிச்செல் செலவு | 750 | | |
| வெளி ஏற்றிச் செல் செலவு | 1,250 | | |
| உள்ளூர்-வீதமும் வரிகளும் | 600 | | |
| கைவச ரொக்கம் | 2,425 | | |
| | 1,09,000 | | 1,09,000 |

**நினைவூட்டுக் குறிப்பு:** பற்றிருப்புகள் (அ) வியாபாரக் கணக்கின் பற்றுப் பகுதியிலோ (ஆ) இலாப - நட்டக்கணக்கின் பகுதியிலோ (இ) இருப்புநிலைக் குறிப்பின் சொத்துப் பகுதியிலோ தோன்றும் என்பதை நினைவிற்கொள்க.

வரவிருப்புகள் (அ) வியாபாரக் கணக்கின் வரவுப் பகுதியிலோ (ஆ) இலாப-நட்டக் கணக்கின் வரவுப் பகுதியிலோ (இ) இருப்பு நிலைக் குறிப்பின் 'பொறுப்புகள்' பகுதியிலோ இடம்பெறும் என்பதையும் கருத்திற் கொள்க.

திரு. செல்வம் என்பவரின்
31-12-1970ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய
வியாபார, இலாப-நட்டக் கணக்கு

| பற்று | தொகை ரூ. | வரவு | தொகை ரூ. |
|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு | 15,000 | விற்பனை 80,000<br>கழிக்க:<br>உள் திருப்பம் 1,000 | 79,000 |
| கொள் முதல் 60,000<br>கழிக்க:<br>வெளித் திருப்பம் 500 | 59,500 | இறுதிச் சரக் கிருப்பு | 11,000 |
| உள் ஏற்றிச் செல செலவு | 750 | | |
| இலாப-நட்டக் க/கு— (மொத்த இலாபம்) | 14,750 | | |
| | 90,000 | ரூ. | 90,000 |
| சம்பளம் | 3,600 | வியாபாரக் க/கு (மொத்த இலாபம்) | 14,750 |
| வாடகை | 2,400 | | |
| வாடிக்கையருக்கு அனுமதித்த வட்டம் | 425 | | |
| பொதுச் செலவுகள் கள் | 1,800 | | |
| வெளி ஏற்றிச் செல் செலவு | 1,250 | | |
| உள்ளூர் வீதங் களும் வரிகளும் | 600 | | |
| முதல் க/கு— நிகர இலாபம் | 4,675 | | |
| ரூ. | 14,750 | ரூ. | 14,750 |

திரு. செல்வம் என்பவரின்
31-12-1970ஆம் நாளைய இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | | தொகை ரூ. | சொத்துகள் | தொகை ரூ. |
|---|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | | 13,500 | கைவச ரொக்கம் | 2,425 |
| | | | பற்பல கடனாளிகள் | 15,000 |
| முதல் | 15,000 | | சரக்கிருப்பு | 11,000 |
| கூட்டுக: நிகர இலாபம் | 4,675 | | | |
| | 19,675 | | அறைகலனும் பொருத்துகளும் | 500 |
| கழிக்க: எடுப்புகள் | 3,000 | | அலுவலகச் சாதனங்கள்—தட்டச்சுகள் | 1,000 |
| | | 16,675 | | |
| | | | சைக்கிள்கள் | 250 |
| ரூ. | | 30,175 | ரூ. | 30,175 |

**குறிப்பு :** தட்டச்சுகள் அலுவலகச் சாதனங்களின் ஒரு பகுதியேயாகும்.

## வினாக்கள்

(1) மொத்த இலாபம் என்றால் என்ன? அது எவ்வாறு கணக்கிடப்படுகிறது?

(2) 'நேரடிச் செலவுகள்' என்பவற்றின் பொருளை விளக்குக. அவற்றிற்கு மேற்கோள்கள் தருக.

(3) 'வெளித் திருப்பம்', 'உள் திருப்பம்' ஆகிய இரண்டும் வியாபாரக் கணக்கில் எவ்வாறு கையாளப்படுகின்றன?

(4) 'தொடக்கச் சரக்கிருப்பு', 'இறுதிச் சரக்கிருப்பு' ஆகிய சொற்றொடர்களை விளக்குக. இறுதிச் சரக்கிருப்பு எவ்வாறு மதிப்பிடப்பட்டு கணக்கேடுகளில் கையாளப்படுகிறது?

(5) பின்வரும் இனங்கள் இறுதிக் கணக்குகளில் எவ்வாறு கையாளப்படுகின்றன:

(அ) உற்பத்திசாராக் கூலி.

(ஆ) உற்பத்திசார் கூலி.

(இ) வியாபாரச் செலவுகள்.

(ஈ) கட்டுமச் செலவுகள்.

(6) இறுதிக் கணக்குகள் தயாரிப்பதன் நோக்கங்கள் யாவை?

(7) வியாபாரக் கணக்கிற்கும் இலாப-நட்டக் கணக்கிற்குமுள்ள வேறுபாடுகளைத் தெளிவு படுத்துக.

(8) மொத்த இலாபம், நிகர இலாபம் இவற்றிற்கிடையே உள்ள வேறுபாடுகள் யாவை?

(9) இலாப-நட்டக் கணக்கின் முக்கியத்துவத்தை விவாதித்து, 'மொத்த இலாபம்', 'நிகர இலாபம்' எனும் சொற்றொடர்களை விளக்குக.

(10) இருப்புநிலைக் குறிப்பு என்றால் என்ன? அது எதற்காகத் தயாரிக்கப்படுகிறது.

(11) இருப்பாய்வு இருப்புநிலைக் குறிப்பிலிருந்து எந்தெந்த அம்சங்களில் வேறுபடுகிறது? இவை இரண்டும் ஒரு வாணிகருக்கு எவ்வாறு பயன்படுகின்றன?

(12) 'சொத்து' எனும் சொல்லுக்கு வரைவிலக்கணம் தருக. சொத்துகள் பொதுவாக எவ்வாறு பாகுபடுத்தப் படுகின்றன? ஒவ்வொரு வகைச் சொத்திற்கும் இரு மேற்கோள்கள் தருக.

(13) 'சொத்துகள்', 'பொறுப்புகள்' எனும் சொற்களை விளக்குக.

(14) சொத்துகள், பொறுப்புகளை இருப்புநிலைக் குறிப்பில் எந்த வரிசையில் காண்பிக்க வேண்டும்?

(15) 31-12-1972 அன்று எடுக்கப்பட்ட பின்வரும் இருப்புகளைக் கொண்டு வியாபாரக் கணக்கு தயாரிக்க:

| | | ரூ. |
|---|---|---|
| கொள்முதல் | .. | 4,800 |
| கூலி | .. | 400 |
| தொடக்கச் சரக்கிருப்பு | .. | 1,200 |
| வெளித்திருப்பம் | .. | 200 |
| விற்பனை | .. | 9,300 |
| உள் ஏற்றிச் செல் செலவு | .. | 250 |
| உள் திருப்பம் | .. | 300 |

31-12-1972 அன்று இருந்த சரக்கிருப்பு ரூ. 1,500 என மதிப்பிடப்பட்டது.

(விடை: மொத்த இலாபம் ரூ. 4,050)

(16) கீழே கொடுக்கப்பட்டுள்ள செய்திகளிலிருந்து வியாபாரக் கணக்கு தயாரிக்க:

| | | ரூ. |
|---|---|---|
| 1-1-1973 அன்று சரக்கிருப்பு | .. | 3,600 |
| 31-12-1973 அன்று சரக்கிருப்பு | .. | 4,800 |
| ரொக்கக் கொள்முதல் | .. | 12,000 |
| கடன் கொள்முதல் | .. | 9,000 |
| ரொக்க விற்பனை | .. | 22,000 |
| கடன் விற்பனை | .. | 10,000 |
| கொள்முதல் மீதான ஏற்றிச் செல் செலவு | .. | 500 |
| விற்பனை மீதான ஏற்றிச்செல் செலவு | .. | 400 |
| வாடகை (ஆலை) | .. | 600 |
| வாடகை (அலுவலகம்) | .. | 300 |
| விற்பனைத் திருப்பம் | .. | 600 |
| கொள்முதல் திருப்பம் | .. | 800 |
| பொதுச் செலவுகள் | .. | 500 |
| அனுமதித்த வட்டம் | .. | 300 |

(விடை: மொத்த இலாபம் ரூ. 11,300)

(17) 1970 திசம்பர் 31 அன்றிருந்த சரக்கிருப்பு ரூ. 4500 எனக் கொண்டு, பின்வரும் இருப்பாய்விலிருந்து 31-12-1970-ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க:

இருப்பாய்வு

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| கொள்முதலும் விற்பனையும் | .. | 13,500 | 26,000 |
| வாணிகச் செலவுகள் | .. | 400 | |
| அலுவலகச் செலவுகள் | .. | 450 | |
| சம்பளமும் கூலியும் | .. | 35,000 | |
| வெப்பப் படுத்துகையும் ஒளிப்படுத்துகையும் | .. | 550 | |
| ஏற்றிச்செல் செலவு | .. | 300 | |
| திருப்பம் | .. | 600 | 500 |
| அனுமதித்த வட்டம் | .. | 200 | |
| பெற்ற வட்டம் | .. | | 300 |
| வங்கிக் கட்டணங்களும் கழிவும் | .. | 100 | |
| பெற்ற வட்டி | .. | | 150 |
| சரக்கிருப்பு | .. | 6,000 | |
| வங்கிவச ரொக்கம் | .. | 12,000 | |
| முதல் | .. | | 10,650 |
| | | 37,600 | 37,600 |

(விடை: மொத்த இலாபம் ரூ. 9,250;
நிகர இலாபம் ரூ. 5,850;
இருப்பு நிலைக் குறிப்பு
மொத்தத் தொகை ரூ. 16,500).

**உதவிக் குறிப்பு** (Hint) : வாணிகச் செலவுகளை வியாபாரக் கணக்கிற்கு எடுத்துச்செல்க; சம்பளமும் கூலியும் எனும் இனத்தை இலாப-நட்டக் கணக்கிற்குக் கொண்டுசெல்க.

(18) 31-12-1773ஆம் நாளன்றைய ச. ஆனந்த் என்பவரின் பின்வரும் இருப்பாய்விலிருந்து 31-12-1973 ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கைத் தயாரிக்க:

31-12-73 ஆம் நாளன்றைய சரக்கிருப்பு ரூ. 15,000

| பற்று இருப்புகள் | ரூ. | வரவு இருப்புகள் | ரூ. |
|---|---|---|---|
| சரக்கிருப்பு | 45,000 | விற்பனை | 4,20,000 |
| கொள்முதல் | 2,25,000 | முதல் .. | 92,950 |
| பொறியும் எந்திரமும் | 75,000 | | |
| வாணிகக் கட்டணங்கள் | 10,000 | | |
| உள் ஏற்றிச்செல் செலவு | 2,500 | | |
| வெளி ஏற்றிச்செல் செலவு | 1,500 | | |
| ஆலை வாடகை | 1,500 | | |
| வட்டம் | 350 | | |
| கர்ப்பீடு | 700 | | |
| பற்பல கடனாளிகள் | 60.000 | | |
| அலுவலக வாடகை | 3,000 | | |
| அச்சுக் கூலியும் எழுது பொருளும் | 600 | | |
| பொதுச் செலவுகள் | 2,800 | | |
| விளம்பரம் | 15,000 | | |
| பெறற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 3,000 | | |
| எடுப்புகள் | 6,000 | | |
| சம்பளம் | 18,000 | | |
| தயாரிப்புக்கூலி | 20,000 | | |
| அறைகலனும் பொருத்துக்களும் | 7,500 | | |
| நிலக்கரி, எரிவளி, நீர் | 1,000 | | |
| கைவசரொக்கம் | 2,000 | | |
| வங்கிவசரொக்கம் | 12,500 | | |
| | 5,12,950 | | 5,12,950 |

(விடை: மொத்த இலாபம் ரூ. 1,40,000; நிகர இலாபம் ரூ. 88,050; இருப்புநிலைக் குறிப்பின் மொத்தம் ரூ. 1,75,000).

(19) திரு. ச. இராமன் என்பவரது ஏடுகளிலிருந்து இறக்கிய 31-12-1969ஆம் நாளுக்குரிய இருப்பாய்வு பின்வருமாறு. 31-12-1969ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கையும், அந்நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க:

| பற்று இருப்புகள் | ரூ. | வரவு இருப்புகள் | ரூ. |
|---|---|---|---|
| எடுப்புகள் | 4,800 | முதல் | 50,000 |
| சரக்கிருப்பு (1-1-1969) | 30,000 | பற்பல கடனீந்தோர் | 15,000 |
| அறைக்கலனும் பொருத்துக் களும் | 13,000 | 6% வட்டிக்கு வங்கிக் கடன் | 20,000 |
| அச்சுக் கூலியும் எழுது பொருளும் | 1,200 | பெற்ற வட்டம் | 1,000 |
| | | விற்பனை | 2,35,350 |
| நிலக்கரி, எரிவளி, நீர் | 600 | | |
| சத்தமும் அகற்றுக் கட்டணமும் | 3,500 | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 1,700 |
| கொள்முதல் | 75,000 | | |
| வருமான வரி | 9,500 | | |
| அனுமதித்த வட்டம் | 950 | | |
| பொறி பழுது பார்த்தது | 1,000 | | |
| ஆலை வாடகை | 2,500 | | |
| பல்வகைச் செலவுகள் | 1,000 | | |
| பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 12,500 | | |
| வெளி ஏற்றிச் செல் செலவு | 1,500 | | |
| காப்பீடு | 600 | | |

| பற்று இருப்புகள் | ரூ. | வரவு இருப்புகள் | ரூ. |
|---|---|---|---|
| வட்டி | 1,200 | | |
| வங்கிவச ரொக்கம் | 7,500 | | |
| கைவச ரொக்கம் | 3,500 | | |
| பற்பல கடனாளிகள் | 33,800 | | |
| சம்பளம் | 2,800 | | |
| தயாரிப்புக்கூலி | 24,000 | | |
| விளம்பரம் | 19,000 | | |
| பொறியும் எந்திரமும் | 70,000 | | |
| அலுவலக வாடகை | 3,600 | | |
| | 3,23,050 | | 3,23,050 |

31-12-1969 அன்றிருந்த சரக்கிருப்பு ரூ. 40,000
(விடை: மொத்த இலாபம் 1,39,750; நிகர இலாபம் ரூ. 1,07,900 ; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 1,80,300).

(20) ஆறுமுகம் என்பவரது ஏடுகளிலிருந்து 1960 திசம்பர் 31ஆம் நாளன்றைய பின்வரும் இருப்புகள் எடுக்கப்பட்டன. 1960 திசம்பர் 31ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க:

| | | ரூ. |
|---|---|---|
| ஆறுமுகத்தின் முதல் க/கு | .. | 15,000 |
| ஆறுமுகத்தின் எடுப்புகள் க/கு | .. | 3,000 |
| அறைகலனும் பொருத்துகளும் | .. | 500 |
| தட்டச்சுகள் | .. | 1,000 |
| சைக்கிள்கள் | .. | 250 |
| பற்பல கடனாளிகள் | .. | 15,000 |
| பற்பல கடனீந்தோர் | .. | 13,500 |
| வாடகை | .. | 2,400 |
| கைவச ரொக்கம் | .. | 5,900 |
| சரக்கிருப்பு (1-1-'60) | .. | 15,000 |

| | | ரூ. |
|---|---|---|
| கொள்முதல் | .. | 60,000 |
| விற்பனை | .. | 80,000 |
| வெளிப்புறத் திருப்பம் | .. | 500 |
| உட்புறத் திருப்பம் | .. | 1,000 |
| உள் ஏற்றிச்செல் செலவு | .. | 750 |
| வெளி ஏற்றிச்செல் செலவு | .. | 1,250 |
| உள்ளூர் வீதங்களும் வரிகளும் | .. | 600 |
| வங்கிவச ரொக்கம் | .. | 2,350 |

31-12-1960ஆம் நாளன்றைய சரக்கிருப்பு ரூ. 11,000

(விடை : மொத்த இலாபம் ரூ. ; நிகர இலாபம் ரூ. ; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. ).

(21) 31-12-1971ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க :

| | | ரூ. |
|---|---|---|
| முதல் கணக்கு | .. | 10,000 |
| பொறியும் எந்திரமும் | .. | 4,000 |
| பற்பல கடனாளிகள் | .. | 2,400 |
| பற்பல கடனீந்தோர் | .. | 1,200 |
| எடுப்புகள் | .. | 1,200 |
| கொள்முதல் | .. | 10,500 |
| கூலி | .. | 5,000 |
| வங்கி | .. | 1,000 |
| பழுதுபார்த்த செலவு | .. | 50 |
| சரக்கிருப்பு 1-1-1971 | .. | 2,000 |
| என்பவரிடமிருந்து பெற்ற கடன் | | 7,000 |
| வெளிப்புறத் திருப்பம் | .. | 500 |
| வாடகை | .. | 400 |
| விற்பனை | .. | 16,400 |
| தயாரிப்புச் செலவுகள் | .. | 800 |
| வாணிகச் செலவுகள் | .. | 700 |
| வராக் கடன் | .. | 200 |
| ஏற்றிச்செல் செலவு | .. | 150 |
| செலுத்தத்தக்க மாற்றுச் சீட்டுகள் | | 700 |
| சிற்றுந்து | .. | 7,000 |
| உள்புறத் திருப்பம் | .. | 400 |

இறுதிச் சரக்கிருப்பு ரூ. 1,450 என மதிப்பிடப்படுகிறது.

(விடை: மொத்த நட்டம் ரூ. 500; நிகர நட்டம் ரூ. 1,850; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 15,850)

(22) குப்புசாமி என்பவரது ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட பின்வரும் இருப்புகளிலிருந்து இறுதிக் கணக்குகள் தயாரிக்க:

| | | ரூ. |
|---|---|---|
| செலுத்தத்தக்க மாற்றுச் சீட்டுகள் | .. | 700 |
| நிலமும் கட்டடங்களும் | .. | 4,000 |
| சரக்கிருப்பு 1-1-1971 | .. | 4,000 |
| முதல் | .. | 15,000 |
| பொறியும் எந்திரமும் | .. | 6,600 |
| பெறத்தக்க மாற்றுச் சீட்டுகள் | .. | 1,500 |
| கொள்முதல் | .. | 13,000 |
| விற்பனை | .. | 22,000 |
| கூலி | .. | 3,500 |
| சம்பளம் | .. | 570 |
| உள்ளூர் வீதங்களும் வரிகளும் | .. | 200 |
| பொதுச் செலவுகள் | .. | 500 |
| செலுத்திய வட்டி | .. | 800 |
| அறைகலனும் பொருத்துகளும் | .. | 300 |
| வங்கிவச ரொக்கம் | .. | 230 |
| வட்டம் | .. | 500 |
| கடனீந்தோர் | .. | 6,000 |
| கடனாளிகள் | .. | 8,000 |

இறுதிச் சரக்கிருப்பு ரூ. 4,500 ஆகும்.

(**விடை:** மொத்த இருப்பு ரூ. 6,000; நிகர இருப்பு ரூ. 3,430; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 25,130).

(23) 31-12-1972ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார இலாப-நட்டக் கணக்கையும், அந்நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க:

| | | ரூ. |
|---|---|---|
| முதல் | .. | 6,000 |
| திருப்பி எடுத்தவை (எடுப்புகள்) | .. | 1,000 |
| விற்பனை | .. | 10,000 |
| அடமானத்தின் பேரில் கடன் (வரவு இருப்பு) | | 1,000 |
| எந்திரமும் பொறியும் | .. | 1,500 |
| நிலமும் கட்டடங்களும் | .. | 2,000 |
| கடனீந்தோர் | .. | 500 |

| | | |
|---|---|---|
| கூலி | .. | 5,000 |
| கடனாளிகள் | .. | 3,500 |
| பெட்டிகள், பெயர்ச்சீட்டுகள் (Labels) இன்னபிற | .. | 500 |
| உள்ளூர் வீதங்களும் வரிகளும் | .. | 40 |
| பெறத்தகு மாற்றுச்சீட்டுகள் | .. | 300 |
| காப்பீடு | .. | 150 |
| ஏற்றிச்செல் செலவு | .. | 10 |
| சார்ந்த செலவுகள் (Incidental Expenses) | .. | 200 |
| 1972 ஜனவரி 1ஆம் நாளன்று சரக்கிருப்பு | .. | 2,000 |
| வங்கிவச ரொக்கம் | .. | 1,250 |
| கைவச ரொக்கம் | .. | 500 |
| ஈட்டிய கழிவு | .. | 450 |

(விடை: மொத்த இலாபம் ரூ. 2,990; நிகர இலாபம் ரூ. 2,550; இருப்புநிலைக் குறிப்பின் மொத்தம் ரூ. 9,050).

**வழிமுறைக் குறிப்பு (Hints)**

(அ) மேற்கண்ட வினாவில் அக்காலப் பகுதியில் கொள்முதல் ஏதும் நடைபெறவில்லை என்பதை அறிக. எனவே, வியாபாரக் கணக்கின் பற்றுப் பகுதியில் கொள்முதல் என்னும் செய்தி இடம் பெறாது.

(ஆ) இந்த வினாவில் இறுதிச் சரக்கிருப்பு இல்லை. எனவே, இச்செய்தி வியாபாரக் கணக்கின், வரவுப் பகுதியில் இடம்பெறாது.

(இ) 'பெட்டிகள், பெயர்ச் சீட்டுகள் இன்ன பிற' எனும் இனத்தை இலாப-நட்டக் கணக்கின் பற்றுப் பகுதியில் காண்பிக்க வேண்டும். காரணம், நாம் விற்ற சரக்குகள் பாதுகாப்பாக அனுப்பப்பட வேண்டும் என்பதற்காகவே இக்கட்டுமப் பொருள்கள் பயன்படுத்தப்பட்டு உள்ளன என எடுத்துக்கொள்வதே பொருத்தமானது.

(24) மோகன்தாஸ் என்பவரது ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட பின்வரும் இருப்புகளைக் கொண்டு 1972 மார்ச் 31ஆம் நாள் குறித்த இறுதிக் கணக்குகள் தயாரிக்க:

| | | ரூ. |
|---|---|---|
| முதல் | .. | 24,500 |
| எடுப்புகள் | .. | 2,000 |
| பொதுச் செலவுகள் | .. | 3,500 |
| கட்டடம் | .. | 11,000 |
| எந்திரம் | .. | 9,340 |
| சரக்கிருப்பு | .. | 16,200 |
| உந்து திறன் (Motive power) | .. | 2,240 |
| வரிகளும் காப்பீடும் | .. | 1,315 |
| கூலி | .. | 7,200 |
| கடனாளிகள் | .. | 7,200 |
| கடனீந்தோர் | .. | 2,500 |
| வாராக் கடன் | .. | 550 |
| கடன் (வரவு இருப்பு) | .. | 7,880 |
| விற்பனை | .. | 65,360 |
| கொள்முதல் | .. | 47,000 |
| சிற்றுந்து | .. | 2,000 |
| காப்பு நிதி (Reserve Fund) | .. | 900 |
| கழிவு (வரவு இருப்பு) | .. | 2,320 |
| சிற்றுந்துச் செலவுகள் | .. | 1,800 |
| செலுத்தத்தகு மாற்றுச் சீட்டுகள் | .. | 3,850 |
| ரொக்கம் | .. | 160 |
| வங்கி மேல்வரைப் பற்று (Bank Overdraft) | | 4,300 |
| வட்டம் | .. | 105 |

இறுதிச் சரக்கிருப்பு ரூ. 14,000 ஆகும்.

(விடை: மொத்த இலாபம் ரூ. 6,720; நிகர இலாபம் ரூ. 1,770; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 43,700).

## அத்தியாயம் 14

# இறுதிக் கணக்குகள்—சரிக்கட்டுதல்

நாம் எடுத்துக்கொண்டுள்ள ஆண்டின் உண்மையான இலாபத்தைக் கண்டுபிடிப்பதே இறுதிக் கணக்குகளைத் தயாரிப்பதன் நோக்கமாகும். இந்த நோக்கம் நிறைவேற வேண்டுமாயின் அந்த ஆண்டுக்குரிய எல்லாச் செய்திகளையும் (இனங்களையும்) கணக்கில் கொண்டு வர வேண்டும். எடுத்துக்காட்டாகச் செலவுகளை எடுத்துக் கொண்டோமாயின், நடப்பு ஆண்டுக்குரிய எல்லாச் செலவுகளையும்— அவை செலுத்தப்பட்டிருந்தாலும் சரி, செலுத்தப்படாமல் இருந்தாலும் சரி, அவற்றை — இலாப-நட்டக் கணக்கில் காண்பிக்க வேண்டும். அதாவது, செலுத்தப்படாமலுள்ள நடப்பு ஆண்டுக்குரிய செலவுகளையும் கணக்கில் கொண்டுவர வேண்டும்—இதற்கே சரிக்கட்டு (Adjustment) எனப் பெயர். இவ்வாறு பல சரிக்கட்டுகளைச் செய்தால் தான் நமது இறுதிக் கணக்குகள் உண்மையான இலாப-நட்டத்தைக் காண்பிக்க இயலும். இச் சரிக்கட்டுகளைச் செய்வதற்கு முதலாவதாகத் தக்க குறிப்பேட்டுப் பதிவுகள் செய்ய வேண்டும். அவற்றிற்குச் 'சரிக்கட்டுப் பதிவுகள்' (Adjustment Entries) எனப்பெயர். பிறகு இறுதிக் கணக்குகளில் தக்க சரிக்கட்டுகள் செய்யவேண்டும். தக்க சரிக்கட்டுகள் செய்யாவிட்டால் இறுதிக் கணக்குகளில் தோன்றும் செலவுகள், வருமானங்களில் சில அதிகமாகவோ குறைவாகவோ தோன்றிடக்கூடும்.

பின்வருபவையே அடிக்கடி செய்யவேண்டிய சரிக்கட்டுகளாகும்:

(1) இறுதிச் சரக்கிருப்பு

(2) கொடுபடவேண்டிய செலவுகள் (Outstanding Expenses).

(3) முன்கூட்டிச் செலுத்திய செலவுகள் (Prepaid Expenses).

(4) பெறப்படவேண்டிய வருமானங்கள் (Outstanding Income) அல்லது கூடியுள்ள (Accrued) வருமானங்கள்.

(5) முன்கூட்டிப் பெற்ற வருமானங்கள் (Incomes Received in Advance).

(6) சொத்துகளின் தேய்மானம்.

(7) வாராக்கடன்.
(8) ஐயக்கடன் ஒதுக்கு (Provision for Doubtful Debts) இதை வாராக்கடன்-ஐயக் கடன் ஒதுக்கு (Provision for Bad and Doubtful Debts) எனச் சொல்லுவதும் உண்டு; இவ்வாறு அழைப்பது சற்று சரியற்றதே.
(9) கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்கு (Provision for Discount on Debtors).
(10) கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்கு.
(11) முதல் மீதான வட்டி.
(12) எடுப்புகள் மீதான வட்டி.

இச் சரிக்கட்டுகள் எவ்வாறு கணக்கிற்குக் கொண்டுவரப் படுகின்றன, அதற்குரிய சரிக்கட்டுப் பதிவுகள் யாவை என இப்பொழுது ஒவ்வொன்றாகக் காணுவோம்.

**(1) இறுதிச் சரக்கிருப்பு**

இறுதிச் சரக்கிருப்பு என்பது ஆண்டு இறுதி நாள் முடிவில் வாணிக நிலையத்திலுள்ள சரக்குகளின் மதிப்பைக் குறிக்கும். கணக்குப் பதிவேடுகளில் ஆண்டின் இறுதியில் தான் சரக்கிருப்பு கணக்கிற்குக் கொண்டுவரப் படும். இவ்வாறு ஆண்டு இறுதியில் கணக்கில் பதியப்பட்ட சரக்கிருப்பு அடுத்த ஆண்டுக் கணக்குகளில் தொடக்கச் சரக்கிருப்பாகத் தோன்றும்.

இறுதிச் சரக்கிருப்பைக் கணக்கிற்குக் கொண்டுவருவதற்குரிய சரிக்கட்டுப் பதிவு பின்வருமாறு:

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்று வைக்க வேண்டிய தொகை | வரவு வைக்க வேண்டிய தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | இறுதிச் சரக்கிருப்புக் க/கு பற்று | | .... | |
| | வியாபாரக் க/கு | | | .... |
| | (இறுதிச் சரக்கிருப்பைக் கணக்கிற்குக் கொண்டு வருதல்) | | | |

இவ்வாறு கணக்கிற்குக் கொண்டுவரப்படும் இறுதிச் சரக்கிருப்பு அந்நிறுவனத்தின் இறுதிக் கணக்குகளில் இவ்வாறு தோன்றும்:

### வியாபாரக் கணக்கு

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ........... | .... | ........... | .... |
| ........... | .... | ........... | .... |
| ........... | .... | இறுதிச் சரக் கிருப்பு | .... |
| | .... | | .... |

### இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ........... | .... | ........... | .... |
| ........... | .... | ........... | .... |
| ........... | .... | ........... | .... |
| ........... | .... | இறுதிச் சரக் கிருப்பு | .... |
| | | ........... | .... |
| | .... | | .... |

**குறிப்பு :—** *(1)* பொதுவாக ஒவ்வொரு சரிக்கட்டுக்கும் இறுதிக் கணக்குகளில் இரு பதிவுகள் செய்ய வேண்டியதாக இருக்கும். ஒரு பதிவு வியாபாரக் கணக்கு அல்லது இலாப - நட்டக் கணக்கிலும், மறு பதிவு இருப்புநிலைக் குறிப்பிலும் செய்ய வேண்டியதாக இருக்கும். இப்பொழுது நாம் கண்ட இறுதிச்

சரக்கிருப்பிற்குரிய சரிக்கட்டு வியாபாரக் கணக்கிலும் இருப்புநிலைக் குறிப்பிலும் பதியப்பட்டதைக் காண்க. இது போலவே நாம் காணவிருக்கும் ஒவ்வொரு சரிக்கட்டு இனத்திற்கும் மேற்கூறியுள்ளவாறு இரு பதிவுகள் செய்யப் படுகின்றனவா என நோக்குக.

(2) இவ்வாறு நடப்பு ஆண்டு இறுதியில் கணக்கு ஏடுகளில் உருவாக்கப்படும் 'இறுதிச் சரக்கிருப்பு' அடுத்த ஆண்டு இறுதியில் இருப்பாய்வில் தொடக்கச் சரக்கிருப்பாகத் தோன்றி அங்கிருந்து வியாபாரக் கணக்கின் பற்றுப் பகுதிக்கு எடுத்துச் செல்லப்பட்டு முடிக்கப்படுகிறது.

## (2) கொடுபடவேண்டிய செலவுகள்

நடப்பு ஆண்டில் செலவுகளினால் கிட்டும் பயன் அனுபவிக்கப்பட்டு இருந்து, அச்செலவுகள் பகுதியாகவோ முழுமையாகவோ அந்த ஆண்டு இறுதிக்குள் செலுத்தப் படாமலிருந்தால் அவற்றிற்கு **கொடுபடவேண்டிய செலவுகள்** (Outstanding Expenses) எனப் பெயர்.

கொடுபடவேண்டிய செலவுகளை அந்தந்த ஆண்டுக்குரிய இறுதிக் கணக்குகளில் கொண்டு வராவிட்டால், நாம் அந்தந்த ஆண்டின் உண்மையான இலாப-நட்டத்தை அறிய இயலாது என்பதை மீண்டும் நினைவுகொள்க.

ஆண்டு இறுதியில் சில செலவுகள் கொடுபடாமல் இருப்பதற்குப் பற்பல காரணங்கள் இருக்கலாம். எடுத்துக் காட்டாக, சில நிறுவனங்கள் ஒரு மாதத்திற்குரிய சம்பளத்தை அடுத்த மாதம் 5, 6 தேதிகளில் செலுத்துவதை வழக்கமாகக் கொண்டிருக்கலாம். சில சமயங்களில் செலவுகளுக்குரிய பட்டி (Bill) வராமல் இருப்பதாலும் அவை ஆண்டு இறுதிவரை கொடுபடாமல் இருக்கலாம்.

இப்பொழுது நாம் கொடுபடவேண்டிய செலவு ஒன்றை எடுத்துக்கொண்டு அதை எவ்வாறு சரிக்கட்டுவது எனப் பார்ப்போம்.

**ஆளினருக்கு (Staff) 1972 டிசம்பர் மாதத்திற்குரிய சம்பளம் ரூ. 500 ஆண்டிறுதியாகிய 31-12-1972 முடிய**

செலுத்தப்படாமல் இருக்கிறது. இதற்குரிய **சரிக்கட்டுப் பதிவு** பின் வருமாறு:

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | சம்பளக் க/கு பற்று | | 500 | |
| | கொடுபடவேண்டிய சம்பளக் க/கு | | | 500 |
| | (கொடுபட வேண்டிய சம்பளத்தைக் கணக்கிற் கொண்டு வருதல் குறித்து) | | | |

இவ்வாறு கணக்கிற்குக் கொண்டு வரப்படும் கொடுபட வேண்டிய சம்பளம் (அல்லது ஏனைய செலவுகள்) அந்த ஆண்டு இறுதிக் கணக்குகளில் இவ்வாறு தோன்றும்:

**இலாப-நட்டக் கணக்கு**

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ......... | .. | ......... | .. |
| ......... | .. | ......... | .. |
| சம்பளம் .. | | ......... | .. |
| கூட்டுக: கொடுபட வேண்டியது 500 | .. | | |
| ......... | .. | | |
| | .. | | .. |

**இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ......... | .. | ......... | .. |
| ......... | .. | ......... | .. |
| கொடுபடவேண்டிய சம்பளம் | 500 | ......... | .. |
| ......... | .. | | |
| | .. | | .. |

குறிப்பு: (1) கொடுபடவேண்டிய சம்பளம் இலாப-நட்டக் கணக்கில் ஏற்கெனவே செலுத்தப்பட்ட நடப்பு ஆண்டுக்குரிய சம்பளத்துடன் கூட்டப் படுகிறது. இது முதலாவது சரிக்கட்டு. அடுத்த சரிக்கட்டு அது இருப்புநிலைக் குறிப்பில் பொறுப்புப் பகுதியில் காண்பிக்கப்படுவதாகும்.

(2) அடுத்த ஆண்டு தொடக்கத்தில் நாம் மேலே கண்ட சரிக்கட்டுப் பதிவுக்கு நேர்மாறான பதிவைச் செய்ய வேண்டும். அதாவது, கொடு படவேண்டிய சம்பளக் கணக்கைப் பற்றும், சம்பளக் கணக்கை வரவும் வைக்கவேண்டும். இவ்வாறு செய்தால் 'கொடுபடவேண்டிய சம்பளக் கணக்கு' முடிக்கப் பெறுவதுடன் அடுத்த ஆண்டுக்குரிய சம்பளக் கணக்கு சீர் செய்யப்படுகிறது.

### (3) முன்கூட்டிச் செலுத்திய செலவுகள்

நடப்பு ஆண்டில் செலுத்தப்பட்ட செலவுகளின் ஒரு பகுதி அடுத்த ஆண்டுக்குப் பயன் விளைப்பதாக இருப்பின் அப் பகுதிச் செலவுகளை **முன்கூட்டிச் செலுத்திய செலவுகள்** (Prepaid Expenses) என அழைக்கிறோம். ஏன் அடுத்த ஆண்டுக்குப் பயன் தரக்கூடிய செலவுகள் இந்த ஆண்டே செலுத்தப்படுகின்றன என்ற வினா எழுவது

இயல்பே. இவ்வாறு செலவுகளின் ஒரு பகுதி முன்கூட்டியே செலுத்தப்படுவது அந்த நிறுவனத்திற்கு நல்லதன்று; எனவே, தவிர்க்க முடியாத சூழ்நிலைகளில் மட்டுமே முன்கூட்டிச் செலுத்தப்படுகின்றன.

எடுத்துக்காட்டாக, வாணிக நிறுவனம் ஒன்று தனது கட்டடத்தை தீ எனும் இடருக்கு எதிராக ஜூலை 1ஆம் நாள் காப்பீடு செய்து, ஓராண்டுக்குரிய காப்பீட்டு முனைமமாக (Insurance Premium) ரூ. 1,200 செலுத்துகிறது. எனவும், அந்த நிறுவனம் அதன் கணக்குகளை வழக்கமாக திசம்பர் 31ஆம் நாளோடு முடிக்கிறது எனவும் கொள்வோம். அது இந்த நடவடிக்கையை அந்த ஆண்டு ஜனவரி 1ஆம் நாளே எடுத்திருந்தால் அது செலுத்திய காப்பீட்டு முனைமத்தின் பயன் அந்த ஆண்டு திசம்பர் 31ஆம் நாளுடன் தீர்ந்திருக்கும். ஆனால் அது காப்பீடு செய்யும் நடவடிக்கையை ஜூலை 1ஆம் நாள் எடுத்திருப்பதால், தான் செலுத்திய காப்பீட்டு முனைமத்தின் பயனில் பாதியை மட்டுமே அந்த ஆண்டு இறுதியாகிய திசம்பர் 31ஆம் நாள் வரை துய்த்திருக்கின்றது. முனைமத்தின் பயனில் மறு பாதி அடுத்த ஆண்டுதான் கிட்டும். எனவே, முனைமத் தொகையில் பாதியாகிய ரூ. 600 முன்கூட்டிச் செலுத்திய செலவாகும்.

முன்கூட்டிச் செலுத்திய செலவு ஆங்கிலத்தில் 'Prepaid Expense', 'Unexpired Expense' எனப் பலவாறு அழைக்கப்படுகிறது.

மேற்கூறிய எடுத்துக்காட்டில் முன்கூட்டிச் செலுத்திய காப்பீட்டு முனைமமாகிய ரூ. 600-க்குரிய **சரிக்கட்டுப்பதிவு** பின்வருமாறு:

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| .. | முன்கூட்டிச் செலுத்திய காப்பீட்டுக் க/கு பற்று | | 600 | |
| | காப்பீட்டுக் க/கு | | | 600 |
| | (முன்கூட்டிச் செலுத்திய காப்பீட்டை சரிகட்டுவது குறித்து) | | | |

இந்தச் சரிக்கட்டுப் பதிவின் விளைவாக முன்கூட்டிச் செலுத்திய காப்பீட்டுக்குரிய சரிக்கட்டுகள் இறுதிக் கணக்கு களில் இரண்டு இடங்களில் செய்யப்படும்—ஒன்று இலாப-நட்டக் கணக்கில்; மற்றொன்று இருப்புநிலைக் குறிப்பில். அச் சரிக்கட்டுகள் இவ்வாறு தோன்றும்:

**இலாப - நட்டக் கணக்கு**

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ......... | .. | ......... | .. |
| ......... | .. | ......... | .. |
| காப்பீடு 1,200 | | ......... | .. |
| கழிக்க: | | | |
| முன்கூட்டிச் செலுத்தியது 600 | 600 | | |
| ......... | .. | | |
| | .. | | .. |

**இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ........... | .. | ........... | .. |
| ........... | .. | ........... | .. |
| | | ........... | .. |
| | | முன்கூட்டிச் செலுத்திய காப்பீடு | 600 |
| | .. | | .. |

**குறிப்பு:** அடுத்த ஆண்டுத் தொடக்கத்தில் மேற் கூறிய சரிக் கட்டுப் பதிவுக்கு நேர்மாறான பதிவைச் செய்து காப்பீட்டுக் கணக்கைப் பற்றும், 'முன்கூட்டிச் செலுத்திய காப்பீட்டுக் கணக்கை' வரவும் வைக்க வேண்டும். இவ்வாறு செய்வதால் நடப்பு ஆண்டு இறுதியில் நாம் தோற்றுவித்த 'முன்கூட்டிச் செலுத்திய காப்பீட்டுக் கணக்கு' அடுத்த ஆண்டின் தொடக்கத்தில் முடிக்கப்படுவதோடு அடுத்த ஆண்டுக்குரிய 'காப்பீட்டுக் கணக்கு' சீர் செய்யப் படுகிறது.

### (4) பெறப்படவேண்டிய வருமானங்கள் அல்லது கூடியுள்ள வருமானங்கள்

இவற்றை 'ஈட்டிய ஆனால் பெற்றிடாத' வருமானங்கள் (Incomes Earned but not Received) எனவும் கூறலாம். எவ்வாறு கொடுபடவேண்டிய செலவுகள் விஷயத்தில் நாம் அச் செலவுகளின் பயனைத் துய்த்தும் அந்த ஆண்டுக்குள் அவற்றிற்குரிய பணம் செலுத்தாமல் இருக்கிறோமோ அதுபோலவே நாம் பிறருக்குச் சில பணி களை நடப்பு ஆண்டில் ஆற்றியும் ஆண்டிறுதிக்குள் அப் பணிகளுக்குரிய வருமானங்களை முழுமையாகப் பெற்றிடாமல் இருப்போம். இத்தகைய வருமானங்கள் **பெறப்படவேண்டிய வருமானங்கள் (ஈட்டியும் பெற்றிடாத வருமானங்கள்)** என அழைக் கப்படுகின்றன.

எடுத்துக்காட்டாக, நமது நிறுவனப் பணத்தைச் சில முதலீடுகளில் இடுகிறோம். அந்த முதலீடுகளின் மொத்த முக மதிப்பு (Face Value) ரூ. 10,000 எனவும், அவை ஆண்டுக்கு 10% வட்டிக்கு உரியவை எனவும், இந்த வட்டி ஒவ்வோர் அரையாண்டும் (Half-year) மார்ச் 31-ந் தேதியும், செப்டம்பர் 30ஆம் தேதியும் செலுத்த உரியவை எனவும் கொள்வோம். நமது நிறுவனம் அதன் கணக்கை ஒவ்வோர் ஆண்டும் திசம்பர் 31ஆம் நாள் முடிக்கிறது எனவம் கொள்வோம்.

அந்நிலையில் முதலீடுகள் மீது பெறவேண்டிய வட்டி ஆண்டுக்கு ரூ. 1,000 ஆகும்; அரையாண்டுக்குரிய வட்டி அதில் பாதியாகும். 1976 திசம்பர் 31ஆம் நாளோடு

முடியும் ஆண்டை எடுத்துக்கொண்டால், நாம் 1976 செப்டம்பர் 31ஆம் நாள் அரையாண்டு வட்டியாகிய ரூ. 500 பெற்றிருப்போம்; அடுத்த அரையாண்டு வட்டியை நாம் 1977 மார்ச் 31ஆம் நாள்தான் பெறுவோம். எனவே 1976 திசம்பர் 31ஆம் தேதி நாம் ஆண்டுக் கணக்குகளை முடிக்கும்பொழுது, அந்த முதலீடுகள்மீது 1976 அக்டோபர் 1ஆம் தேதியிலிருந்து திசம்பர் 31ஆம் தேதி வரையிலான காலாண்டு (Quarterly) வட்டியாகிய ரூ. 250 ஈட்டி விட்டோம்—ஆனால் பெற உரியவராகவில்லை. இத்தகையவையே பெறப்படவேண்டிய வருமானங்கள் எனப்படுகின்றன.

மேற்கூறிய ஈட்டியும் பெற்றிடாமலுள்ள அதாவது பெறப்படவேண்டிய காலாண்டு வட்டியாகிய ரூ. 250க்கு உரிய சரிக்கட்டுப் பதிவையும், அதையடுத்துச் செய்ய வேண்டிய சரிக்கட்டுகளையும் காண்போம்:

**சரிக்கட்டுப் பதிவு :**

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| .. | கூடியுள்ள வட்டிக் கணக்கு பற்று | | 250 | |
| | வட்டிக் கணக்கு | | | 250 |
| | (ஈட்டியும் பெறப்படாமலுள்ள வட்டியைச் சரிக்கட்டுதல் குறித்த பதிவு) | | | |

இப்பதிவை அடுத்து இச் சரிக்கட்டு இலாப - நட்டக் கணக்கிலும் இருப்புநிலைக் குறிப்பிலும் இவ்வாறு செய்யப்படும்.

## இலாப - நட்டக் கணக்கு

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| .............. | ........ | .............. | ........ |
| .............. | ........ | .............. | ........ |
| | | வட்டி .... <br> கூட்டுக: <br> ஈட்டியும் பெறப்படாமலுள்ள வட்டி 250 | |
| | | | ........ |
| | ........ | | ........ |

## இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| .............. | ........ | .............. | ........ |
| .............. | ........ | .............. | ........ |
| .............. | ........ | ஈட்டியும் பெறப்படாமலுள்ள வட்டி | ........ |
| | ........ | | ........ |

**குறிப்பு:** *(1)* கூடியுள்ள வட்டி ஏற்கெனவே பெற்றுள்ள நடப்பு ஆண்டு வட்டியோடு இலாப - நட்டக் கணக்கில் கூட்டப்படுவதைக் காண்க. இது

முதலாவது சரிக்கட்டு. அடுத்த சரிக்கட்டு அது இருப்புநிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் காண்பிக்கப்படுவதாகும். இவ்வாறு ஒவ்வொரு சரிக்கட்டுக்கும் இறுதிக் கணக்குகளில் இரு இடங்களில் பதிவு செய்ய வேண்டும் என முன்னர்க் கூறியதை மீண்டும் நினைவு கொள்க.

(2) அடுத்த ஆண்டு தொடக்கத்தில் மேற்கூறிய சரிக்கட்டுப் பதிவிற்கு நேர்மாறான பதிவைச் செய்ய வேண்டும். அப்பொழுது 'கூடியுள்ள வட்டிக் கணக்கு' முடிக்கப்படுவதோடு அடுத்த ஆண்டுக்குரிய 'வட்டிக் கணக்கு' சீர் செய்யப் படுகிறது.

## (5) முன்னதாகப் பெற்ற வருமானங்கள்

நாம் நடப்பு ஆண்டில் பெறும் வருமானங்கள் சில வற்றின் பகுதிகள் அடுத்த ஆண்டைச் சார்ந்தவையாக இருப்பின், அப்பகுதி வருமானங்களை **முன்னதாகப் பெற்ற வருமானங்கள்** (Income Received in Advance) என அழைக் கிறோம். இவற்றின் சிறப்பு இவை நடப்பு ஆண்டில் பெறப் படினும் அந்த ஆண்டுக்கு உரியவையாக இல்லாமல் அடுத்த ஆண்டு (அல்லது ஆண்டுகளுக்கு) உரியவையாக இருப்பதுவே யாம்.

எடுத்துக்காட்டாக, நாம் நமது தொழில் நிலையத்தின் ஒரு பகுதியை வாடகைக்கு விடுகிறோம் எனவும், ஒவ்வொரு காலாண்டுக்கும் உரிய வாடகையாகிய ரூ. 900-த்தை அக் காலாண்டு தொடக்கத்திலேயே பெற்றுவிடுகிறோம் எனவும், இவ்வாறு 1978 திசம்பர் 1ஆம் தேதியோடு தொடங்கும் காலாண்டுக்குரிய வாடகையை அந்தத் தேதியிலேயே பெற்று விடுகிறோம் எனவும் கொள்ளலாம். நாம் நமது ஆண்டிறுதிக் கணக்குகளை திசம்பர் 31ஆம் தேதியோடு முடிப்பதாகக் கொண்டால், 1978 திசம்பர் 1ஆம் தேதி பெற்ற வாடகை ரூ. 900-ல், நடப்பு ஆண்டுக்குரிய தொகை ரூ. 300 ஆகும்; எஞ்சிய ரூ. 600 நடப்பு ஆண்டிலேயே பெறப்படினும் அடுத்த ஆண்டுக்கே (1979-க்கே) உரிய தொகையாகும்—இப் பகுதியை 'முன்னதாகப் பெற்ற வருமானம்' எனலாம்.

இப்பொழுது இதைச் சரிக்கட்டுவதற்குரிய சரிக்கட்டுப் பதிவையும் அதையடுத்து இறுதிக் கணக்குகளில் செய்ய வேண்டிய சரிக்கட்டுகளையும் காணுவோம்:

**சரிக்கட்டுப் பதிவு :**

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | வாடகைக் க/கு பற்று | | 600 | |
| | முன்னதாகப் பெற்ற வாடகைக் க/கு | | | 600 |
| | (முன்னதாகப் பெற்ற வாடகையைச் சரிக்கட்டுவது குறித்த பதிவு) | | | |

இச்சரிக்கட்டுப் பதிவைச் செய்தபின், இறுதிக் கணக்குகளில் இவ்வாறு சரிக்கட்டு செய்யப்படும்:

**இலாப-நட்டக் கணக்கு**

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| .............. | ........ | .............. | ........ |
| .............. | ........ | .............. | ........ |
| .............. | ........ | வாடகை...... | |
| | | **கழிக்க:** முன்னதாகப் பெற்றது 600 | ........ |
| | ........ | | ........ |

### இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| .............. | ........ | .............. | ........ |
| .............. | ........ | .............. | ........ |
| முன்னதாகப் பெற்ற வாடகை | 600 | | |
| | ........ | | ........ |

**குறிப்பு:** அடுத்த ஆண்டு தொடக்கத்தில் மேலே கண்ட சரிக்கட்டுப் பதிவுக்கு நேர்மாறான பதிவு செய்யப் படும். அதன் விளைவாக 'முன்னதாகப் பெற்ற வாடகைக் கணக்கு' முடிக்கப்படுவதோடு அடுத்த ஆண்டின் 'வாடகைக் கணக்கு' சீர்செய்யப்படும்.

### 6. தேய்மானம் (Depreciation)

நமது தொழில் நிலையத்திலுள்ள சொத்துகள் இடை யறாது பயன் படுத்தப்படுவதால் அவற்றின் மதிப்பு குறை கிறது. அதுபோலவே காலம் கழிவதாலும், சொத்துகள் வழக் கொழிந்து போவதாலும் அவற்றின் மதிப்பு குன்றிடலாம். இவ்வாறு பயன்படுத்தப்படுதல், காலங்கழிதல் (Lapse of time) வழக்கொழிதல் (Obsolescence) போன்ற காரணங்களால் சொத்துகளில் ஏற்படும் மதிப்பிறக்கத்திற்குத் **தேய்மானம்** (Depreciation) எனப் பெயர்.

தொழில் நிலையச் சொத்துகளின் தேய்மானம் அத் தொழிலைச் சார்ந்த ஒரு செலவாகும். சொத்துகள் படிப் படியாகத்தம்மை அழித்துக்கொண்டு தொழில் நிறுவனம் இலாபம் ஈட்டுவதற்கு உதவுவதால், அவற்றில் ஏற்படும் தேய்மானத்தை அந்நிறுவனத்தின் செலவுகளில் ஒன்றாகக் கருதுவதே பொருத்தமுடைத்து. எனவே சொத்துகளின் தேய்மானத்தைக் கணக்கிட்டு அதைக் கணக்கிற்குக் கொண்டு வருவது இன்றியமையாதது.

சொத்துகளின் தேய்மானத்தைத் துல்லியமாகக் கணக்கிடுவது இயலாது; அதைத் தோராயமாக மதிப்பிடுவதே இயலுவதாகும். பெரும்பாலும் சொத்துகளின் மதிப்பில் ஒரு குறிப்பிட்ட விழுக்காட்டை ஆண்டுதோறும் தேய்மானமாக எடுத்துக் கொள்ளுவதே நடை முறையிலுள்ள ஒரு வழக்கமாகும்.

எடுத்துக்காட்டாக ஒரு நிறுவனம் ஒரு இயந்திரத்தை வாங்கிப் பொறுத்துவதற்கு ஏற்பட்ட மொத்தச் செலவு ரூ. 20,000 எனவும் அது ஆண்டுதோறும் 10 விழுக்காட்டைத் தேய்மானமாகப் போக்கெழுத (Write off) விரும்புகிறது எனவும் கொள்ளலாம். அந்நிலையில் ஒவ்வோர் ஆண்டும் கணக்கிற்குக் கொண்டுவரவேண்டிய தேய்மானம் ரூ. 2,000 ஆகும்.

இதைக் கணக்கிற்குக் கொண்டுவருவதற்கு முதலாவதாகச் சரிக்கட்டுப் பதிவு செய்யவேண்டும். அதையடுத்து இறுதிக் கணக்குகளில் இரண்டு சரிக்கட்டுகள் செய்யவேண்டும். நாம் மேலே கண்ட எடுத்துக்காட்டை அடிப்படையாகக் கொண்டு இவற்றை எவ்வாறு செய்வதெனக் காணுவோம்:

**சரிக்கட்டுப் பதிவு**

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| ,, | தேய்மானக் க/கு பற்று<br>இயந்திரக் க/கு<br>(இயந்திரத்தின் மீது 10% தேய்மானம் நீக்குவது குறித்த பதிவு) | | 2,000 | 2,000 |

## இலாப-நட்டக் கணக்கு

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| இயந்திரத்தின் மீது தேய்மானம் | 2,000 | ......... | .. |
| ......... | .. | ......... | .. |
| ......... | .. | ......... | .. |
| | .. | | .. |

**குறிப்பு :** இயந்திரங்கள் நமது சரக்குகளின் உற்பத்திக்குப் பயன்படுத்தப்படுபவையாக இருப்பின், அவற்றிற்குரிய தேய்மானத்தை உற்பத்திக் கணக்கிற்கு (Manufacturing Account) எடுத்துச் செல்ல வேண்டும். இந்த எடுத்துக்காட்டில் இயந்திரம் உற்பத்திக்குப் பயன்படுத்தப்படாமல் சரக்குகளைப் பிறரிடமிருந்து கொள்முதல் செய்து விற்பதற்குப் பயன்படுத்தப்படுவதாக எடுத்துக் கொள்ளப்பட்டு அதற்குரிய தேய்மானம் இலாப - நட்டக் கணக்கில் காண்பிக்கப்பட்டிருக்கின்றது.

## இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ......... | .. | ......... | .. |
| ......... | .. | இயந்திரம் 20,000 | .. |
| | | **கழிக்க :** தேய்மானம் 2,000 | 18,000 |
| | .. | | .. |

**குறிப்பு :** நடப்பு ஆண்டுத் தேய்மானம் குறித்து அடுத்த ஆண்டின் கணக்கு ஏடுகளில் பதிவு ஏதும் செய்ய வேண்டுவதில்லை.

## (7) வாராக் கடன் (Bad Debts)

கடன் என்பது கடனாளிகளிடமிருந்து நமக்கு வர வேண்டிய தொகையைக் குறிக்கும். அவர்களில் சிலர் தமது கடனைச் செலுத்தத் தவறலாம் அல்லது செலுத்த இயலாத நிலை அவர்களுக்கு ஏற்படலாம். இவ்வாறு நம்மால் திரும்பப் பெற இயலாத கடனுக்கு **வாராக் கடன்** எனப் பெயர். இது நமக்கு ஏற்படும் இழப்பாகும். வாராக் கடனைக் கணக்கிற்குக் கொண்டுவருவதற்குரிய பதிவையும் அதையடுத்துச் செய்யவேண்டிய சரிக்கட்டுகளையும் காணுவோம்.

**எடுத்துக்காட்டு :** நமது கடனாளிகளிடமிருந்து வர வேண்டிய மொத்தத் தொகை ரூ. 10,000, இதில் வாராக் கடன் எனக் கருதப்படும் தொகை ரூ. 500.

**சரிக்கட்டுப் பதிவு**

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | வாராக் கடன் க/கு பற்று | | 500 | |
| | பற்பல கடனாளிகள் க/கு | | | 500 |
| | (வாராக் கடன் போக்கெழுதுதல் குறித்த பதிவு) | | | |

வாராக் கடன் குறித்து இறுதிக் கணக்குகளில் செய்யப்படும் சரிக்கட்டுகளாவன:

**இலாப-நட்டக் கணக்கு**

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ......... | .. | ........... | .. |
| ......... | .. | ........... | .. |
| வாராக் கடன் | 500 | | |
| | .. | | .. |

### இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ........ | .. | ...... | .. |
| ........ | .. | ...... | .. |
| ........ | .. | பற்பல கடனாளிகள் 10,000 கழிக்க: வாராக்கடன் 500 | .. 9,500 |
| | .. | | .. |

குறிப்பு: இந்த இரண்டு சரிக்கட்டுகளும் (அதாவது, இலாப-நட்டக் கணக்கிலும் இருப்புநிலைக் குறிப்பிலும் தோன்றும் சரிக்கட்டுகள்) இருப்பாய்வு தயாரித்த பின்னர் போக்கெழுதுக எனக் கூறப்பட்டிருக்கும் வாராக் கடன் குறித்த சரிக்கட்டுகளாகும்.

இருப்பாய்வில் வாராக் கடன் என்னும் இனம் தோன்றினால் அது ஏற்கெனவே போக்கெழுதப்பட்டு விட்டது எனப் பொருள். அந் நிலையில் அந்த வாராக் கடன் தொகையை இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்றினால் மட்டுமே போதுமானது. அது பற்பல கடனாளிகள் தொகையிலிருந்து ஏற்கனவே கழிக்கப்பட்டுவிட்டதால் அதை இருப்புநிலைக் குறிப்பில் மீண்டும் பற்பல கடனாளிகள் தொகையிலிருந்து கழிக்க வேண்டுவதில்லை.

**(8) ஐயக் கடன் ஒதுக்கீடு (Provision for Doubtful Debts)**

இதை வாராக் கடன் ஒதுக்கு (Provision for Bad Debts), வாராக் கடன்—ஐயக் கடன் ஒதுக்கு (Provision for Bad and Doubtful Debts) என அழைப்பதுண்டு. ஐயக் கடன் ஒதுக்கு என அழைப்பதே முற்றும் சரியானது. வாராக் கடன் என்பது திரும்பப்பெறவே இயலாத கடனைக் குறிக்கும்; இதைப் போக்கெழுதிவிட வேண்டியதுதான்; இதற்கு ஒதுக்கு உருவாக்குவது பொருளற்றது.

மாறாக, ஐயக் கடன் என்பது வந்தாலும் வரலாம், வராமற் போவதற்கும் வாய்ப்புண்டு என்ற ஈறெட்டு நிலையிலுள்ள கடனைக் குறிக்கும். வாராக் கடனாக உறுதியாக அது மாறாத வரை அதைப் போக்கெழுதுவது கூடாது; அதேபோழ்து வாராக் கடனாக அது மாறும்பொழுது பார்த்துக் கொள்ளலாம் என வாளாவிருக்கவும் கூடாது. இறுதிக் கணக்குகள் தயாரிக்கும் முன் ஐயக் கடன் எவ்வளவு என்பதைக் கவனமாக மதிப்பிட்டு அதற்கு ஒதுக்கு உருவாக்குவதே முறையான செயலாகும். நடப்பு ஆண்டில் உருவான கடனாளிகளைச் சார்ந்த ஐயக் கடன், நடப்பு ஆண்டைச் சேர வேண்டிய இழப்பாகும். அதற்கு நடப்பு ஆண்டிலேயே ஒதுக்கு உருவாக்குவதுதான் தக்கது. நடப்பு ஆண்டில் ஐயக் கடனுக்கு ஒதுக்கு உருவாக்காமல் அடுத்த ஆண்டில் அது வாராக் கடனாக மாறும்போது போக்கெழுதி விடலாம் என வாளாவிருப்பது நடப்பு ஆண்டுக்குரிய இழப்பை அடுத்த ஆண்டின்மீது சுமத்துவதாகும்—இது முறையற்றது.

ஒவ்வொரு தொழிலும் கடன் நடவடிக்கைகளில் (அதாவது சரக்குகளைக் கடனாக விற்பதில்) அதிக அளவில் ஈடுபடுவதால், பற்பல கடனாளிகள் தொகை கணிசமான அளவினதாக உருவாகிறது. இத் தொகை முழுவதையும் நாம் மீட்க இயலாது. ஒரு பகுதி வாராதது என்ற நிலையை ஏற்கனவே அடைந்திருக்கும்; அதைப் போக்கெழுதிவிடவேண்டும்.

மற்றும் ஒரு பகுதி வந்தாலும் வரலாம், வராவிட்டாலும் இல்லை என்ற நிலையில் இருக்கும்; இந்த ஐயக் கடனுக்கு ஒதுக்கு உருவாக்க வேண்டும்.

இவற்றைச் செய்யா விட்டால் இருப்புநிலைக் குறிப்பில் தோன்றும் பற்பல கடனாளிகள் தொகை, நாம் திரும்பப் பெறத்தக்க கடன் தொகையைக் காட்டுவதாக இராது.

ஐயக் கடன் ஒதுக்கை எவ்வாறு உருவாக்குவது என இப்பொழுது காண்போம்.

எடுத்துக்காட்டாக, ஒரு நிறுவனத்தின் பற்பல கடனாளிகள் தொகை ரூ. 10,000. இதன் மீது 5% ஐயக் கடன் ஒதுக்கு உருவாக்க வேண்டும்.

**சரிக்கட்டுப் பதிவு**

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| .. | இலாப-நட்டக் க/கு பற்று | | 500 | |
| | ஐயக் கடன் ஒதுக்குக் க/கு | | | 500 |
| | (ஐயக் கடன் ஒதுக்கு உருவாக்குவது குறித்த பதிவு) | | | |

அதற்குரிய இப்பதிவை அடுத்து, ஐயக் கடன் ஒதுக்கு இறுதிக் கணக்குகளில் இவ்வாறு சரிக்கட்டப்படும்:

**இலாப-நட்டக் கணக்கு**

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| .............. | ........ | .............. | ........ |
| .............. | ........ | .............. | ........ |
| ஐயக் கடன் ஒதுக்கு | 500 | | |
| | ........ | | ........ |

### இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ................ | ........ | பற்பல கடனாளிகள் 10,000 | |
| ................ | ........ | | |
| ................ | ........ | கழிக்க : ஐயக் கடன் ஒதுக்கு 500 | 9,500 |
| | ........ | | ...... |

குறிப்பு: (1) ஐயக் கடன் ஒதுக்கைக் கணக்கிடும் பொழுது பற்பல கடனாளிகளின் மொத்தத் தொகை மீது, கணக்கிடக்கூடாது. அதை இருப்பாய்வைத் தயாரித்தபின் போக்கெழுதப்படும் வாராக் கடனைக் கழித்தபின் எஞ்சியிருக்கும் நிகரக் கடனாளிகள் (Net Debtors) மீதுதான் கணக்கிடவேண்டும்.

(2) நடப்பு ஆண்டில் உருவாக்கப்படும் ஐயக் கடன் ஒதுக்கு அடுத்த ஆண்டு ஏடுகளில் தொடர்ந்து தோன்றும். அதை அடுத்த ஆண்டு என்ன செய்ய வேண்டும் என்பது அடுத்த அத்தியாயத்தில் விளக்கமாகக் கூறப்பட்டிருப்பதைக் காண்க.

(3) நடப்பு ஆண்டில் தோற்றுவிக்கப்படும் ஐயக் கடன் ஒதுக்குக் கணக்கு பின்வருமாறு தோன்றும்:

ஐயக் கடன் ஒதுக்குக் கணக்கு

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ. |
| .. | ........... | ........ | .. | ........... | ........ |
| | இருப்பு கீ/இ | ........ | | இலாப நட்டக் க/கு | 500 |
| | | ........ | | | ........ |
| | | | .. | இருப்பு கீ/கொ | ........ |

**(9) கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்கு (Provision for Discount on Debtors)**

நிகரக் கடனாளிகள் தொகையிலிருந்து ஐயக் கடன் ஒதுக்கைக் கழித்தபின் எஞ்சியிருக்கும் கடனாளிகள் தொகையைத் 'திடமான கடன் தொகை' (Sound Debts) எனக் கூறலாம் திடமான கடனாளிகள், அவர்கள் கடனுக்குரிய தொகையை அடுத்த ஆண்டு செலுத்துவது உறுதி என்பதோடு, அவர்கள் அத் தொகைகளைத் தக்க நேரத்தில் செலுத்தி ரொக்க வட்டம் பெறவும் விழைவர். நாம் பிறருக்கு அளிக்கும் ரொக்க வட்டம் தொழில் சார்ந்த செலவாகும். நடப்பு ஆண்டில் நாம் செய்த கடன் விற்பனையால் எழும் கடனாளிகள் சார்ந்த செலவுகள் (வட்டம்), இழப்புகள் (வாராக் கடன்) அனைத்தும் அடுத்த ஆண்டில் எழத்தக்கவாயினும் அவற்றை நடப்பு ஆண்டிலேயே ஈடு செய்ய வேண்டும் என்பது கணக்குப் பதிவியல் மரபாகும் (Accounting Convention).

இந்த மரபுக்கு ஒப்பத்தான் நாம் அடுத்த ஆண்டில் எழலாம் என மதிப்பிடும் வாராக் கடனுக்கு நடப்பு ஆண்டிலேயே ஐயக் கடன் ஒதுக்கு உருவாக்குகிறோம். அது போலவே நடப்பு ஆண்டைச் சார்ந்த திடமான கடனாளிகளுக்கு அடுத்த ஆண்டில் வழங்கவிருக்கும் ரொக்க வட்டத்திற்கும் நடப்பு ஆண்டிலேயே ஒதுக்கு உருவாக்க வேண்டும். இதற்குக் **கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்கு** எனப்பெயர்.

ஐயக் கடன் ஒதுக்கு போலவே கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்கும் கடனாளிகள் தொகையில் ஒரு குறிப்பிட்ட விழுக்காடு எனக் கணக்கிடப்பட்டு உருவாக்கப்படுகிறது— ஆனால் ஒரு வேறுபாடு, ஐயக் கடன் ஒதுக்கு நிகரக் கடனாளிகள் (அதாவது இருப்பாய்வில் தோன்றும் பற்பல கடனாளிகள் தொகையிலிருந்து இருப்பாய்வைத் தயாரித்த பின் போக்கெழுதப்படும் வாராக் கடனைக் கழித்த நிலையில் எஞ்சியுள்ள கடனாளிகள்) மீது கணக்கிடப்படும்; மாறாக, கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்கு 'திடமான கடனாளிகள்' (நிகரக் கடனாளிகள் தொகையிலிருந்து ஐயக் கடன் ஒதுக்கைக் கழித்த நிலையில் எஞ்சியிருக்கும் கடனாளிகள்) மீது கணக்கிடப்படும்.

**எடுத்துக்காட்டு**

31-12-1978 அன்று ஒரு வாணிக நிறுவனத்தின் பற்பல கடனாளிகள் தொகை ரூ. 10,000 எனவும் ஐயக் கடன் ஒதுக்கு 5%ம், வட்ட ஒதுக்கு 2%ம் உருவாக்க வேண்டும் என அது மதிப்பிடுகிறது எனவும் கொள்வோம். ஐயக் கடன் ஒதுக்குக்குரிய தொகையையும், வட்ட ஒதுக்குக்குரிய தொகையையும் இவ்வாறு கணக்கிடவேண்டும்:

| | | ரூ. |
|---|---|---|
| மொத்தக் கடனாளிகள் | — | 10,000 |
| கழிக்க: இருப்பாய்வு தயாரித்தபின் போக்கெழுதிய வாராக் கடன் | — | .. |
| நிகரக் கடனாளிகள் | — | 10,000 |
| கழிக்க: ஐயக் கடன் ஒதுக்கு (அதாவது நிகரக் கடனாளிகளில் 5%) | — | 500 |
| திடமான கடனாளிகள் | | 9,500 |
| கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்கு (9,500 இல் 2%) | — | 190 |

உருவாக்க வேண்டிய வட்ட ஒதுக்குக்குரிய தொகையை இவ்வாறு கணக்கிட்டபின், பின்வரும் சரிக்கட்டுப் பதிவைச் செய்ய வேண்டும்.

**சரிக்கட்டுப் பதிவு**

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | இலாப - நட்டக் க/கு பற்று | | 190 | |
| | கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்குக் க/கு | | | 190 |
| | (கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்கு உருவாக்குவது பற்றிய பதிவு) | | | |

இப் பதிவைச் செய்தபின் இறுதிக் கணக்குகளில் செய்ய வேண்டிய சரிக்கட்டுகள் பின்வருமாறு:

**இலாப-நட்டக் கணக்கு**

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| ...... | .... | ...... | .... |
| ...... | .... | ...... | .... |
| கடனாளிகள் மீதான ஒதுக்கு | 190 | | |
| | .... | | .... |

**இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | | தொகை |
|---|---|---|---|---|
| | ரூ. | | | ரூ. |
| ...... | .... | ...... | | .... |
| ...... | .... | ...... | | .... |
| | | பற்பல கடனாளிகள் | 10,000 | |
| | | **கழிக்க:** ஐயக்கடன் ஒதுக்கு | 500 | |
| | | | 9,500 | |
| | | **கழிக்க:** கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்கு | 190 | 9,310 |
| | .... | | | .... |

நடப்பு ஆண்டில் தோற்றுவிக்கப்படும் கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்குக் கணக்கு பின்வருமாறு தோன்றும்:

**கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்குக் கணக்கு**

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ. |
| .. | இருப்பு கீ/இ | ........ | .. | இலாப-நட்டக் க/கு | ........ |
| | | ........ | | | ........ |
| | | | .. | இருப்பு கீ/கொ | ........ |

குறிப்பு: நடப்பு ஆண்டில் உருவாக்கப்படும் வட்ட ஒதுக்கு அடுத்த ஆண்டு ஏடுகளில் தொடர்ந்து தோன்றும். அதை அடுத்த ஆண்டு என்ன செய்ய வேண்டும் என்பது அடுத்த அத்தியாயத்தில் விளக்கமாகக் கூறப்பட்டிருப்பதைக் காண்க.

## (10) கடனீந்தோர் (கடனாளர்) மீதான வட்ட ஒதுக்கு (Provision for Discount on Creditors)

நாம் பிறரிடமிருந்து கடன் அடிப்படையில் சரக்குகளைக் கொள்முதல் செய்வதனால் அவர்கள் நமக்குக் கடனீந்தோர் (கடனாளர்) அல்லது வாணிகக் கடனீந்தோர்—(Trade Creditors) ஆகின்றனர். இவ்வாறு நடப்பு ஆண்டில் உருவாக்கும் கடனீந்தோருக்கு அந்த ஆண்டிலேயே முற்றும் பணம் செலுத்தப்படுவதில்லை. இதன் விளைவாக நடப்பு ஆண்டு இறுதியில் வாணிகக் கடனீந்தோர், (பற்பல கடனீந்தோர்) அவர்களுக்குத் தரவேண்டிய தொகையைக் காட்டிக் கொண்டு நமது இருப்பாய்வில் தோன்றுவர்.

திடமான தொழில் நிறுவனம் என்ற முறையில் நம்முடைய கடனீந்தோருக்கு உரிய காலத்தில் பணம் செலுத்துவதை மரபாகக் கொண்டிருப்போம். இதனால் நமக்கு இரு நன்மைகள் உண்டு.

(i) சரியான காலத்தில் பணம் செலுத்துவதால் நமக்கு வட்டம் என்ற தள்ளுபடியைக் கடனீந்தோர். அளிப்பர்; இது நமக்கு உடனடியாகக் கிடைக்கும் நன்மை.

(ii) பிறருக்குத் தரவேண்டிய கடனைத் தக்க காலத்தில் செலுத்துவதால் தொழிலுலகில் நமது வாணிக நற்பெயர் (Good will) அதிகரிக்கும்.

நடப்பு ஆண்டு இறுதியிலுள்ள கடனீந்தோருக்கு நாம் அடுத்த ஆண்டு பணம் செலுத்தும் பொழுது அவர்கள் நமக்கு வட்டம் அளிப்பர். இது அடுத்த ஆண்டு நமக்குக் கிட்டும் வருமானமாயினும் நடப்பு ஆண்டுக்குரியது ஆகும். ஆக நடப்பு ஆண்டுக்குரிய வட்டம் அடுத்த ஆண்டு கிட்டுவதாயினும் அதை எதிர்நோக்கி நடப்பு ஆண்டே அதற்கு ஒதுக்கு உருவாக்குவது உண்டு. இதற்குக் **கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்கு** எனப் பெயர். இதனால் இரு விளைவுகள் ஏற்படுகின்றன.

(i) நடப்பு ஆண்டுக்குரிய வருமானம் இன்னும் பெறப் படவில்லையாயினும் நடப்பு ஆண்டிலேயே கணக்கிற்குக் கொண்டுவரப் படுகிறது

(ii) நடப்பு ஆண்டுக்குரிய இருப்புநிலைக குறிப்பில் 'கடனீந்தோர்' என ஏடுகளிலுள்ள தொகை (Book-figure) காண்பிக்கப்படாமல் அவர்களுக்கு உண்மை யாகவே செலுத்தப்பட இருக்கிற தொகை காண் பிக்கப்படுகிறது.

ஒன்றை ஈண்டு நினைவிற் கொள்ள வேண்டும். சில நிறுவனங்கள், கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்கை உருவாக்குகின்றன. அனைத்து நிறுவனங்களும் இந்த ஒதுக்கை உருவாக்குவதில்லை.

'ஏற்படவிருக்கிற அனைத்து இழப்புகளையும் செலவு களையும் எதிர்பார்த்து வகை செய்—ஆனால் வர இருக்கிற (எதிர்பார்க்கப்படும்) இலாபங்களையும் வருமானங்களையும் எதிர்நோக்கி முன்னதாகவே அவற்றைக் கணக்கிற்குக் கொண்டு வராதே' என்பது கணக்குப் பதிவியலில் ஒரு விதி. இந்த விதிக்கு ஒப்பப் பல நிறுவனங்கள் இந்த ஒதுக்கை உருவாக்குவதில்லை.

ஒரு நிறுவனம் இந்த ஒதுக்கை உருவாக்குவது என முடிவு செய்தால், அதை அது எவ்வாறு செய்கிறது, அதற் குரிய சரிக்கட்டுகள் யாவை என ஓர் எடுத்துக்காட்டைக் கொண்டு பார்ப்போம்.

**எடுத்துக்காட்டு**

31-12-1970 அன்று ஒரு நிறுவனத்தின் பற்பல கடனீந் தோர் தொகை ரூ. 5,000. அது இத்தொகை மீது 3% வட்டி ஒதுக்கு உருவாக்க விரும்புகிறது. ரூ. 5,000இல் 3 விழுக்காடு ரூ. 150 ஆகும்.

இதை உருவாக்குவதற்குரிய சரிக்கட்டுப் பதிவு பின்வருமாறு :

**சரிக்கட்டுப் பதிவு**

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1970 | | | ரூ. | ரூ. |
| திச 31 | கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்கு பற்று | | 150 | |
| | இலாப-நட்டக் க/கு | | | 150 |
| | (கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்கு உருவாக்குவது பற்றிய பதிவு) | | | |

இப்பதிவை அடுத்து, இறுதிக் கணக்குகளில் செய்ய வேண்டிய சரிக்கட்டுகள் பின்வருமாறு:

**இலாப-நட்டக் கணக்கு**

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| .............. | ......... | கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்கு | |
| .............. | ......... | | 150 |
| | ........ | | ........ |

## இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ...... | .... | ...... | .... |
| கடனீந்தோர் 5,000 | | ...... | .... |
| **கழிக்க:** கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்கு 150 | 4,850 | | |
| | .... | | .... |

நடப்பு ஆண்டில் தோற்றுவிக்கப்படும் கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்குக் கணக்கு பின்வருமாறு தோன்றும்:

## கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்குக் கணக்கு

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ. |
| 1970 திச 31 | இலாப-நட்டக் க/கு | 150 | 1970 திச 31 | இருப்பு கீ/இ | 150 |
| | | 150 | | | 150 |
| 1791 சன | இருப்பு கீ/கொ | 150 | | | |

**குறிப்பு:** நடப்பு ஆண்டில் உருவாக்கப்படும் 'கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்குக் கணக்கு' அடுத்த ஆண்டு ஏடுகளில் தொடர்ந்து தோன்றும். அதை அடுத்த ஆண்டு என்ன செய்ய வேண்டும் என்பது அடுத்த அத்தியாயத்தில் விளக்கமாகக் கூறப்பட்டிருப்பதைக் காண்க.

**(11) முதல் மீதான வட்டி**

உரிமையாளர் தொழிலில் இட்டுள்ள முதல் மீது நியாயமான விதத்தில் வட்டி கணக்கிடப்பட்டு, இலாப-நட்டக் கணக்கில் தொழில்சார்ந்த செலவாக அது அனுமதிக்கப் படுவதுண்டு. அதாவது நிகர இலாபம் கண்டுபிடிக்கப் படு முன், ஏனைய செலவுகளைப்போல முதல் மீது வட்டியும் மொத்த இலாபத்திலிருந்து கழிக்கப்படும்.

முதல் மீதான வட்டியும் உரிமையாளரைத்தானே சேருகிறது, நிகர இலாபமும் அவரைத்தானே அடைகிறது. ஏன் முதல் மீதான வட்டியைக் கழித்து நிகர இலாபத்தைக் கணக்கிடவேண்டும் என்ற ஐயம் எழலாம். உரிமையாளர் தொழிலில் இட்ட பணத்தை வேறு எங்கு வைப்பாக இட்டிருந்தாலும், தொழில் சார்ந்த இடர்களை (Risks) ஏற்காமலேயே வட்டி ஈட்டியிருக்கலாம். எனவே முதல் மீதான வட்டியைச் கழித்தபின் கிடைக்கும் நிகர இலாபமே தொழில் சார்ந்த இடர்களை ஏற்றதற்கும் தொழிலுக்காக அவர் உழைத்த உழைப்பிற்கும் அவருக்குக் கிட்டும் பரிசாகும் (Reward). அதாவது நிகர இலாபம் தொழில் திறம் படச் செய்யப்படுவதைப் பிரதிபலிக்கும் அளவுகோலாகும் (Yardstick). எனவே தொழிலின் திறத்தை (Efficiency) அளவிடவேண்டுமாயின், முதல் மீதான வட்டியைக் கழித்து நிகர இலாபம் கணக்கிட வேண்டும். முதல் மீதான வட்டி தொழிலைச் சார்ந்த செலவாக அமைவதோடு, உரிமையாளருக்குக் கிடைக்கும் ஆதாயமாகவும் அமைகிறது.

முதல் மீதான வட்டிக்குரிய சரிக்கட்டுப் பதிவையும், அதையடுத்து இறுதிக் கணக்குகளில் செய்யப்படும் சரிக்கட்டுகளையும் இப்பொழுது காணுவோம்.

**சரிக்கட்டுப் பதிவு**

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| .. | முதல் மீதான வட்டிக் க/கு பற்று | | .... | |
| | முதல் க/கு | | | .... |
| | (முதல் மீதான வட்டி குறித்த பதிவு) | | | |

இது குறித்து இறுதிக் கணக்குகளில் செய்ய வேண்டிய சரிக்கட்டுகளாவன:

**இலாப - நட்டக் கணக்கு**

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ...... | .... | ...... | .... |
| ...... | .... | ...... | .... |
| முதல் மீதான வட்டி | .... | ...... | .... |
| | .... | | .... |

**இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ...... | .... | | .... |
| ...... | .... | | .... |
| முதல் .. <br> கூட்டுக: <br> முதல் மீது வட்டி .. | .... | | |
| | .... | | .... |

**குறிப்பு:** முதல் மீதான வட்டி தொழிலைச் சார்ந்த செலவு என்பதால் அது இலாப-நட்டக் கணக்கில் பற்றுப் பகுதியில் காண்பிக்கப்படும். அது உரிமையாளருக்குச் சேர வேண்டிய ஆதாயம் என்பதால் இருப்புநிலைக் குறிப்பில் முதலோடு கூட்டிக் காண்பிக்கப்படுகிறது.

### (12) எடுப்புகள் மீதான வட்டி (Interest on Drawings)

உரிமையாளர் அவரது தொழிலில் இட்ட முதலி லிருந்து அவ்வப்பொழுது திரும்ப எடுக்கும் தொகைகள் 'எடுப்புகள்' என அறியப்படுகின்றன. இவ்வாறு நடப்பு ஆண்டில் அவர் திரும்ப எடுக்கும் தொகைகள் மீது வட்டி விதிக்கப்படுகிறது. முதல் மீது எவ்வாறு அனுமதிக்கப்படு கிறதோ அவ்வாறே எடுப்புகள் மீதும் வட்டி விதிப்பதே நியாயமானது.

எடுப்புகள் மீதான வட்டி தொழிலைச் சார்ந்த ஆதாய மாகவும், அதன் உரிமையாளர் சொந்த முறையில் ஏற்க வேண்டிய செலவாகவும் அமைகிறது. அதற்குரிய சரிக்கட்டுப் பதிவு பின்வருமாறு:

**சரிக்கட்டுப் பதிவு**

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை. | வரவுத் தொகை. |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| ... | எடுப்புகள் க/கு பற்று | | .... | |
| | எடுப்புகள் மீதான வட்டிக் க/கு | | | .... |
| | (எடுப்புகள் மீதான வட்டி குறித்த பதிவு) | | | |

இப்பதிவையடுத்து இறுதிக் கணக்குகளில் செய்ய வேண்டிய சரிக்கட்டுகளாவன;

**இலாப-நட்டக் கணக்கு**

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ........... | .... | ........... | .... |
| ........... | .... | எடுப்புகள் மீதான வட்டி | .... |
| | .... | | .... |

**இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ........... | .... | ........... | .... |
| முதல் .... | | ........... | .... |
| **கூட்டுக:** முதல் மீது வட்டி .... | | | |
| **கழிக்க:** எடுப்புகள் .... | | | |
| எடுப்புகள் மீதான வட்டி | .... | | |
| | .... | | .... |

**குறிப்பு:** எடுப்புகள் மீதான வட்டி தொழிலைச் சார்ந்த ஆதாயம் என்பதால் அது இலாப-நட்டக் கணக்கின் வரவுப் பகுதியில் காண்பிக்கப்படுகிறது. அதே சமயம் அது உரிமையாளர் தனிப்பட்ட முறையில் ஏற்க வேண்டிய செலவு என்பதால் இருப்பு நிலைக் குறிப்பில் முதலிலிருந்து கழித்துக் காண்பிக்கப்படுகிறது.

# அத்தியாயம் 15

# சரிக்கட்டுப் பதிவுகளும், இறுதிக் கணக்குகளும்— ஐயக் கடன், வட்டம் சார்ந்த ஒதுக்குகள்

**எடுத்துக்காட்டு 1**

*31-12-1974* அன்று ஒரு வியாபாரியின் பற்பல கடனாளிகளின் மொத்தம் ரூ. *10,000*. இத்தொகையில் *5* விழுக்காட்டை ஐயக் கடன் ஒதுக்காக உருவாக்க வேண்டும். இதற்குரிய குறிப்பேட்டுப் பதிவு, பேரேட்டுக் கணக்கு ஆகியவற்றைக் காண்பிப்பதோடு, இந்த ஒதுக்குக்குரிய சரிக்கட்டுகள் இலாப-நட்டக் கணக்கிலும் இருப்பு நிலைக் குறிப்பிலும் எவ்வாறு தோன்றும் என்பதையும் காட்டுக.

**விடை**

**குறிப்பேடு**

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1974 இச | | | ரூ. | ரூ. |
| 31 | இலாப-நட்டக் க/கு பற்று | | 500 | |
| | ஐயக் கடன் ஒதுக்கு க/கு | | | 500 |
| | (நிகரக் கடனாளிகளான ரூ. 10,000 மீது 5% ஐயக் கடன் ஒதுக்கு உருவாக்குவது குறித்து) | | | |

## பேரேடு

### ஐயக் கடன் ஒதுக்குக் கணக்கு

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ. |
| 1974 திச 31 | இருப்பு கீ/இ | 500 | 1974 திச 31 | இலாப-நட்டக் க/கு | 500 |
| | | 500 | | | 500 |
| | | | 1975 சன 1 | இருப்பு கீ/கொ | 500 |

குறிப்பு : இக் கணக்கு அடுத்த ஆண்டுக்குரிய பேரேட்டில் தொடர்ந்து தோன்றும். அடுத்த ஆண்டு இறுதியில் என்ன செய்யப்படும் என்பதை எடுத்துக்காட்டு 4, அதற்குப் பிறகு வரும் எடுத்துக்காட்டுகளில் காண்க.

### இலாப - நட்டக் கணக்கு

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ...... | .... | ...... | .... |
| ...... | .... | ...... | .... |
| ஐயக் கடன் ஒதுக்கு | 500 | | |
| | .... | | .... |

**இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | | தொகை |
|---|---|---|---|---|
| | ரூ. | | | ரூ. |
| | | ...... | | .... |
| ...... | .... | பற்பல கடனாளி | | |
| ...... | .... | | | |
| ...... | .... | கள் | 10,000 | |
| | | கழிக்க: | | |
| | | ஐயக்கடன் ஒதுக்கு | 500 | 9,500 |
| | .... | | | .... |

**எடுத்துக்காட்டு 2**

31-12-1970 அன்று ஒரு வியாபாரியின் பற்பல கடனாளிகள் மொத்தம் ரூ. 10,000. இதில் ரூ. 500 வாராக் கடன் எனக் கருதப் படுவதால் அதைப் போக்கெழுத வேண்டும். மேலும், 5% அளவிற்கு ஐயக்கடன் ஒதுக்கு உருவாக்க வேண்டும் எனவும் கருதப் படுகிறது. இவை பற்றிக் குறிப்பேடு, பேரேடு, இலாப-நட்டக் கணக்கு, இருப்பு நிலைக் குறிப்பு ஆகியவற்றில் தோன்றும் பதிவுகளைக் காண்பிக்க.

**விடை**

**விளக்கம் :** இந்த எடுத்துக் காட்டில் இருப்பாய்வைத் தயாரித்த பிறகு வாராக்கடன் என ரூ. 500- போக்கெழுத வேண்டும் என இருப்பதைக் கவனிக்க. இத்தொகையைப் போக்கெழுதிய பிறகு எஞ்சிநிற்கும் நிகரப் பற்பல கடனாளிகள் ரூ. 9,500. 5%அளவிற்கு ஐயக்கடன் ஒதுக்கை இந்த நிகரக் கடனாளிகள் மீதுதான் உருவாக்க வேண்டும் எனச் சென்ற அத்தியாயத்தில் சொல்லப்பட்டதை ஈண்டு நினைவிற்கொள்க.

## குறிப்பேடு

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1970 திச 31 | | | ரூ. | ரூ. |
| | வாராக் கடன் க/கு பற்று<br>பற்பலகடனாளிகள் க/கு | | 500 | 500 |
| | (வாராக் கடன் ரூ. 500ஐப் போக்கெழுதுவது குறித்த பதிவு) | | | |
| | இலாப-நட்டக் க/கு பற்று<br>ஐயக்கடன் ஒதுக்குக்க/கு | | 475 | 475 |
| | (நிகரக் கடனாளிகளாகிய ரூ. 9,500 மீது 5% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கு உருவாக்குவது குறித்த பதிவு) | | | |

## பேரேடு

### வாராக்கடன் கணக்கு

**விடை.**

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| 1970 திச | | ரூ. | 1970 திச | | ரூ. |
| 31 | பற்பல கடனாளிகள் க/கு | 500 | 31 | இலாப நட்டக் க/கு மாற்றுதல் | 500 |
| | | 500 | | | 500 |

**குறிப்பு:** வாராக் கடன் கணக்கு ஒரு பெயரளவுக் கணக்கு (Nominal Account). ஆதலின் ஆண்டிறுதியில் அது இலாப-நட்டக்கணக்கிற்கு மாற்றப்படுகிறது.

## ஐயக் கடன் ஒதுக்குக் கணக்கு

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| 1970 திச 31 | இருப்பு கீ/இ | ரூ. 475 | 1970 திச 31 | இலாப-நட்டக் க/கு | ரூ. 475 |
| | | 475 | | | 475 |
| | | | 1971 சன 1 | இருப்பு கீ/கொ | 475 |

## இலாப - நட்டக் கணக்கு

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| வாராக்கடன் | 500 | | .... |
| ஐயக் கடன் ஒதுக்கு | 475 | | .... |
| ...... | .... | | |
| | .... | | .... |

**இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| .............. | ........ | .............. | ........ |
| .............. | ........ | பற்பல கடனாளிகள் 10,000<br>கழிக்க: வாராக் கடன் (புதியது) 500<br>9,500<br>கழிக்க: ஐயக் கடன் ஒதுக்கு 475 | 9,025 |
| | ...... | | ...... |

**குறிப்பு:** இருப்பாய்வைத் தயாரித்த பிறகு போக்கெழுதப்படும் வாராக் கடனை வசதி கருதிப் 'புதியது' என்ற அடைமொழியோடு இங்கு கூறப்பட்டிருக்கிறது. ஐயக்கடன் ஒதுக்குக்குரிய தொகையைக் கணக்கிடுவதற்காக 'நிகரக் கடனாளி'களைக் கண்டுபிடிப்பதற்கு இந்த வாராக் கடனைப் (புதியது) பற்பலகடனாளிகளிலிருந்து கழிக்க வேண்டும்.

**எடுத்துக்காட்டு 3**

*31-12-1970 அன்று ஒரு வியாபாரியின் பற்பல கடனாளிகள் ரூ. 10,300 ஆக இருந்தனர். அவர்கள் கடனில் ரூ. 300 மீட்க இயலாமல் இருந்ததையடுத்து அதைப் போக்கெழுதி விடுவதெனத் தீர்மானிக்கப்பட்டது. 5% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கும் 3% அளவிற்கு வட்ட ஒதுக்கும் உருவாக்குவது எனவும் கருதப்பட்டது.*

இத் தீர்மானங்களைக் குறிப்பேடு, பேரேடு மூலமாக எவ்வாறு நிறைவேற்றுவது?

இத் தீர்மானங்களை ஒட்டிய சரிக்கட்டுகள் இலாப - நட்டக் கணக்கிலும், இருப்பு நிலைக் குறிப்பிலும் எவ்வாறு தோன்றும்?

**விடை.**

## குறிப்பேடு

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1970 | | | ரூ. | ரூ. |
| திச 31 | வாராக் கடன் க/கு பற்று | | 300 | |
| | பற்பல கடனாளிகள் க/கு | | | 300 |
| | (வாராக் கடனைப் போக் கெழுதுவது குறித்த பதிவு) | | | |
| | இலாப-நட்டக் க/கு பற்று | | | |
| | ஐயக் கடன் ஒதுக்குக் க/கு | | 500 | 500 |
| | (நிகரக் கடனாளிகள் தொகையான ரூ. 10,000 மீது 5% ஐயக் கடன் ஒதுக்கு உருவாக்குதல் குறித்த பதிவு) | | | |
| | இலாப-நட்டக் க/கு பற்று | | | |
| | கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்குக் க/கு | | 285 | 285 |
| | (திடமான கடனாளிகள் தொகையான ரூ. 9,500 மீது 3% வட்ட ஒதுக்கு உருவாக்குவது குறித்த பதிவு) | | | |

**செய்முறைக் குறிப்பு:**

(1) ஐயக் கடன் ஒதுக்கை நிகரக் கடனாளிகள் மீது கணக்கிட வேண்டும். இருப்பாய்வைத் தயாரித்த பிறகு போக்கெழுதப்படும் வாராக்கடனைப் (புதியது) பற்பல கடனாளிகள் தொகையிலிருந்து கழித்த நிலையில் எஞ்சியிருக்கும் கடனாளிகளே 'நிகரக்கடனாளிகள்'. இந்த எடுத்துக் காட்டில் நிகரக் கடனாளிகள் ரூ. 10,000 ஆவர் (அதாவது ரூ. 10,300—300). இவர்கள் மீது 5% ரூ. 500. இதுவே உருவாக்க வேண்டிய ஐயக் கடன் ஒதுக்குக் குரிய தொகையாகும்.

(2) வட்ட ஒதுக்கைத் திடமான கடனாளிகள் மீது கணக்கிட வேண்டும். நிகரக் கடனாளிகளிலிருந்து ஐயக் கடன் ஒதுக்கைக் கழித்தால் கிடைக்கும் தொகையே 'திடமான கடனாளிகள்' ஆவர். இந்த எடுத்துக்காட்டில் திடமான கடனாளிகள் ரூ. 9,500 ஆவர்; (அதாவது ரூ. 10,000—500). இவர்கள் மீது 3% ரூ. 285 ஆகும். இதுவே உருவாக்க வேண்டிய வட்ட ஒதுக்குக்குரிய தொகையாகும்.

## பேரேடு

### வாராக் கடன் கணக்கு

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| 1970 திச 31 | பற்பல கடனாளிகள் க/கு | ரூ. 300 | 1970 திச 31 | இலாப-நட்டக் க/கு மாற்றப் படுதல் | ரூ. 300 |
| | | 300 | | | 300 |

### ஐயக் கடன் ஒதுக்குக் கணக்கு

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| 1970 திச 31 | இருப்பு கீ/இ | ரூ. 500 | 1970 திச 31 | இலாப நட்டக் க/கு | ரூ. 500 |
| | | 500 | | | 500 |
| | | | 1971 சன. 1 | இருப்பு கீ/கொ | 500 |

### கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்குக் கணக்கு

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| 1970 திச 31 | இருப்பு கீ/இ | ரூ. 285 | 1970 திச 31 | இலாப-நட்டக் க/கு | ரூ. 285 |
| | | 285 | | | 285 |
| | | | 1971 சன 1 | இருப்பு கீ/கொ | 285 |

## இலாப-நட்டக் கணக்கு

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ...... | .... | ...... | .... |
| வாராக் கடன் | 300 | ...... | .... |
| ஐயக் கடன் ஒதுக்கு | 500 | | |
| கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்கு | 285 | | |
| | .... | | .... |

## 31-12-1970 அன்றைய இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | | தொகை |
|---|---|---|---|---|
| | ரூ. | | | ரூ. |
| ...... | .... | ...... | | .... |
| ...... | .... | ...... | | .... |
| | | பற்பல கடனாளிகள் | 10,300 | |
| | | கழிக்க: வாராக்கடன் (புதியது) | 300 | |
| | | | 10,000 | |
| | | கழிக்க: ஐயக் கடன் ஒதுக்கு | 500 | |
| | | | 9,500 | |
| | | கழிக்க: வட்ட ஒதுக்கு | 285 | |
| | | | | 9,215 |
| | .... | | | .... |

**எடுத்துக்காட்டு 4**

திரு. கண்ணன் என்பவரது 1979 திசம்பர் 31ஆம் நாளன்றைய இருப்பாய்வில் பின்வரும் செய்திகள் தோன்றின:

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| கடனாளிகள் | 34,000 | |
| வாராக் கடன் | 600 | |
| ஐயக் கடன் ஒதுக்கு (1-1-1979) | | 1,400 |

5% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கைப் பேண வேண்டும் என நீவிர் கேட்டுக் கொள்ளப்படுகிறீர்.

இதற்குரிய குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருவதோடு, வாராக் கடன் க/கு, ஐயக் கடன் ஒதுக்குக் க/கு ஆகியவற்றையும் காட்டுக.

இச் செய்திகள் இலாப-நட்டக் கணக்கு, இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றில் எவ்வாறு தோன்றும் எனவும் காட்டிடுக.

**விடை**

**விளக்கம் :** (1) இருப்பாய்வில் தோன்றும் ஐயக்கடன் ஒதுக்கு பழைய (அதாவது சென்ற ஆண்டு களில் உருவாக்கப் பட்டு நடப்பு ஆண்டு ஏடுகளில் தொடர்ந்து தோன்றும்) ஒதுக்காகும்.

(2) இருப்பாய்வில் இவ்வாறு பழைய ஐயக் கடன் ஒதுக்கு தோன்றும்பொழுது, நடப்பு ஆண்டில் போக்கெழுதிய வாராக் கடனை இந்த ஒதுக்குக் கணக்கிற்கு (ஐயக்கடன் ஒதுக்கிற்கு) மாற்ற வேண்டும்.

(3) அந்நிலையில் ஐயக் கடன் ஒதுக்குக் கணக்கில் எஞ்சியுள்ள தொகையோடு எவ்வளவு தொகையைச் சேர்த்தால் தேவையான ஒதுக்கு இருக்கும் எனக் கணக்கிட்டு அத்தொகையை இலாப-நட்டக் கணக்கில் பற்றும், ஐயக் கடன் ஒதுக்குக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

அதாவது, இந்த எடுத்துக்காட்டிலுள்ள பழைய ஐயக் கடன் ஒதுக்கு ரூ. 1,400.

இந்த ஒதுக்குக் கணக்கிற்கு வாராக் கடனாகிய ரூ. 600ஐ மாற்றும் பொழுது எஞ்சியுள்ள ஒதுக்கு ரூ. 800 ஆகும்.

நிகரக் கடனாளிகளாகிய ரூ. 34,000 மீது 5% எனத் தேவையான ஒதுக்கு ரூ. 1,700.

எனவே தேவையான ஒதுக்கைப் பேணுவதற்காக இலாப-நட்டக் கணக்கில் பற்றும், ஐயக் கடன் ஒதுக்குக் கணக்கில் வரவும் வைக்க வேண்டிய தொகை ரூ. 900 (அதாவது 1,700—800) ஆகும்.

இதையே வேறொரு முறையிலும் கண்டு பிடிக்கலாம். அஃது பின்வருமாறு:

| | ரூ. |
|---|---|
| தேவையான புதிய ஒதுக்கு (அதாவது 34,000இல் 5%) .. .. | 1,700 |
| **கூட்டுக :** | |
| வாராக் கடன் .. .. | 600 |
| | 2,300 |
| **கழிக்க :** | |
| பழைய (அதாவது இருப்பாய்விலுள்ள) ஒதுக்கு .. .. | 1,400 |
| இலாப-நட்டக் கணக்கில் பற்றிடவேண்டிய தொகை .. .. | 900 |

**குறிப்பேடு**

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1979 | | | ரூ. | ரூ. |
| திச 31 | ஐயக் கடன் ஒதுக்குக் க/கு பற்று | | 600 | |
| | வாராக் கடன் க/கு | | | 600 |
| | (வாராக் கடனை ஐயக் கடன் ஒதுக்குக் கணக்கிற்கு மாற்றுதல் குறித்த பதிவு) | | | |
| | இலாப-நட்டக் க/கு பற்று | | 900 | |
| | ஐயக் கடன் ஒதுக்குக் க/கு | | | 900 |
| | (ஐயக்கடன் ஒதுக்கை 5% அளவிற்குப் பேணுதல் குறித்த பதிவு) | | | |

**பேரேடு**

**வாராக் கடன் கணக்கு**

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| 1979 | | ரூ. | 1979 | | ரூ. |
| திச 31 | இருப்பு கீ/கொ | 600 | திச 31 | ஐயக் கடன் ஒதுக்குக்க/கு மாற்றுதல் | 600 |
| | | 600 | | | 600 |

**குறிப்பு:** இருப்பாய்வில் ஐயக் கடன் ஒதுக்கு இல்லாத பொழுது, வாராக் கடன் கணக்கை இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்றி முடித்ததை இதற்கு முந்தைய எடுத்துக் காட்டுகளில் பார்த்தோம். இந்த எடுத்துக் காட்டில் இருப்பாய்வில் ஐயக் கடன் ஒதுக்கு இருப்பதால், வாராக் கடன் கணக்கை ஐயக் கடன் ஒதுக்குக் கணக்கிற்கு மாற்றி முடிப்பதை மேலே காண்க.

## ஐயக் 'கடன்' ஒதுக்குக் கணக்கு

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| 1979 திச 31 | வாராக் கடன் க/கு | ரூ. 600 | 1979 சன 1 | இருப்பு கீ/கொ | ரூ. 1,400 |
| | இருப்பு கீ/இ | 1,700 | திச 31 | இலாப-நட்டக்க/கு | 900 |
| | | 2,300 | | | 2,300 |
| | | | 1980 சன 1 | இருப்பு கீ/கொ | 1,700 |

## இலாப-நட்டக்கணக்கு

| விவரம் | | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|---|
| | | ரூ. | | ரூ. |
| ...... | | .... | ...... | .... |
| | | | ...... | .... |
| ஐயக் கடன் ஒதுக்கு: | | | | |
| தேவையான புதிய ஒதுக்கு | 1,700 | | | |
| கூட்டுக: | | | | |
| வாராக் கடன் | 600 | | | |
| | 2,300 | | | |
| கழிக்க: | | | | |
| பழைய ஒதுக்கு | 1,400 | 900 | | |
| | | .... | | .... |

## இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ...... | .... | ...... | .... |
| ...... | .... | பற்பல கடனாளிகள் 34,000 | .... |
| ...... | .... | **கழிக்க:** வாராக்கடன் (புதியது) .. | .... |
| | | 34,000 | |
| | | **கழிக்க:** ஐயக்கடன் ஒதுக்கு (புதியது) 1,700 | 32,300 |
| | .... | | .... |

**எடுத்துக்காட்டு 5**

1972 திசம்பர் 31ஆம் நாளன்று பீட்டர் என்பவரது ஏடுகளிலுள்ள ஐயக்கடன் ஒதுக்குக் கணக்கு ரூ. 700 வரவு-இருப்புக் காட்டியது. 1973ஆம் ஆண்டில் ஏற்பட்ட வாராக் கடன் ரூ. 560 ஆகும். 1973 திசம்பர் 31ஆம் நாளன்று பற்பல கடனாளிகள் தொகை ரூ. 9,000.

கடனாளிகள் மீது ஐயக் கடன் ஒதுக்கு என 5% பேண வேண்டும்.

இதற்குரிய குறிப்பேட்டுப் பதிவைத் தருவதோடு 1973 திசம்பர் 31ஆம் நாளன்றைய ஐயக் கடன் ஒதுக்குக் கணக்கு, இலாப-நட்டக் கணக்கு, இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றையும் காட்டுக.

விடை

## குறிப்பேட்டுப் பதிவுகள்

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1973 திச 31 | | | ரூ. | ரூ. |
| | ஐயக் கடன் ஒதுக்குக் க/கு பற்று | | 560 | |
| | வாராக் கடன் க/கு | | | 560 |
| | (போக்கெழுதிய வராக்கடனை ஐயக் கடன் ஒதுக்குக் கணக்கிற்கு மாற்றி முடித்தல்) | | | |
| | இலாப-நட்டக் க/கு பற்று | | 310 | |
| | ஐயக்கடன் ஒதுக்குக் க/கு | | | 310 |
| | (கடனாளிகள் மீது 5% அளவிற்கு ஒதுக்கு உருவாக்குதல்) | | | |

குறிப்பு: 5% அளவிற்குப் பேணுவதற்குரிய தொகையைக் கணக்கிடுதல்.

| | ரூ. |
|---|---|
| பற்பல கடனாளிகள் (31-12-1973 அன்று) | 9,000 |
| **கழிக்க:** | |
| புதிய வாராக் கடன் (இருப்பாய்வு தயாரித்த பிறகு போக்கெழுதிய வாராக் கடன்) | — |
| நிகரக் கடனாளிகள் | 9,000 |

| | ரூ. |
|---|---|
| நிகரக் கடனாளிகள் மீது 5% அளவிற்குப் புதிய ஒதுக்கு | 450 |
| **கூட்டுக:** | |
| வாராக்கடன் | 560 |
| | 1,010 |
| **கழிக்க:** | |
| ஏற்கனவே யுள்ள ஐயக்கடன் ஒதுக்கு | 700 |
| ஐயக் கடன் ஒதுக்கை 5% அளவிற்குப் பேணுவதற்குத் தேவையான தொகை | 310 |

## பேரேடு

### ஐயக்கடன் ஒதுக்குக் கணக்கு

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| 1973 | | ரூ. | 1973 | | ரூ. |
| திச. 31 | வாராக் கடன்-மாற்றப் பட்டது | 560 | சன 1 | இருப்பு கீ/கொ | 700 |
| | இருப்பு கீ/இ | 450 | திச 31 | இலாப நட்டக் க/கு | 310 |
| | | 1,010 | | | 1,010 |
| | | | 1974 சன 1 | இருப்பு கீ/கொ | 450 |

### 1973 திசம்பர் 31ஆம் நாளுடன் முடிவுறும் ஆண்டுக்குரிய இலாப-நட்டக் கணக்கு

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ...... | .... | ...... | .... |
| | | ...... | .... |
| ஐயக்கடன்<br>ஒதுக்கு:<br>புதிய<br>ஒதுக்கு 450<br>கூட்டுக:<br>வாராக் கடன் 560<br>1,010<br>கழிக்க:<br>பழைய<br>ஒதுக்கு 700 | 310 | | |
| ...... | .... | | |
| | .... | | .... |

### 1973 திசம்பர் 31ஆம் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ...... | .... | ...... | .... |
| ...... | .... | பற்பல<br>கடனாளி<br>கள் 9,000<br>கழிக்க:<br>ஐயக்கடன்<br>ஒதுக்கு 450 | 8,550 |
| | .... | | .... |

## கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்கு

**எடுத்துக்காட்டு 6**

1-1-1972 அன்று கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்குக் கணக்கு காட்டிய வரவு-இருப்பு ரூ. 250. 1972ஆம் ஆண்டில் உண்மையாகவே அனுமதித்த வட்டம் ரூ. 180. 31-12-1972 அன்றிருந்த பற்பல கடனாளிகள் ரூ. 6,000 ஆவர்.

கடனாளிகள் மீது 5% அளவிற்கு வட்ட ஒதுக்கு பேண வேண்டும்.

இதற்காகக் குறிப்பேடு, பேரேடு, இலாப-நட்டக் க/கு, இருப்புநிலைக் குறிப்பு இவற்றில் செய்ய வேண்டிய பதிவுகளைக் காட்டுக.

**விடை**

### குறிப்பேடு

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1972 | | | ரூ. | ரூ. |
| திச 31 | வட்ட ஒதுக்குக் க/கு பற்று | | 180 | |
| | வட்டக் க/கு | | | 180 |
| | (அனுமதித்த வட்டத்தை வட்ட ஒதுக்குக் கணக்கிற்கு மாற்றி முடித்தல்) | | | |
| | இலாப-நட்டக் க/கு பற்று | | 230 | |
| | வட்ட ஒதுக்குக் க/கு | | | 230 |
| | (வட்ட ஒதுக்கை 5% அளவிற்குப் பேணுதற்குரிய பதிவு) | | | |

**குறிப்பு :**

### 5% அளவிற்குப் பேணுவதற்குத் தேவையான தொகையைக் கணக்கிடுதல்

| | ரூ. |
|---|---|
| 31-12-1972 அன்று பற்பல கடனாளிகள் .. | 6,000 |
| **கழிக்க:** | |
| புதிய வாராக் கடன் .. | — |
| நிகரக் கடனாளிகள் .. | 6,000 |
| **கழிக்க :** | |
| ஐயக் கடன் ஒதுக்கு (31-12-1972 அன்று) .. | — |
| திடமான கடனாளிகள் .. | 6,000 |
| திடமான கடனாளிகள் மீது 5% அளவிற்குப் புதிய வட்ட ஒதுக்கு .. | 300 |
| **கூட்டுக :** | |
| 1972ஆம் ஆண்டில் அனுமதித்த வட்டம் .. | 180 |
| | 480. |
| **கழிக்க:** | |
| ஏற்கனவே யுள்ள (பழைய) வட்ட ஒதுக்கு .. | 250 |
| வட்ட ஒதுக்கை 5% அளவிற்குப் பேணுவதற்குத் தேவையான தொகை .. | 230 |

### பேரேடு
### கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்குக் க/கு

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| 1972 | | ரூ. | 1972 | | ரூ. |
| திச 31 | அனுமதித்த வட்டம்-மாற்றப்பட்பட்டது | 180 | சன 1 | இருப்பு கீ/கொ | 250 |
| | இருப்பு கீ/இ | 300 | திச 31 | இலாப நட்டக் க/கு | 230 |
| | | 480 | | | 480 |
| | | | 1972 சன 1 | இருப்பு கீ/கொ | 300 |

**இலாப-நட்டக் க/கு**

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ........... | .... | ........... | .... |
| கடனாளிகள் மீது வட்ட ஒதுக்கு:<br>புதிய ஒதுக்கு 300<br>**கூட்டுக:**<br>அனுமதித்த வட்டம் 180<br>480<br>**கழிக்க:**<br>பழைய ஒதுக்கு 250 | 230 | ........... | .... |
| | .... | | .... |

## இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | | தொகை |
|---|---|---|---|---|
| | ரூ. | | | ரூ. |
| .......... | .. | பற்பல கடனாளிகள் | 6,000 | |
| .......... | .. | **கழிக்க:** புதிய வாராக் கடன் | | |
| | | | 6,000 | |
| | | **கழிக்க:** ஐயக் கடன் ஒதுக்கு (புதியது) | — | |
| | | | 6,000 | |
| | | **கழிக்க:** வட்ட ஒதுக்கு (புதியது) | 300 | 5,700 |
| | .... | | | .... |

### ஐயக் கடன் ஒதுக்கு, வட்ட ஒதுக்கு ஆகிய இரண்டும் உள்ள எடுத்துக்காட்டு

**எடுத்துக்காட்டு 7**

*1-1-1974 அன்று ஐயக் கடன் ஒதுக்குக் கணக்கு ரூ. 3,000மும், கடனாளிகள் மீதான வட்டக் கணக்கு ரூ. 2,850ம் வரவு - இருப்புக் காட்டின. 1974 ஆம் ஆண்டில் ஏற்பட்டுப் போக்கெழுதப்பட்ட வாராக் கடன் ரூ. 2,400; அனுமதிக்கப் பட்ட வட்டம் ரூ. 2,550. 31-12-1974 அன்றிருந்த பற்பல கடனாளிகள் ரூ. 70,000.*

*கடனாளிகள் மீது 5% ஐயக் கடன் ஒதுக்கும், 5% வட்ட ஒதுக்கும் பேண வேண்டும்.*

*இதற்குக் குறிப்பேடு, பேரேடு, இலாப - நட்டக் கணக்கு, இருப்பு நிலைக் குறிப்பு ஆகியவற்றில் செய்யவேண்டிய பதிவு களைக் காட்டிடுக.*

விடை

குறிப்பு

**5% அளவிற்கு ஒதுக்குகளைப் பேணத் தேவையான தொகைகளைக் கணக்கிடுதல்**

| | ரூ. |
|---|---|
| (அ) 31-12-1974 அன்றிருந்த பற்பல கடனாளிகள் .. | 70,000 |
| **கழிக்க:** | |
| புதிய வாராக்கடன் (31-12-74 அன்று இருப்பாய்வு தயாரித்த பிறகு போக் கெழுதிய வாராக் கடன்) .. | .. |
| நிகரக் கடனாளிகள் .. | 70,000 |
| நிகரக் கடனாளிகள் மீதான புதிய ஐயக் கடன் ஒதுக்கு = $70,000 \times \frac{5}{100}$ .. | 3,500 |
| திடமான கடனாளிகள் .. | 66,500 |
| திடமான கடனாளிகள் மீதான புதிய வட்ட ஒதுக்கு = $66,500 \times \frac{5}{100}$ .. | 3,325 |

| | ரூ. |
|---|---|
| (ஆ) புதிய ஐயக் கடன் ஒதுக்கு .. | 3,500 |
| **கூட்டுக:** | |
| 1974 ஆம் ஆண்டில் ஏற்பட்ட வாராக்கடன் .. | 2,400 |
| | 5,900 |
| **கழிக்க:** | |
| 1-1-1974 அன்றிருந்த பழைய ஐயக் கடன் ஒதுக்கு .. | 3,000 |
| 5% ஐயக் கடன் ஒதுக்கிற்குத் தேவையான தொகை .. | 2,900 |

| | ரூ. |
|---|---|
| (இ) புதிய வட்ட ஒதுக்கு .. | 3,325 |
| **கூட்டுக:** | |
| 1974 இல் அனுமதித்த வட்டம் .. | 2,550 |
| | 5,875 |
| **கழிக்க:** | |
| 1-1-1774 அன்றிருந்த பழைய வட்ட ஒதுக்கு .. | 2,850 |
| 5% வட்ட ஒதுக்கிற்குத் தேவையான தொகை .. | 3,025 |

## குறிப்பேடு

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1974 | | | ரூ. | ரூ. |
| திச 31 | ஐயக் கடன் ஒதுக்குக் க/கு பற்று | | 2,400 | |
| | வாராக் கடன் க/கு | | | 2,400 |
| | (வாராக் கடன் கணக்கை ஐயக் கடன் ஒதுக்குக் கணக்கிற்கு மாற்றி முடித்தல்) | | | |
| | இலாப - நட்டக் க/கு பற்று | | 2,700 | |
| | ஐயக்கடன் ஒதுக்கு க/கு | | | 2,700 |
| | (5% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கைப் பேணுவதற்குத் தேவையான பதிவு) | | | |
| | கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்குக் க/கு பற்று | | 2,550 | |
| | அனுமதித்த வட்டக் க/கு | | | 2,550 |
| | (அனுமதித்த வட்டக் கணக்கை வட்ட ஒதுக்குக் கணக்கிற்கு மாற்றி முடித்தல்) | | | |
| | இலாப-நட்டக் க/கு பற்று | | 3,025 | |
| | கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்குக் க/கு | | | 3,025 |
| | (5% அளவிற்கு வட்ட ஒதுக்கைப் பேணுவதற்குத் தேவையான பதிவு) | | | |

## பேரேடு

### வாராக் கடன் க/கு

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ. |
| 1974 சனவரி முதல் திசம்பர் முடிய | பற்பல கடனாளிகள் க/கு | 2,400 | 1974 திச 31 | ஐயக் கடன் ஒதுக்குக் க/கு -மாற்றப் படுதல் | 2,400 |
| | | 2,400 | | | 2,400 |

**குறிப்பு:** வாராக் கடன் கணக்கு, ஐயக் கடன் ஒதுக்குக் கணக்கிற்கு மாற்றப்பட்டு முடிக்கப்படுவதைக் காண்க. இக் கணக்கில் இருப்பு ஏதும் இல்லையாதலால் இது இலாப - நட்டக் கணக்கில் தோன்றாது.

அதாவது வாராக் கடன் கணக்கும் ஐயக் கடன் ஒதுக்குக் கணக்கும் இருப்பாய்வில் தோன்றினால், வாராக் கடன் கணக்கை ஐயக் கடன் ஒதுக்குக் கணக்கிற்கு மாற்றியே ஆகவேண்டும்.

### ஐயக்கடன் ஒதுக்குக் க/கு

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ. |
| 1974 திச 31 | வாராக் கடன் க/கு. | 2,400 | 1974 சன 1 | இருப்பு கீ/கொ | 3,000 |
| | இருப்பு கீ/இ | 3,500 | திச 31 | இலாப - நட்டக் க/கு | 2,900 |
| | | 5,900 | | | 5,900 |
| | | | 1975 சன 1 | இருப்பு கீ/கொ | 3,500 |

## அனுமதித்த வட்டக் க/கு

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| 1974 சனவரி முதல் திசம்பர் | பற்பல கடனாளிகள் க/கு | ரூ. 2,550 | 1974 திச 31 | வட்ட ஒதுக்குக் க/கு மாற்றபடுதல் | ரூ. 2,550 |
| | | 2,550 | | | 2,550 |

## கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்குக் க/கு

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| 1974 திச 31 | வட்டக் க/கு -மாற்றப்பட்டது | ரூ. 2,550 | 1974 சன 1 | இருப்பு கீ/கொ | ரூ. 2,850 |
| | இருப்பு கீ/இ | 3,325 | திச 31 | இலாப - நட்டக் க/கு | 3,025 |
| | | 5,875 | | | 5,875 |
| | | | 1975 சன 1 | இருப்பு கீ/கொ | 3.325 |

## இலாப-நட்டக் கணக்கு

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ....... | .... | ....... | .... |
| ஐயக் கடன் ஒதுக்கு:<br>புதிய ஒதுக்கு 3,500<br>கூட்டுக:<br>வாராக் கடன் 2,400<br>5,900<br>கழிக்க:<br>பழைய ஒதுக்கு 3,000 | 2,900 | ....... | .... |
| கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்கு:<br>புதிய வட்ட ஒதுக்கு 3,325<br>கூட்டுக:<br>அனுமதித்த வட்டம் 2,550<br>5,875<br>கழிக்க:<br>பழைய வட்ட ஒதுக்கு 2,850 | 3,025 | | |
| ...... | .. | | |
| | .... | | .... |

### இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| | | ...... | |
| ...... | .... | ...... | .... |
| ...... | .... | பற்பல கடனாளிகள் 70,000 | .... |
| | | கழிக்க : புதிய கடன் ஒதுக்கு 3,500 | |
| | | 66,500 | |
| | | கழிக்க : புதிய வட்ட ஒதுக்கு 3,325 | |
| | | | 63,175 |
| | ..... | | ..... |

(கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்கு)

**எடுத்துக்காட்டு 8**

ஒரு வாணிகரின் 1973 திசம்பர் 31 ஆம் நாளன்றைய இருப்பாய்வு பற்பல கடனீந்தோர் இருப்பு என ரூ. 8,000 காட்டுகிறது. அந்த வாணிகர் கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்கு என 3% அளவிற்கு உருவாக்க விழைகிறார். இது குறித்துக் குறிப்பேடு, பேரேடு, இலாப-நட்டக் க/கு, இருப்புநிலைக் குறிப்பு இவற்றில் செய்யப்படும் பதிவுகளைக் காட்டுக.

விடை

## குறிப்பேடு

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1973 |  |  | ரூ. | ரூ. |
| திச 31 | கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்குக் க/கு பற்று |  | 240 |  |
|  | இலாப - நட்டக் க/கு |  |  | 240 |
|  | (கடனீந்தோர் மீது 3% அளவிற்கு வட்ட ஒதுக்கு உருவாக்குவது குறித்த பதிவு) |  |  |  |

## பேரேடு

### கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்குக் க/கு

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| 1973 |  | ரூ. | 1973 |  | ரூ. |
| திச 31 | இலாப-நட்டக் க/கு | 240 | திச 31 | இருப்பு கீ/இ | 240 |
|  |  | 240 |  |  | 240 |
| 1974 சன 1 | இருப்பு கீ/கொ | 240 |  |  |  |

**இலாப-நட்டக் கணக்கு**

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ....... | .... | ....... | .... |
| ....... | .... | கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்கு | 240 |
| ....... | .... | | |
| | .... | | .... |

**31-12-1973ஆம் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ....... | .... | ....... | .... |
| பற்பல கடனீந்தோர் 8,000 | | ....... | .... |
| **கழிக்க :** கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்கு 240 | 7,760 | ....... | .... |
| ....... | .... | | |
| | .... | | .... |

**எடுத்துக்காட்டு—9**

(கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்கு, பெற்ற வட்டம் ஆகியவை இணைந்த எடுத்துக்காட்டு)

*31-12-1974* அன்று அன்பு என்பவரின் ஏடுகள் கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்குக் கணக்கில் ரூ. *300* பற்று

இருப்புக் காட்டின. 1975ஆம் ஆண்டில் கடனீந்தோரிடமிருந்து அவர் பெற்ற வட்டம் ரூ. 350 ஆகும். 31-12-1975 அன்று அவருடைய பற்பல கடனீந்தோருடைய மொத்தம் ரூ. 7,000. கடனீந்தோர் மீது 4% அளவிற்கு வட்ட ஒதுக்குப் பேண வேண்டும். இதுபற்றிக் குறிப்பேடு, பேரேடு, இலாப-நட்டக் க/கு, இருப்புநிலைக் குறிப்பு இவற்றில் செய்ய வேண்டிய பதிவுகளைக் காட்டுக.

**விடை**

**குறிப்பு:** பெற்ற வட்டக் கணக்கும் (Discount Received A/c) கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்குக் கணக்கும் இருப்பாய்வில் தோன்றினால், பெற்ற வட்டக் கணக்கை கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்குக் கணக்கிற்கு மாற்றி முடிக்கவேண்டும். அந்நிலையில் பெற்ற வட்டக் க/கு இலாப நட்டக் கணக்கில் தோன்றாது.

**குறிப்பேடு**

| தேதி | விவரம் | பே. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1975 | | | ரூ. | ரூ. |
| டிச. 31 | பெற்ற வட்டக் க/கு பற்று | | 350 | |
| | கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்கு | | | 350 |
| | (பெற்ற வட்டக் கணக்கைக் கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்குக் கணக்கிற்கு மாற்றி முடிக்க) | | | |
| | கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்குக் க/கு பற்று | | 330* | |
| | இலாப - நட்டக் க/கு | | | 330 |
| | (கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்கை 4% அளவிற்குப் பேணுவது குறித்த பதிவு) | | | |

*குறிப்பு:

வட்ட ஒதுக்கை 4% அளவிற்குப் பேணுவதற்குத் தேவையான தொகையைக் கணக்கிடல்

| | ரூ. |
|---|---|
| கடனீந்தோர் மீதான புதிய வட்ட ஒதுக்கு $7,000 \times \frac{4}{100}$ .. | 280 |
| **கூட்டுக:** 1975-ல் பெற்ற வட்டம் .. | 350 |
| | 630 |
| **கழிக்க:** 31-12-1974 அன்றைய பழைய வட்ட ஒதுக்கு | 300 |
| கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்கை 4% அளவிற்குப் பேணுவதற்குத் தேவையான தொகை .. | 330 |

**பேரேடு**

**பெற்ற வட்டக் கணக்கு**

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| 1975 திச. 31 | கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்குக் க/கு மாற்றுதல் | ரூ. 350 | 1975 சன. முதல் திச. முடிய | பற்பல கடனீந்தோர் | ரூ. 350 |
| | | 350 | | | 350 |

**குறிப்பு:** பெற்ற வட்டக் கணக்கு முடிக்கப்பெற்றதைக் கவனி.

## கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்குக் க/கு

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| 1975 | | ரூ. | 1975 | | ரூ. |
| சன.1 | இருப்பு கீ/கொ | 300 | திச. 31 | பெற்ற வட்டக் க/கு மாற்றப் படுதல் | 350 |
| திச. 31 | இலாப - நட்டக் க/கு | 330 | ,, | இருப்பு கீ/இ | 280 |
| | | 630 | | | 630 |
| 1976 சன.1 | இருப்பு கீ/கொ | 280 | | | |

**இலாப-நட்டக் கணக்கு**

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ........... | .. | ........... | .. |
| ........... | .. | கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்கு:<br>புதிய ஒதுக்கு 280<br>கூட்டுக: பெற்றது வட்டம் 350<br>630<br>கழிக்க: பழைய ஒதுக்கு 300 | 330 |
| ........... | .. | | |
| | .. | | .. |

## இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| பற்பல கடனீந் தோர் 7,000 | | ........... | .... |
| | | ........... | .... |
| கழிக்க : வட்ட ஒதுக்கு (புதியது) 280 | | ........... | .... |
| | 6,720 | | |
| ........... | .... | | |
| | .... | | .... |

**ஒதுக்குகள் கையாளப்படும் விதம் பற்றிய குறிப்பு**

கடனாளிகள், கடனீந்தோர்மீது ஒதுக்குகள் உருவாக்கப்பட்டதையும் பேணப்பட்டதையும் மேலே கண்டோம். இப்பொழுது இவை கையாளப்பட்டதைத் தொகுத்துக் கூறுவது பயனுடையதாக இருக்கும்.

**பற்பல கடனாளிகள்**

(1) **பற்பல கடனாளிகள்** குறித்து மூன்று விதமான சரிக்கட்டுகள் செய்ய வேண்டியதாக இருக்கலாம். அவை யாவன:

(அ) இருப்பாய்வைத் தயாரித்த பின் வாராக் கடனைப் போக்கெழுதல். இதைப் 'புதிய' வாராக் கடனைப் போக்கெழுதுதல் எனக் கூறலாம். ஏற்கெனவே போக்கெழுதப்பட்டு இருப்பாய்வில் தோன்றும் (பழைய) வாராக் கடனினின்றும் இதை வேறுபடுத்திக் காட்டவே 'புதிய' எனும் அடைமொழி சேர்க்கப்பட்டிருக்கிறது.

(ஆ) ஐயக் கடன் ஒதுக்கு உருவாக்குதல் அல்லது பேணுதல்

(இ) கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்கு உருவாக்குதல் அல்லது பேணுதல்.

இந்த மூன்று சரிக்கட்டுகளையும் ஒரு வினாவில் செய்ய வேண்டுவதாக இருப்பின், மேற்கூறிய இந்த வரிசையிலேயே அவற்றைச் செய்ய வேண்டும்.

(2) (புதிய) ஐயக் கடன் ஒதுக்குக்குரிய தொகையை நிகரக் கடனாளிகள் (அதாவது, பற்பல கடனாளிகள் தொகையிலிருந்து **புதிய** வாராக் கடனைக் கழித்த பின் எஞ்சியிருக்கும் நிகரத் தொகை) மீதுதான் கணக்கிட வேண்டும்.

(3) கடனாளிகள் மீதான (புதிய) வட்ட ஒதுக்குக் குரிய தொகையைத் திடமான கடனாளிகள் (அதாவது நிகரக் கடனாளிகள் தொகையிலிருந்து **புதிய** ஐயக் கடன் ஒதுக்கைக் கழித்த நிலையில் எஞ்சியிருக்கும் தொகை) மீதுதான் கணக்கிடவேண்டும்.

(4) இருப்புநிலைக் குறிப்பில் இந்த மூன்று இனங்களையும் (புதிய வாராக் கடன், புதிய ஐயக் கடன் ஒதுக்கு, கடனாளிகள் மீதான புதிய வட்ட ஒதுக்கு) பற்பல கடனாளிகளிலிருந்து கழித்துக் காண்பிக்க வேண்டும்.

**பற்பல கடனீந்தோர்**

பற்பல கடனீந்தோர் பற்றிச் செய்யவேண்டிய ஓர் சரிக்கட்டு 'கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்கு' பற்றியது. இதைச் செய்யவேண்டிய முறையை எடுத்துக்காட்டுகள்— 8, 9ல் காண்பித்திருக்கிறோம்.

இந்த வட்ட ஒதுக்கை இருப்புநிலைக் குறிப்பில் பற்பல கடனீந்தோர் தொகையிலிருந்து கழித்துக் காண்பிக்க வேண்டும்.

கடனீந்தோர் மீதான வட்டம் ஒரு வருவாய் அல்லது ஆதாயம் ஆகும். இதற்கு ஒதுக்கு உருவாக்கும்பொழுது எதிர் காலத்தில் வரவிருக்கும் வருமானத்தை முன்னமேயே கணக்கில் கொண்டுவருகிறோம் என்பது பொருள்.

**சரிக்கட்டுகள் பற்றிய பட்டி**

| சரிக்கட்டு விவரம் | சரிக்கட்டுக் குறிப்பேட்டுப் பதிவு | எவ்வாறு சரிக்கட்டப்படுகிறது | |
|---|---|---|---|
| | | வியாபார, இலாப - நட்டக் கணக்கில் | இருப்புநிலைக் குறிப்பில் |
| (1) இறுதிச் சரக்கிருப்பு | இறுதிச் சரக் கிருப்புக் க/கு பற்று வியாபாரக் க/கு | இது வியாபாரக் கணக்கின் வரவுப் பகுதியில் காண் பிக்கப்படுகிறது. | இது இருப்புநிலைக் குறிப்பின் சொத்துப் பகுதி யில் இடம் பெறு கிறது. |
| (2) கொடுபட வேண்டிய செலவுகள் | குறிப்பிட்ட செலவுக் க/கு பற்று கொடுபட வேண்டிய செலவுக் க/கு | (அ) குறிப்பிட்ட செலவு வியா பாரக் கணக்கில் தோன்றத்தக்க செல வாயின், அங்கு அச் செலவோடு கொடுபட வேண்டிய தொகையைக் கூட்டிக் காண்பிக்க.<br>அல்லது<br>(ஆ) அச் செலவு இலாப-நட்டக் கணக்கில் தோன்றுவதற்குரிய செலவாயின், அங்கு அச் செலவோடு கொடுபட வேண்டிய தொகையைக் கூட்டிக் காண்பிக்க. | கொடுபட வேண்டிய செலவுகள் பொறுப்புக்கள் பகுதியில் காண் பிக்கப்படும். |

| | | | | |
|---|---|---|---|---|
| (3) | முன்கூட்டிச் செலுத்திய செலவுகள் அல்லது பயன் தீராச் செலவுகள் (Unexpired Expenses) | முன்கூட்டிச் செலுத்திய செலவுகள் க/கு பற்று குறிப்பிட்ட செலவுக் க/கு | குறிப்பிட்ட செலவு வியாபாரக் கணக்கு அல்லது இலாப நட்டக் கணக்கு இவையிரண்டில் எங்குத் தோன்றுகிறதோ அங்கு அச்செலவிலிருந்து முன்கூட்டிச் செலுத்திய தொகையைக் கழித்துக் காண்பிக்க. | முன்கூட்டிச் செலுத்திய செலவுகளைச் சொத்துகள் பகுதியில் காண்பிக்க. |
| (4) | பெறப்பட வேண்டிய வருமானம் அல்லது கூடியுள்ள வருமானம் (Accrued Income) | பெறப்பட வேண்டிய வருமானக் க/கு பற்று குறிப்பிட்ட வருமானக் க/கு | இலாப-நட்டக் கணக்கின் வரவுப் பகுதியில் தோன்றும் குறிப்பிட்ட வருமானத்தோடு பெறப்பட வேண்டிய தொகையைக் கூட்டுக. | பெறப்படவேண்டிய வருமானங்கள் சொத்துகள் பகுதியில் தோன்றும். |
| (5) | முன்னதாகப் பெற்ற வருமானம் | குறிப்பிட்ட வருமானக் க/கு பற்று முன்னதாகப் பெற்ற வருமானக் க/கு | இலாப-நட்டக் கணக்கின் வரவுப் பகுதியில் தோன்றும் குறிப்பிட்ட வருமானத்திலிருந்து முன்னதாகப்பெற்ற தொகையைக் கழித்துக் காண்பிக்க. | முன்னதாகப் பெற்ற வருமானங்கள் பொறுப்புகள் பகுதியில் தோன்றும். |
| (6) | சொத்துகள் மீதான தேய்மானம் | தேய்மானக் க/கு பற்று குறிப்பிட்ட சொத்துக் க/கு | தேய்மானம் எனும் செலவு (இழப்பு) இலாப-நட்டக் கணக்கின் பற்றுப் பகுதியில் காண்பிக்க பெறும். | சொத்துகள் பகுதியில் குறிப்பிட்ட சொத்திலிருந்து தக்க தேய்மானத் தொகை கழித்துக் காண்பிக்கப்படும். |

| சரிக்கட்டு விவரம் | சரிக்கட்டுக் குறிப்பேட்டுப் பதிவு | எவ்வாறு சரிக்கட்டப்படுகிறது | |
|---|---|---|---|
| | | வியாபார, இலாப-நட்டக் கணக்கில் | இருப்புநிலைக் குறிப்பில் |
| (7) (புதிய) வாராக் கடன் (அதாவது இருப்பாய்வு தயாரிக்கப் பட்ட பின் போக்கெழுத வேண்டியதாக வுள்ள வாராக் கடன்) | வாராக் கடன் க/கு பற்று பற்பல கடனாளிகள் க/கு | (அ) **இருப்பாய்வில் ஐயக் கடன் ஒதுக்கு தோன்றா நிலையில்:** இப்புதிய வாராக்கடன் தொகையை இருப்பாய்வி லுள்ள வாராக் கடனோடு சேர்த்து இலாப-நட்டக் கணக்கின் பற்றுப் பகுதியில் காண்பிக்க. | சொத்துகள் பகுதி யில் தோன்றும் பற்பல கடனா ளிகளிலிருந்து இப்புதிய வாராக் கடனைக் கழித் துக் காண்பிக்க. (குறிப்பு: இருப் பாய்வில் தோன் றும் வாராக் கடனை இருப்பு நிலைக் குறிப் பில் பற்பல கடனாளிகளி லிருந்து கழித்துக் காண்பிக்கக் கூடாது) |
| | | (ஆ) **இருப்பாய்வில் ஐயக் கடன் ஒதுக்கு தோன் றும் பொழுது:** இப்புதிய வாராக் கடன் தொகையை இருப்பாய்வி | —மேற்கூறியதுவே இங்கும்— |

| | | | |
|---|---|---|---|
| | | லுள்ள வாராக் கடனோடு சேர்த்து ஐயக் கடன் ஒதுக்குக் கணக்கிற்கு மாற்றுக. | |
| (8) **ஐயக் கடன் ஒதுக்கு** | இலாப-நட்டக் க/கு பற்று<br>ஐயக் கடன் ஒதுக்கு க/கு | (அ) **ஐயக் கடன் ஒதுக்கை முதல் முதலாக உருவாக்கும்பொழுது:**<br>ஐயக் கடன் ஒதுக்குக் குரிய தொகையை இலாப-நட்டக் கணக்கின் பற்றுப் பகுதியில் காண்பிக்க. | உருவாக்கிய ஐயக் கடன் ஒதுக்கைச் சொத்துகள் பகுதியிலுள்ள பற்பல கடனாளிகளிலிருந்து கழித்துக் காட்டுக. |
| | | (ஆ) **ஏற்கெனவே உருவாக்கிய ஐயக் கடன் ஒதுக்கைப் பேணும் பொழுது:**<br>பேணவேண்டிய புதிய ஐயக் கடன் ஒதுக்கோடு வாராக் கடன் தொகையைக் கூட்டி, இருப்பாய்வில் தோன்றும் பழைய ஐயக் கடன் ஒதுக்கைக் கழித்துவரும் தொகையை 'ஐயக்கடன் ஒதுக்கு' என இலாப-நட்டக் கணக்கின் பற்றுப் பகுதியில் காண்பிக்க. (புதிய ஒதுக்கும் வாராக் கடனும் சேர்ந்த மொத்தத் தொகையைக் காட்டிலும் | பேணவேண்டிய புதிய ஐயக் கடன் ஒதுக்கை இருப்புநிலைக் குறிப்பின் சொத்துகள் பகுதியிலுள்ள பற்பல கடனாளிகளிலிருந்து கழித்துக் காண்பிக்க. |

| சரிக்கட்டு விவரம் | சரிக்கட்டுக் குறிப்பேட்டுப் பதிவு | எவ்வாறு சரிக்கட்டப்படுகிறது | |
|---|---|---|---|
| | | வியாபார, இலாப-நட்டக் கணக்கில் | இருப்புநிலைக் குறிப்பில் |
| | | பழைய ஒதுக்கு அதிகமாக இருப்பின், அந்த வேறுபாட்டுத் தொகையை இலாப-நட்டக் கணக்கின் **வரவுப்** பகுதியில் 'ஐயக் கடன் ஒதுக்கு' எனக் காட்டுக). | |
| (9) கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்கு க/கு | இலாப-நட்டக் க/கு பற்று<br>கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்கு | **(அ) வட்ட ஒதுக்கை முதன் முதலாக உருவாக்கும் பொழுது :**<br>உருவாக்கும் வட்ட ஒதுக்கை இலாப-நட்டக் கணக்கின் பற்றுப் பகுதியில் காண்பிக்க.<br><br>**(ஆ) முந்தைய ஆண்டுகளில் உருவாக்கிய வட்ட ஒதுக்கைப் பேணவேண்டிய பொழுது :** | உருவாக்கிய வட்ட ஒதுக்கைச் சொத்துகள் பகுதியிலுள்ள பற்பல கடனாளிகளிலிருந்து கழித்துக் காட்டுக. |

| | | | |
|---|---|---|---|
| (10) கடனீந்தோர் (கடனாளர்) மீதான வட்ட ஒதுக்கு | கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்கு பற்று இலாப-நட்டக் க/கு | பேண வேண்டிய புதிய வட்ட ஒதுக்கோடு நடப்பு ஆண்டில் அனுமதித்த வட்டத்தைக் கூட்டி, அதிலிருந்து இருப்பாய்வில் தோன்றும் பழைய வட்ட ஒதுக்கைக் கழித்துவரும் தொகையைக் 'கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்கு' என இலாப-நட்டக் கணக்கின் பற்றுப் பகுதியில் காண்பிக்க. | பேண்வேண்டிய புதிய வட்ட ஒதுக்கைப் பற் பல கடனாளிகளிலிருந்து கழித்துக் காண்பிக்க. |
| | | **(அ) கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்கை முதல் முதலாக உருவாக்கும் பொழுது :** உருவாக்கும் வட்ட ஒதுக்கை இலாப-நட்டக் கணக்கின் வரவுப் பகுதியில் காண்பிக்க. | உருவாக்கிய வட்ட ஒதுக்கைப் பொறுப்புகள் பகுதியிலுள்ள பற்பல கடனீந்தோரிலிருந்து கழித்துக் காட்டுக. |
| | | **(ஆ) முந்தைய ஆண்டுகளில் உருவாக்கிய வட்ட ஒதுக்கைப் பேண வேண்டிய பொழுது :** | |

| சரிக்கட்டு விவரம் | சரிக்கட்டுக் குறிப்பேட்டுப் பதிவு | எவ்வாறு சரிக்கட்டப்படுகிறது | |
|---|---|---|---|
| | | வியாபார, இலாப - நட்டக் கணக்கில் | இருப்புநிலைக் குறிப்பில் |
| | | பேண வேண்டிய புதிய வட்ட ஒதுக்குடன் நடப்பு ஆண்டில் பெற்ற வட்டத்தைக்கூட்டி, அதிலிருந்து இருப்பாய்வில் தோன்றும் பழைய வட்ட ஒதுக்கைக் கழித்துவரும் தொகையைக் கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்கு' என இலாப-நட்டக் கணக்கின் வரவுப் பகுதியில் காண்பிக்க. | பேணவேண்டிய புதிய வட்ட ஒதுக்கை இருப்பு நிலைக் குறிப்பின் பொறுப்புகள் பகுதியிலுள்ள பற்பல கடனீந்தோரிலிருந்து கழித்துக் காண்பிக்க. |
| (11) முதல் மீதான வட்டி | முதல் மீதான வட்டி க/கு பற்று<br>முதல் க/கு | முதல் மீதான வட்டி இலாப-நட்டக் கணக்கின் பற்றுப் பகுதியில் காண்பிக்கப் பெறும். | முதல் மீதான வட்டியை இருப்பு நிலைக் குறிப்பின் பொறுப்புகள் பகுதியிலுள்ள முதலோடு கூட்டிக் காண்பிக்க வேண்டும். |
| (12) எடுப்புகள் மீதான வட்டி. | எடுப்புகள் க/கு பற்று<br>எடுப்புகள் மீதான வட்டி | எடுப்புகள் மீதான வட்டி இலாப-நட்டக் கணக்கின் வரவுப் பகுதியில் காண்பிக்கப் பெறும். | எடுப்புகள் மீதான வட்டியை பொறுப்புகள் பகுதியிலுள்ள முதல் தொகையிலிருந்து கழித்துக் காண்பிக்க வேண்டும். |

**எடுத்துக்காட்டு—1**

பின்வருபவை திரு. பாலசுப்பிரமணியன் என்பவரது ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட 31-3-1961ஆம் நாளன்றைய இருப்புகளாகும்:

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| முதல் | 15,000 | வாங்கிய கடன் | 20,000 |
| எடுப்புகள் | 4,800 | சரக்கிருப்பு (1-4-1960) | 7,500 |
| இயந்திரம் | 20,000 | கொள்முதல் | 60,000 |
| அறைகலன் | 1,500 | விற்பனை | 90,000 |
| பற்பல கடனாளிகள் | 20,000 | அலுவலக வாடகை | 1,100 |
| பற்பல கடனீந்தோர் | 13,000 | காப்பீடு | 240 |
| வட்டி (பற்று) | 1,250 | அனுமதித்த வட்டம் | 1,000 |
| கூலி | 10,000 | ஈட்டிய வட்டம் | 500 |
| சம்பளம் | 7,500 | பொதுச் செலவுகள் | 1,200 |
| உள் ஏற்றிச் செல் செலவு | 500 | கைவச ரொக்கம் | 150 |
| கொள்முதல் திருப்பம் | 1,000 | வங்கி இருப்பு | 1,260 |
| விற்பனைத் திருப்பம் | 1,500 | | |

**சரிக்கட்டுகள்:**

| | | ரூ. |
|---|---|---|
| (1) | 31-3-1961 அன்றைய சரக்கிருப்பு .. | 10,000 |
| (2) | கொடுபடவேண்டிய வாடகை .. | 100 |
| (3) | கொடுபடவேண்டிய சம்பளம் .. | 900 |
| (4) | முன்கூட்டிச் செலுத்திய காப்பீடு .. | 40 |
| (5) | கொடுபடவேண்டிய கடன் மீதான வட்டி .. | 250 |
| (6) | இயந்திரத்தின்மீது 10%ம், அறைகலன் மீது 6%ம் தேய்மானம் நீக்குக. | |

தக்க சரிக்கட்டுப் பதிவுகள் செய்து 31-3-1961ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப நட்டக் கணக்கையும் அந்த ஆண்டு இறுதி நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க.

**விடை**

**சரிக்கட்டுப் பதிவுகள்**

| தேதி | விவரம் | பே. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1961 மார்ச் 31 | (இறுதிச்) சரக்கிருப்புக் க/கு பற்று<br>வியாபாரக் க/கு<br>(இறுதிச் சரக்கிருப்பு குறித்த பதிவு) | | ரூ.<br>10,000 | ரூ.<br>10,000 |
| | வாடகைக் க/கு பற்று<br>கொடுபடவேண்டிய செலவுகள்<br>(கொடுபடவேண்டிய வாடகை குறித்த பதிவு) | | 100 | 100 |
| | சம்பளக் க/கு பற்று<br>கொடுபடவேண்டிய செலவுகள்<br>(கொடுபடவேண்டிய சம்பளம் குறித்த பதிவு) | | 900 | 900 |
| | முன்கூட்டிச் செலுத்திய செலவுகள் க/கு பற்று<br>காப்பீடு<br>(முன்கூட்டிச் செலுத்திய காப்பீடு குறித்த பதிவு) | | 40 | 40 |
| | கடன்மீதான வட்டி க/கு பற்று<br>கொடுபடவேண்டிய செலவுகள்<br>(கடன்மீதான வட்டி கொடுபட வேண்டியதாக இருப்பது குறித்த பதிவு) | | 250 | 250 |

| தேதி | விவரம் | பே. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | தேய்மானக் க/கு பற்று | | 2,090 | |
| | இயந்திரக் | | | 2,000 |
| | அறைகலன் | | | 90 |
| | (இந்தச் சொத்துகள் மீது தேய்மானம் நீக்குவது குறித்த பதிவு) | | | |

**திரு. பால சுப்பிரமணியன் என்பவரின்**
**31—3—1961ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய**
**வியாபார, இலாப - நட்டக் கணக்கு**

பற்று | வரவு

| விவரம் | | தொகை | விவரம் | | தொகை |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ. |
| சரக்கிருப்பு (1-4-1960) | | 7,500 | விற்பனை | 90,000 | |
| கொள்முதல் | 60,000 | | **கழிக்க:** விற்பனைத் திருப்பம் | 1,500 | 88,500 |
| **கழிக்க:** கொள்முதல் திருப்பம் | 1,000 | 59,000 | சரக்கிருப்பு (31-3-1961) | | 10,000 |
| கூ. வி | | 10,000 | | | |
| உள் ஏற்றிச்செல் செலவு | | 500 | | | |
| மொத்த இலாபம் கீ/இ —இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்றப்படுகிறது | | 21,500 | | | |
| | | 98,500 | | | 98,500 |

பற்று　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　வரவு

| விவரம் | | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|---|
| | | ரூ. | | ரூ. |
| சம்பளம் | 7,500 | | மொத்த இலாபம் கீ/கொ | 21,500 |
| கூட்டுக: கொடுபட வேண்டியது | 900 | 8,400 | ஈட்டிய வட்டம் | 500 |
| வாடகை | 1,100 | | | |
| கூட்டுக: கொடுபட வேண்டியது | 100 | 1,200 | | |
| வட்டி | 1,250 | | | |
| கூட்டுக: கொடுபட வேண்டியது | 250 | 1,500 | | |
| காப்பீடு | 240 | | | |
| கழிக்க: முன்கூட்டிச் செலுத்தியது | 40 | 200 | | |
| அனுமதித்த வட்டம் | | 1,000 | | |
| பொதுச் செலவுகள் | | 1,200 | | |
| தேய்மானம்: இயந்திரம் | 2,000 | | | |
| அறைகலன் | 90 | 2,090 | | |
| நிகர இலாபம்—முதல் கணக்கிற்கு மாற்றப்படுகிறது | | 6,410 | | |
| | | 22,000 | | 22,000 |

**திரு. பாலசுப்பிரமணியன் என்பவரின்**
**31–3–1961ஆம் நாளன்றைய**
**இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | | தொகை | சொத்துகள் | | தொகை |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ. |
| பற்பல கடனீந்தோர் | | 13,000 | கைவச ரொக்கம் | | 150 |
| வாங்கிய கடன் | | 20,000 | வங்கிவச ரொக்கம் | | 1,260 |
| கொடுபட வேண்டிய செலவுகள்: | | | பற்பல கடனாளிகள் | | 20,000 |
| சம்பளம் | 900 | | முன் கூட்டிச் செலுத்திய காப்பீடு | | 40 |
| வாடகை | 100 | | சரக்கிருப்பு | | 10,000 |
| கடன் மீதான வட்டி | 250 | | இயந்திரம் | 20,000 | |
| | | | **கழிக்க:** தேய்மானம் | 2,000 | |
| | | 1,250 | | | 18,000 |
| முதல் | 15,000 | | அறைகலன் | 1,500 | |
| **கூட்டுக:** நிகர இலாபம் | 6,410 | | **கழிக்க:** தேய்மானம் | 90 | |
| | 21,410 | | | | 1,410 |
| **கழிக்க:** எடுப்புகள் | 4,800 | | | | |
| | | 16,610 | | | |
| | | 50,860 | | | 50,860 |

**எடுத்துக்காட்டு—2**

திரு. ரமேஷன் என்பவரது ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட கீழ்க்காணும் விவரங்களிலிருந்து, 1965 டிசம்பர் 31ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்பு நிலைக் குறிப்பையும் தயாரிக்க:

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| நிலமும் கட்டடங்களும் | 47,000 | பொறிவகை | 35,000 |
| ரொக்கம் | 2,300 | புனைவுகள் | 12,000 |
| கடனாளிகள் | 3,800 | அறைகலன் | 4,700 |
| விற்பனை | 94,500 | பயணச் செலவுகள் | 8,500 |
| பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | [illegible],200 | விற்பாண்மையர் கழிவு | 1,300 |
| கொள்முதல் | 16,800 | உள் ஏற்றிச்செல் செலவு | 400 |
| கூலி | 2[illegible],900 | கட்டுமம் | 600 |
| கடனீந்தோர் | 5,200 | விளம்பரம் | 1,800 |
| சம்பளம் | 16,500 | வங்கி | 5,600 |
| விற்பனைத் திருப்பம் | 400 | கடன்கள் (வரவு) | 42,400 |
| தீயால் இழப்பு | 500 | லாரிகள் | 18,500 |
| பெற்ற வட்டம் | 200 | முதல் | 65,000 |
| தொடக்கச் சரக்கிருப்பு | 6,500 | | |

**சரிக்கட்டுகள்**

பொறிவகை மீது 15% தேய்மானம் நீக்குக.

புனைவுகளில் மூன்றில்-ஒரு-பகுதியைப் போக்கெழுதுக.

பணியாளர்களுக்கு ரூ. 850 கொடுபடவேண்டியதாக இருக்கிறது.

விற்பாண்மையருக்குக் (Salesman) கழிவாக ரூ. 200 அதிகமாகத் தரப்பட்டிருக்கிறது. தீயால் ஏற்பட்ட இழப்பு முழுவதையும் ஏற்பதாகக் காப்பீட்டு நிறுமம் ஒப்பியுள்ளது.

இறுதிச் சரக்கிருப்பு ரூ. 3,700 என மதிப்பிடப்பட்டது.

**விடை**

**விளக்கம் : தீயால் இழப்பு . . ரூ. 500**

தீயால் சரக்குகளுக்கு ஏற்பட்ட இழப்பு என இதை எடுத்துக்கொள்ள வேண்டும். பெரும்பாலும் இது இருப் பாய்வில் தோன்றாமல், இருப்பாய்வுக்குக் கீழே ஒரு சரிக் கட்டுச் செய்தியாகவே தோன்றும். இது ஒரு சரிக்கட்டுச் செய்தியாகத் தோன்றியிருப்பின், நாம் செய்யவேண்டிய சரிக் கட்டுகளாவன:

(1) தீயால் இழப்பு க/கு பற்று 500
வியாபாரக் க/கு 500

(தீயால் ஏற்பட்ட இழப்பைக் கணக்கிற்குக் கொண்டுவருதல்)

(2) **இழப்பு முழுவதையும் காப்பீட்டு நிறுமம் ஏற்றால் :**

காப்பீட்டு நிறுமக் க/கு பற்று 500
தீயால் இழப்பு 500

(தீ இழப்பைக் காப்பீட்டு நிறுமம் ஏற்பது குறித்த பதிவு)

**குறிப்பு:** (அ) பதிவுகள் 1, 2 இவற்றை இணைத்துப் பார்க்கும்பொழுது 'தீயால் இழப்புக் கணக்கு' முடிக்கப்பெறுவதைக்கவனி.

(ஆ) காப்பீட்டு நிறுமக் கணக்கு இருப்பு நிலைக் குறிப்பின் சொத்துகள் பகுதி யில் இடம்பெறும்.

(3) **இழப்பின் ஒரு பகுதியை (எடுத்துக்காட் டாக ரூ. 300ஐக்) காப்பீட்டு நிறுமம் ஏற்றால் :**

காப்பீட்டு நிறுமக் க/கு பற்று 300
இலாப - நட்டக் க/கு ,, 200
தீயால் இழப்பு 500

(தீ இழப்பில் ஒரு பகுதியைக் காப்பீட்டு நிறுமம் ஏற்பதும், எஞ்சிய பகுதியை இலாப நட்டக் கணக்கிற்கு மாற்று வதும் குறித்த பதிவு).

இந்த எடுத்துக்காட்டில் 'தீயால் இழப்பு ரூ. 500' இருப்பாய்வில் தோன்றுவதால், மேற்கூறிய சரிக்கட்டுப் பதிவு (1) ஏற்கெனவே செய்யப்பட்டுவிட்டதாக எடுத்துக்கொள்ள வேண்டும்.

இந்த இழப்பு முழுவதையும் காப்பீட்டு நிறுமம் ஏற் பதால் மேற்கூறிய சரிக்கட்டுப் பதிவு (2)ஐச் செய்ய வேண்டும்.

**திரு. இரமேஷன் என்பவரது**
**1965 டிசம்பர் 31ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய**
**வியாபார, இலாப-நட்டக் கணக்கு**

பற்று வரவு

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| தொடக்கச் சரக்கிருப்பு | 6,500 | விற்பனை 94,500 | |
| கொள்முதல் | 16,800 | கழிக்க: விற்பனைத் திருப்பம் 400 | 94,100 |
| கூலி 23,900<br>கூட்டுக: கொடுபட வேண்டியது 850 | 24,750 | இறுதிச் சரக்கிருப்பு | 3,700 |
| உள் ஏற்றிச்செல் செலவு | 400 | | |
| மொத்த இலாபம் கீ/இ | 49,350 | | |
| | 97,800 | | 97,800 |
| சம்பளம் | 16,500 | மொத்த இலாபம் கீ/கொ | 49,350 |
| பயணச் செலவுகள் | 8,500 | பெற்ற வட்டம் | 200 |
| விற்பாண்மையர் கழிவு 1,300<br>கழிக்க: முன் கூட்டிச் செலுத்தியது 200 | 1,100 | | |
| கட்டுமம் | 600 | | |
| விளம்பரம் | 1,800 | | |
| பொறிவகைமீது தேய்மானம் | 5,250 | | |
| போக்கெழுதப் பட்ட புனைவுகள் | 4,000 | | |

| பற்று | | | வரவு |
|---|---|---|---|
| விவரம் | தொகை | விவரம் | தொகை |
| | ரூ | | ரூ. |
| தீயால் இழப்பு 500<br>கழிக்க: காப்பீட்டு நிறுமம் ஏற்றுக் கொண்டது 500 | —— | | |
| நிகர இலாபம் - முதல் கணக்கிற்கு மாற்றப்படுதல் | 11,800 | | |
| ரூ. | 49,550 | ரூ. | 49,550 |

**திரு. இரமேஷன் என்பவரின்
1965 டிசம்பர் 31ஆம் நாளன்றைய
இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| கடனீந்தோர் | 5,200 | ரொக்கம் | 2,300 |
| கடன்கள் | 42,400 | வங்கி | 5,600 |
| கொடுபட வேண்டிய கூலி | 850 | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 1,200 |
| முதல் 65,000 | | கடனாளிகள் | 3,800 |
| கூட்டுக: நிகர இலாபம் 11,800 | | காப்பீட்டு நிறுமம் (தீ இழப்பு) | 500 |
| | 76,800 | முன்கூட்டிச் செலுத்திய விற்பாண்மையர் கழிவு | 200 |
| | | சரக்கிருப்பு | 3,700 |
| | | புனைவுகள் 12,000 | |
| | | கழிக்க: ⅓ போக்கெழுதப் பட்டது 4,000 | |
| | | | 8,000 |
| | | வாரிகள் | 18,500 |
| | | அறைகலன் | 4,700 |
| | | பொறிவகை 35,000 | |
| | | கழிக்க 15% தேய்மானம் 5,250 | |
| | | | 29,750 |
| | | நிலமும் கட்டடங்களும் | 47,000 |
| ரூ. | 1,25,250 | ரூ. | 1,25,250 |

**எடுத்துக்காட்டு—3**

திரு. விநாயகம் என்பவரது ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட 1964 மார்ச் 31ஆம் நாளன்றைய இருப்புகள் பின்வருமாறு:

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| திரு. விநாயகத்தின் முதல் | 12,500 | செலுத்திய வட்டி | 250 |
| அவரது எடுப்புகள் | 6,200 | வாடகையும் வரிகளும் | 5,000 |
| அறைகலனும் பொருத்துகளும் | 1,750 | வெளித்திருப்பம் | 5,000 |
| தட்டச்சு | 1,200 | உள் திருப்பம் | 10,000 |
| கொள்முதல் | 1,80,000 | வெளி ஏற்றிச் செல் செலவு | 8,000 |
| விற்பனை | 2,35,000 | சம்பளம் | 11,000 |
| கொள்முதல் மீதான வாரி வாடகை | 12,000 | விளம்பரம் | 1,200 |
| பயணச் செலவுகள் | 900 | சைக்கிள் | 200 |
| பற்பல கடனீந்தோர் | 10,000 | தொடக்கச் சரக்கிருப்பு | 21,500 |
| காப்பீடு | 500 | பற்பல கடனாளிகள் | 12,000 |
| பொதுச் செலவுகள் | 600 | ஐயக் கடன் ஒதுக்கு | 400 |
| அஞ்சல், தந்திச் செலவு | 150 | ஈட்டிய கழிவு | 9,000 |
| வாராக் கடன் | 500 | அனுமதித்த வட்டம் | 5,000 |
| | | கைவச ரொக்கம் | 450 |
| | | வங்கி மேல் வரைப்பற்று | 6,500 |

செய்யவேண்டிய சரிக்கட்டுகளாவன:

(1) 1964 மார்ச் 31ஆம் நாளன்றைய சரக்கிருப்பு ரூ. 17,500.

(2) கொடுபடவேண்டியவை:
வட்டி ரூ. 250; சம்பளம் ரூ. 1,000; வாடகை ரூ. 500; தணிக்கைக் கட்டணம் ரூ. 500.
முன்கூட்டிச் செலுத்திய செலவுகளாவன:
காப்பீடு ரூ. 125; விளம்பரம் ரூ. 200.

(3) பற்பல கடனாளிகள் மீது 5% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கு பேணுக.

(4) தேய்மானம் நீக்குக: அறைகலன் - பொருத்துகள் மீது 10%; சைக்கிள் மீது 15%; தட்டச்சு மீது 15%.

தக்க சரிக்கட்டுப் பதிவுகள் செய்து, 1964 மார்ச் 31 ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார இலாப - நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க.

**விடை**

**சரிக்கட்டுப் பதிவுகள்**

| தேதி | விவரம் | பே. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1964 மார்ச் 31 | | | ரூ. | ரூ. |
| | இறுதிச் சரக்கிருப்பு க/கு பற்று | | 17,500 | |
| | வியாபாரக் க/கு | | | 17,500 |
| | (இறுதிச் சரக்கிருப்பு பற்றிய பதிவு) | | | |
| | வட்டிக் க/கு பற்று | | 250 | |
| | சம்பளக் க/கு ,, | | 1,000 | |
| | வாடகைக் க/கு ,, | | 500 | |
| | தணிக்கைக் கட்டணக் க/கு ,, | | 500 | |
| | கொடுபடவேண்டிய செலவுகள் க/கு | | | 2,250 |
| | (கொடுபடவேண்டிய செலவுகள் குறித்த பதிவு) | | | |
| | முன்கூட்டிச் செலுத்திய செலவுகள் க/கு பற்று | | 325 | |
| | காப்பீடு க/கு | | | 125 |
| | விளம்பரம் க/கு | | | 200 |
| | (முன்கூட்டிச் செலுத்திய செலவுகள் குறித்த பதிவு) | | | |
| | இலாப - நட்டக் க/கு பற்று | | 700 | |
| | ஐயக் கடன் ஒதுக்கு | | | 700 |
| | (ஐயக் கடன் ஒதுக்கைக் கடனாளிகள் மீது 5% அளவிற்குப் பேணுவது குறித்த பதிவு) | | | |
| | தேய்மானம் க/கு பற்று | | 385 | |
| | அறைகலனும் பொருத்துகளும் க/கு | | | 175 |
| | சைக்கிள் க/கு | | | 30 |
| | தட்டச்சு க/கு | | | 180 |
| | (இந்த சொத்துகள் மீதான தேய்மானம் நீக்குதல் குறித்த பதிவு) | | | |

**திரு. விநாயகம் என்பவரின்**
**1964 மார்ச் 31ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய**
**வியாபார, இலாப-நட்டக் கணக்கு**

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| தொடக்கச் சரக்கிருப்பு | 21,500 | விற்பனை 2,35,000<br>**கழிக்க :** உள் திருப்பம் 10,000 | 2,25,000 |
| கொள்முதல் 1,80,000<br>**கழிக்க:** வெளித் திருப்பம் 5,000 | 1,75,000 | இறுதிச் சரக்கிருப்பு | 17,500 |
| கொள்முதல் மீதான லாரி வாடகை | 12,000 | | |
| மொத்த இலாபம் கீ/இ<br>—இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்றப் படுகிறது | 34,000 | | |
| | 2,42,500 | | 2,42,500 |
| சம்பளம் 11,000<br>**கூட்டுக:** கொடுபட வேண்டியது 1,000 | 12,000 | மொத்த இலாபம் கீ/கொ | 34,000 |
| வாடகையும் வரிகளும் 5,000<br>**கூட்டுக:** கொடுபட வேண்டியது 500 | 5,500 | ஈட்டிய கழிவு | 9,000 |

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
| --- | --- | --- | --- |
| | ரூ. | | |
| வட்டி 250 | | | |
| கூட்டுக: | | | |
| கொடுபட வேண்டியது 250 | 500 | | |
| காப்பீடு 500 | | | |
| கழிக்க: | | | |
| முன் கூட்டிச் செலுத்தியது 125 | 375 | | |
| விளம்பரம் 1,200 | | | |
| கழிக்க: | | | |
| முன் கூட்டிச் செலுத்தியது 200 | 1,000 | | |
| (கொடுபட வேண்டிய) தணிக்கைக் கட்டணம் | 500 | | |
| வெளி ஏற்றிச் செல் செலவு | 8,000 | | |
| பயணச் செலவுகள் | 900 | | |
| பொதுச் செலவுகள் | 600 | | |
| அஞ்சல், தந்திச் செலவு | 150 | | |
| அனுமதித்த வட்டம் | 5,000 | | |

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ஐயக் கடன்<br>ஒதுக்கு:<br>புதிய ஒதுக்கு<br>$\frac{12000 \times 5}{100}$ ..600<br>கூட்டுக:<br>வாராக் கடன் 500<br>1100<br>கழிக்க:<br>பழைய ஒதுக்கு 400 | 700 | | |
| தேய்மானம்:<br>அறைகலன் 175<br>தட்டச்சு 180<br>சைக்கிள் 30 | 385 | | |
| நிகர இலாபம் | 7,390 | | |
| | 43,000 | | 43,000 |

**திரு. விநாயகம் என்பவரது**
**1964 மார்ச் 31ஆம் நாளன்றைய**

## இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| | | கைவச ரொக்கம் | 450 |
| பற்பல கடனீந்தோர் | 10,000 | பற்பல கடனாளிகள் 12,000 | |
| வங்கி மேல் வரைப்பற்று | 6,500 | **கழிக்க:** ஐயக் கடன் ஒதுக்கு 600 | 11,400 |
| கொடுபட வேண்டிய செலவுகள்: | | முன்கூட்டிச் செலுத்திய செலவுகள்: | |
| சம்பளம் 1,000 | | காப்பீடு 125 | |
| வட்டி 250 | | விளம்பரம் 200 | 325 |
| வாடகை 500 | | | |
| தணிக்கைக் கட்டணம் 500 | 2,250 | சரக்கிருப்பு | 17,500 |
| | | அறைகலன் -பொருத்துகள் 1750 | |
| முதல் 12,500 | | **கழிக்க:** தேய்மானம் 175 | 1,575 |
| **கூட்டுக:** நிகர இலாபம் 7,390 | | தட்டச்சு 1,200 | |
| 19,890 | | **கழிக்க:** தேய்மானம் 180 | 1,020 |
| **கழிக்க:** எடுப்புகள் 6,200 | 13,690 | சைக்கிள் 200<br>**கழிக்க:** தேய்மானம் 30 | 170 |
| ரூ. | 32,440 | ரூ. | 32,440 |

**எடுத்துக்காட்டு 4**

திரு. பால் என்பவரது ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட 1963 ஜூன் 30ஆம் நாளன்றைய இருப்புகள் பின்வருமாறு:

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| திரு. பால் என்பவரின் முதல் .. | 5,000 | பெற்ற கடன்கள் .. | 25,000 |
| அவரது எடுப்புகள் .. | 3,600 | பற்பல கடனாளிகள் .. | 10,000 |
| கட்டடங்கள் .. | 15,000 | வைப்புகள் (பற்று) .. | 1,000 |
| பொறியும் இயந்திரமும் .. | 15,000 | கொள்முதல் .. | 2,20,000 |
| அறைகலனும் பொருத்துகளும் .. | 4,000 | தொடக்கச் சரக்கிருப்பு .. | 15,000 |
| லாரி .. | 10,000 | விற்பனை .. | 3,00,000 |
| வியாபாரக் கடனீந்தோர் .. | 5,000 | உள் ஏற்றிச் செல் செலவு .. | 2,000 |
| கொள்முதல் மீதான சத்தமும் வரியும் .. | 25,000 | காப்பீடு .. | 500 |
| வெளி ஏற்றிச் செல் செலவு .. | 1,000 | விற்பனை மீதான கழிவு | 1,000 |
| சம்பளம் .. | 6,600 | ஐயக் கடன் ஒதுக்கு .. | 300 |
| கூலி .. | 20,000 | கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்கு | 150 |
| ஒளியாக்கச் செலவுகள் .. | 1,000 | வாடிக்கையருக்கு அனுமதித்த வட்டம் .. | 1,500 |
| வரிகளும் உரிமங்களும் .. | 1,200 | கைவசரொக்கம் .. | 150 |
| அஞ்சல், தந்திச் செலவு .. | 150 | வங்கியிடம் மேல் வரைப் பற்று .. | 24,750 |
| பொதுக் கட்டணங்கள் .. | 700 | | |
| செலுத்திய வட்டி. | 2,250 | | |
| லாரி பேணுகைச் செலவு .. | 3,500 | | |

**சரிக்கட்டுகள்:**

(1) கைவசச் சரக்கிருப்பு (30-6-1963 அன்று) ரூ. 20,000.

(2) கொடுபடவேண்டியவை: ரூ.

(அ) சம்பளம் 600

(ஆ) கூலி 1,000

(இ) கடன் மீதான வட்டி 500

மேல் வரைப்பற்று மீதான வட்டி ரூ. 250

(ஈ) லாரி பேணுகைச் செலவு 500

(3) முன்கூட்டிச்செலுத்திய காப்பீடு ரூ. 125

(4) கடனாளிகள்மீது ஐயக் கடன் ஒதுக்கு 5%ம், வட்ட ஒதுக்கு $2\frac{1}{2}$%ம் பேணுக.

(5) தேய்மானம் நீக்க வேண்டுவது:
கட்டடங்கள் 5%ம்;
பொறியும் இயந்திரமும் 10%;
லாரி 25%

அவரது 1963 ஜூன் 30ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப - நட்டக் கணக்கையும், அந்நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க.

**விடை**

**திரு. பால் என்பவரின்**
**1963 ஜூன் 30ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய**
**வியாபார, இலாப-நட்டக் கணக்கு**

*பற்று* *வரவு*

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| தொடக்கச் சரக்கிருப்பு | 15,000 | விற்பனை | 3,00,000 |
| கொள்முதல் | 2,20,000 | சரக்கிருப்பு (30-6-'63) | 20,000 |
| கொள்முதல் மீதான சத்தமும் வரியும் | 25,000 | | |
| கூலி 20,000<br>கூட்டுக: கொடுபட வேண்டியது 1,000 | 21,000 | | |
| உள் ஏற்றிச்செல் செலவு | 2,000 | | |
| மொத்த இலாபம் கீ/இ —இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்றுதல் | 37,000 | | |
| | 3,20,000 | | 3,20,000 |
| சம்பளம் 6,600<br>கூட்டுக: கொடுபட வேண்டி டியது 600 | 7,200 | மொத்த இலாபம் கீ/கொ | 37,000 |
| செலுத்திய வட்டி 2,250<br>கூட்டுக: கொடுபட வேண்டியது 500 | 2,750 | | |

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| மேல் வரைப்பற்று மீதான வட்டி (கொடுபட வேண்டியது) | 250 | | |
| லாரி பேணுகைச் செலவு 3,500 | | | |
| கூட்டுக: கொடுபட வேண்டியது 500 | 4,000 | | |
| காப்பீடு 500 | | | |
| கழிக்க: முன் கூட்டிச் செலுத்தியது 125 | 375 | | |
| வெளி ஏற்றிச் செல் செலவு | 1,000 | | |
| ஒளியாக்கச் செலவு | 1,000 | | |
| வரிகளும் உரிமங்களும் | 1,200 | | |
| அஞ்சல் - தந்திச் செலவு | 150 | | |
| பொதுக் கட்டணங்கள் | 750 | | |
| விற்பனை மீதான கழிவு | 1,000 | | |
| ஐயக் கடன் ஒதுக்கு: | | | |
| புதிய ஒதுக்கு $10000 \times \frac{5}{100}$ .. 500 | | | |

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| கூட்டுக: வாராக்கடன் — | | | |
| 500 | | | |
| கழிக்க: பழைய ஒதுக்கு 300 | 200 | | |
| கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்கு: | | | |
| புதிய ஒதுக்கு $9500 \times \frac{2\frac{1}{2}}{100}$ ..237.50 | | | |
| கூட்டுக: வாடிக்கையருக்கு அனுமதித்த வட்டம் 1500.00 | | | |
| 1737.50 | | | |
| கழிக்க: பழைய ஒதுக்கு 150.00 | 1,587.50 | | |
| தேய்மானம்: | | | |
| கட்டடங்கள் 750 | | | |
| பொறி-இயந்திரம் 1500 | | | |
| அறைகலன்-பொருத்துகள் 400 | | | |
| லாரி 2500 | 5,150 | | |
| நிகர இலாபம்—முதல் கணக்கிற்கு மாற்றுதல் | 10387.50 | | |
| | 37,000 | | 37,000 |

**திரு. பால் என்பவரின்**
**1963 ஜூன் 30-ஆம் நாளன்றைய**
**இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. பை. | | ரூ. பை. |
| வியாபாரக் கடனீந்தோர் | 5,000 00 | கைவச ரொக்கம் | 150 00 |
| | | வைப்புகள் | 1,000 00 |
| வங்கி மேல் வரைப்பற்று | 24,750 00 | பற்பல கடனாளிகள் 10,000<br>கழிக்க: ஐயக் கடன் ஒதுக்கு 500<br>9500<br>கழிக்க: வட்ட ஒதுக்கு 237.50 | 9,262 50 |
| கொடுபட வேண்டிய செலவுகள்:<br>சம்பளம் 600<br>கூலி 1,000<br>லாரி பேணுகை 500<br>மேல் வரைப்பற்று மீதான வட்டி 250<br>கடன் மீதான வட்டி 500 | 2,850 00 | முன்கூட்டிச் செலுத்திய காப்பீடு | 125 00 |
| | | சரக்கிருப்பு | 20,000 00 |
| | | லாரி 10,000<br>கழிக்க: தேய்மானம் 2500 | 7,500 00 |
| பெற்ற கடன் | 25,000 00 | அறைகலன் 4,000<br>கழிக்க: தேய்மானம் 400 | 3,600 00 |
| முதல் 5,000<br>கூட்டுக: நிகர இலாபம் 10,387.50<br>15,387.50<br>கழிக்க: எடுப்புகள் 3,600.00 | 11,787 50 | பொறி-இயந்திரம் 15,000<br>கழிக்க: தேய்மானம் 1,500 | 13,500 00 |
| | | கட்டடங்கள் 15,000<br>கழிக்க: தேய்மானம் 750 | 14,250 00 |
| ரூ. | 69,387 50 | ரூ. | 69,387 50 |

**எடுத்துக்காட்டு—5**

திரு. ஆலவாயன் என்பவரது ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட கீழ்க்காணும் விவரங்களிலிருந்து 1966 மார்ச் 31ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க:

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| முதல் | 50,000 | நிலம் | 13,500 |
| வங்கிவச ரொக்கம் | 2,000 | விற்பனை | 1,25,000 |
| கைவச ரொக்கம் | 500 | உள் ஏற்றிச் செல் செலவு | 800 |
| கட்டடங்கள் | 30,000 | | |
| கூலி | 15,000 | எரிவளி (Gas) | 2,200 |
| சம்பளம் | 10,000 | பற்பல கடனீந்தோர் | 12,200 |
| வாடகை-உள்ளூர் வீதங்கள் | 1,800 | பற்பல கடனாளிகள் | 15,000 |
| அச்சு-எழுது பொருள் | 1,200 | கொள்முதல் திருப்பம் | 2,000 |
| சரக்கிருப்பு (1-4-65) | 8,000 | விற்பனைத் திருப்பம் | 1,500 |
| கொள்முதல் | 70,000 | | |
| காப்பீடு | 800 | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 4,000 |
| இயந்திரம் | 12,000 | | |
| எடுப்புகள் | 6,000 | பெற்ற வட்டம் | 400 |
| பயணச் செலவுகள் | 1,800 | அனுமதித்த வட்டம் | 500 |
| கடன்கள் | 1,000 | அறைகலன் | 3,000 |

**தேவையான சரிக்கட்டுகள்**

(அ) முன்கூட்டிச் செலுத்திய காப்பீடு ரூ. 200.

(ஆ) இயந்திரத்தின் மீது 10%ம், அறைகலன் மீது 5%ம் தேய்மானம் நீக்குக.

(இ) 3%வீதத்தில் முதல் மீதான வட்டிக்குச் வகை செய்க.

(ஈ) கொடுபட வேண்டிய செலவுகள்: (1) கூலி ரூ. 800; (2) சம்பளம் ரூ. 600.

(உ) வாராக் கடன் ரூ. 1000ஐப் போக்கெழுதுக: கடனாளிகள் மீது 3% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கு உருவாக்குக.

(ஊ) இறுதிச் சரக்கிருப்பின் மதிப்பு ரூ. 10,000 ஆகும்.

விடை

### திரு. ஆலவாயன் என்பவரின்
### 1966 மார்ச் 31ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய
### வியாபார, இலாப-நட்டக் கணக்கு

பற்று | வரவு

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| தொடக்கச் சரக்கிருப்பு | 8,000 | விற்பனை 1,25,000<br>கழிக்க:<br>விற்பனைத் திருப்பம் 1,500 | 1,23,500 |
| கொள் முதல் 70,000<br>கழிக்க:<br>கொள் முதல் திருப்பம் 2,000 | 68,000 | | |
| கூலி 15,000<br>கூட்டுக:<br>கொடுபட வேண்டியது 800 | 15,800 | இறுதிச் சரக்கிருப்பு | 10,000 |
| உள் ஏற்றிச்செல் செலவு | 800 | | |
| எரிவளி | 2,200 | | |
| மொத்த இலாபம் கீ/இ | 38,700 | | |
| | 1,33,500 | | 1,33,500 |
| சம்பளம் 10,000<br>கூட்டுக:<br>கொடுபட வேண்டியது 600 | 10,600 | மொத்த இலாபம் கீ/கொ<br>பெற்ற வட்டம் | 38,700<br>400 |

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| வாடகை-உள்ளூர் வீதங்கள் | 1,800 | | |
| அச்சு-எழுது பொருள் | 1,200 | | |
| காப்பீடு 800<br>கழிக்க: முன்கூட்டிச் செலுத்ியது 200 | 600 | | |
| அனுமதித்த வட்டம் | 500 | | |
| பயணச் செலவுகள் | 1,800 | | |
| தேய்மானம்:<br>இயந்திரம் 1,200<br>அறைகலன் 150 | 1,350 | | |
| முதல் மீதான வட்டி | 1,500 | | |
| வாராக் கடன் | 1,000 | | |
| ஐயக் கடன் ஒதுக்கு $14000 \times \frac{3}{100}$ | 420 | | |
| நிகர இலாபம்—முதல் கணக்கிற்குமாற்றுதல் | 18,330 | | |
| | 39,100 | | 39,100 |

**திரு. ஆலவாயன் என்பவரது**
**1966 மார்ச் 31ஆம் நாளன்றைய**
**இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| பற்பல கடனீந்தோர் | *12,200* | கைவச ரொக்கம் | *500* |
| | | வங்கிவச ரொக்கம் | *2,000* |
| கொடுபட வேண்டிய செலவுகள்: | | பெறுவதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | *4,000* |
| கூலி *800* | | பற்பல கடனாளிகள் *15,000* | |
| சம்பளம் *600* | *1,400* | **கழிக்க:** வராக் கடன் (புதியது) *1,000* | |
| கடன்கள் | *10,000* | *14,000* | |
| முதல் *50,000* | | **கழிக்க:** ஐயக் கடன் ஒதுக்கு *420* | *13,580* |
| **கூட்டுக:** முதல் மீது வட்டி *1,500* | | முன்கூட்டிச் செலுத்திய காப்பீடு | *200* |
| நிகர இலாபம் *18,330* | | சரக்கிருப்பு (31-3-1966) | *10,000* |
| *69,830* | | அறைகலன் *3,000* | |
| **கழிக்க:** எடுப்புகள் *6,000* | *63,830* | **கழிக்க:** தேய்மானம் *150* | *2,850* |
| | | இயந்திரம் *12,000* | |
| | | **கழிக்க:** தேய்மானம் *1,200* | *10,800* |
| | | கட்டடங்கள் | *30,000* |
| | | நிலம் | *13,500* |
| | *87,430* | | *87,430* |

**எடுத்துக்காட்டு—6**

திரு. நந்தராஜன் என்பவரது ஏடுகளிலிருந்து எடுக்கப் பட்ட பின்வரும் விவரங்களிலிருந்து, 1964 டிசம்பர் 31ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க:

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| ரொக்கம் | 2,000 | பயணச் செலவுகள் | 1,600 |
| சரக்கிருப்பு (1-1-1964) | 8,320 | விற்பனைத் திருப்பம் | 200 |
| சம்பளம் | 12,600 | பெற்ற வட்டம் | 300 |
| விளம்பரம் | 1,200 | வாராக் கடன் | 100 |
| கடனீந்தோர் | 7,500 | கூலி | 10,200 |
| பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 600 | நிலம் | 13,200 |
| | | பொறிவகை | 18,500 |
| வங்கி மேல் வரைப்பற்று | 3,700 | அறைகலன் | 2,500 |
| | | லாரிகள் | 8,000 |
| விற்பனை | 58,000 | கடனாளிகள் | 5,800 |
| கொள்முதல் திருப்பம் | 400 | கடன்கள் | 10,000 |
| | | முதல் | 20,620 |
| கட்டுமம் | 500 | கொள்முதல் | 15,200 |

**சரிக்கட்டுகள்**

(1) பொறிவகை மீது 20%ம், நிலத்தின் மீது 2%ம் தேய்மானம் நீக்குக (2) கடனாளிகள் மீது 3% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கு உருவாக்குக. (3) புதியதாக எடுத்த காப்பீட்டுத் திட்டாவணத்தின் (Insurance Policy) கீழ் ரூ. 300 கொடுபட வேண்டியதாக இருக்கிறது. (4) பணியாட்கள் ரூ. 200 அளவிற்குப் பயணச் செலவுகள் என மிகையாகப் பெற்றுள்ளனர். (5) இறுதிச் சரக்கிருப்பு ரூ. 7,500 என மதிப்பிடப்பட்டது.

**விடை**

### திரு. நந்தராஜன் என்பவரின்
### 1964 டிசம்பர் 31ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய
### வியாபார, இலாப-நட்டக் கணக்கு

பற்று | வரவு

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| தொடக்கச் சரக்கிருப்பு | 8,320 | விற்பனை 58,000 | |
| கொள்முதல் 15,200 | | **கழிக்க :** விற்பனைத் திருப்பம் 200 | 57,800 |
| **கழிக்க :** கொள்முதல் திருப்பம் 400 | 14,800 | | |
| கூலி | 10,200 | இறுதிச் சரக்கிருப்பு | 7,500 |
| மொத்த இலாபம் கீ/இ | 31,980 | | |
| | 65,300 | | 65,300 |

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| சம்பளம் | 12,600 | மொத்த இலாபம் கீ/கொ | 31,980 |
| விளம்பரம் | 1,200 | பெற்ற வட்டம் | 300 |
| கட்டுமம் | 500 | | |
| பயணச் செலவுகள் 1,600<br>கழிக்க:<br>முன்கூட்டிச் செலுத்தியது 200 | 1,400 | | |
| வாராக் கடன் | 100 | | |
| தேய்மானம்:<br>பொறி வகை 3,700<br>நிலம் 264 | 3,964 | | |
| காப்பீடு | 300 | | |
| ஐயக் கடன் ஒதுக்கு $\frac{5800 \times 3}{100}$ | 174 | | |
| நிகர இலாபம் —முதல் கணக்கிற்கு மாற்றப்படுதல் | 12,042 | | |
| | 32,280 | | 32,280 |

**திரு. நந்தராஜன் என்பவரின்**
**1964 டிசம்பர் 31ஆம் நாளன்றைய**
**இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | | தொகை | சொத்துகள் | | தொகை |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ. |
| கடனீந்தோர் | | 7,500 | ரொக்கம் | | 2,000 |
| கொடுபட வேண்டிய காப்பீடு | | 300 | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | | 600 |
| வங்கி மேல் வரைப் பற்று | | 3,700 | | | |
| கடன்கள் | | 10,000 | கடனாளிகள் | 5,800 | |
| முதல் | 20,620 | | **கழிக்க:** ஐயக் கடன் ஒதுக்கு | 174 | |
| **கூட்டுக:** நிகர இலாபம் | 12,042 | | | | 5,626 |
| | | 32,662 | முன்கூட்டிச் செலுத்திய பயணச் செலவுகள் | | 200 |
| | | | சரக்கிருப்பு | | 7,500 |
| | | | லாரிகள் | | 8,000 |
| | | | அறைகலன் | | 2,500 |
| | | | பொறிவகை | 18,500 | |
| | | | **கழிக்க:** தேய்மானம் | 3,700 | |
| | | | | | 14,800 |
| | | | நிலம் | 13,200 | |
| | | | **கழிக்க:** தேய்மானம் | 264 | |
| | | | | | 12,936 |
| | | 54,162 | | | 54,162 |

**எடுத்துக்காட்டு—7**

பின்வரும் 1962 டிசம்பர் 31ஆம் நாளன்றைய இருப்பாய்வு திரு. உமாசங்கர் என்பவரது ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்டது:

| பற்று இருப்புகள் | தொகை | வரவு இருப்புகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| எடுப்புகள் | 7,500 | முதல் | 20,000 |
| அறைகலன்-பொருத்துகள் | 1,000 | பற்பல கடனீந்தோர் | 10,000 |
| தட்டச்சு | 750 | 10% வீதம் பெற்ற கடன் | 6,000 |
| சைக்கிள் | 200 | விற்பனை | 2,00,000 |
| மோட்டார் வண்டி | 16,500 | வெளித் திருப்பம் | 5,000 |
| பற்பல கடனாளிகள் | 20,000 | ஈட்டிய வட்டம் | 700 |
| கொள்முதல் | 1,20,000 | ஐயக் கடன் ஒதுக்கு | 330 |
| தொடக்கச் சரக்கிருப்பு | 20,000 | | |
| கேளிக்கைச் செலவு | 600 | | |
| சில்லறைச் செலவு | 300 | | |
| வட்டி (30-10-1962 முடிய செலுத்தியது) | 450 | | |
| வாராக் கடன் | 250 | | |
| உள் திருப்பம் | 20,000 | | |
| சம்பளம் | 8,500 | | |
| கூலி | 15.000 | | |
| வாடகை | 3,300 | | |
| அனுமதித்த வட்டம் | 500 | | |
| அனுமதித்த கழிவு | 1,000 | | |
| அஞ்சல்-தந்திச் செலவு | 180 | | |
| உள் ஏற்றிச்செல் செலவு | 3,000 | | |
| வெளி ஏற்றிச்செல் செலவு | 1,000 | | |
| கைவச ரொக்கம | 300 | | |
| வங்கிவச ரொக்கம் | 1,700 | | |
| | 2,42,030 | | 2,42,030 |

**சரிக்கட்டுகள்**

*(1) 31-12-1962 அன்றைய சரக்கிருப்பு ரூ. 8,000*

*(2) கொடுபடவேண்டிய செலவுகளாவன:*
*சம்பளம்—ரூ. 500; வாடகை—ரூ. 300; கூலி—ரூ. 1,000; இரண்டு மாதங்களுக்குரிய வட்டி.*

*(3) கடனாளிகள் மீது 5% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கைப் பேணுக.*

*(4) அறைகலன்—பொருத்துகள் மீது 10%ம், தட்டச்சு மீது 15%ம், சைக்கிள் மீது 15%ம், மோட்டார் வண்டி மீது 20%ம் தேய்மானம் நீக்குக.*

*(5) முதல் மீது 6% அளவிற்கு வட்டி விதிக்க; எடுப்புகள் மீது வட்டி விதிக்க வேண்டுவதில்லை.*

*1962 டிசம்பர் 31ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப - நட்டக் கணக்கையும், அந்நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க.*

**விடை**

**திரு. உமாசங்கரின்**
**1962 டிசம்பர் 31ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய**
**வியாபார இலாப-நட்டக் கணக்கு**

*பற்று* *வரவு*

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| தொடக்கச் சரக்கிருப்பு | 20,000 | விற்பனை 2,00,000<br>**கழிக்க:** விற்பனைத் திருப்பம் 20,000 | 1,80,000 |
| கொள் முதல் 1,20,000<br>**கழிக்க:** கொள் முதல் திருப்பம் 5,000 | 1,15,000 | இறுதிச் சரக்கிருப்பு | 8,000 |

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| கூலி 15,000<br>கூட்டுக:<br>கொடுபட வேண்டியது 1,000 | 16,000 | | |
| உள் ஏற்றிச் செல் செலவு | 3,000 | | |
| மொத்த இலாபம் கீ/இ—இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்றப் படுதல் | 34,000 | | |
| | 1,88,000 | | 1,88,000 |
| சம்பளம் 8,500<br>கூட்டுக:<br>கொடுபட வேண்டியது 500 | 9,000 | மொத்த இலாபம் கீ/கொ | 34,000 |
| | | ஈட்டிய வட்டம் | 700 |
| வாடகை 3,300<br>கூட்டுக:<br>கொடுபடவேண்டியது 300 | 3,600 | | |
| வட்டி 450<br>கூட்டுக:<br>கொடுபட வேண்டியது 100 | 550 | | |
| அனுமதித்த வட்டம் | 500 | | |
| அனுமதித்த கழிவு | 1,000 | | |
| அஞ்சல்-தந்திச் செலவு | 180 | | |
| வெளி ஏற்றிச் செல் செலவு | 1,000 | | |

| விவரம் | தொகை | விவரம் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. பை. | | ரூ. பை. |
| கேளிக்கைச் செலவு | 600 00 | | |
| சில்லறைச் செலவு | 300 00 | | |
| முதல் மீதான வட்டி | 1,200 00 | | |
| ஐயக் கடன் ஒதுக்கு:<br>புதிய ஒதுக்கு 1,000<br>**கூட்டுக:**<br>வாராக் கடன் 250<br>1,250<br>**கழிக்க:**<br>பழைய ஒதுக்கு 330 | 920 00 | | |
| தேய்மானம்:<br>அறை கலன் 100.00<br>தட்டச்சு 112.50<br>சைக்கிள் 30.00<br>மோட்டார் வண்டி 3,300.00 | 3,542 50 | | |
| நிகர இலாபம்—முதல் கணக்கிற்கு மாற்றப்படுதல் | 12,307 50 | | |
| | 34,700 00 | | 34,700 00 |

**திரு. உமாசங்கரின்**
**1962 டிசம்பர் 31ஆம் நாளன்றைய**
**இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | தொகை | சொத்துகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. பை. | | ரூ. பை. |
| பற்பல கடனீந்தோர் | 10,000 00 | கைவச ரொக்கம் | 300 00 |
| கொடுபட வேண்டிய செலவுகள்: சம்பளம் 500, வாடகை 300, கூலி 1,000, கடன்மீது வட்டி 100 | 1,900 00 | வங்கிவச ரொக்கம் | 1,700 00 |
| 10% வட்டிக்குக் கடன் | 6,000 00 | பற்பல கடனாளிகள் 20,000 **கழிக்க:** ஐயக் கடன் ஒதுக்கு 1,000 | 19,000 00 |
| முதல் 20,000.00 **கூட்டுக:** முதல் மீதான வட்டி 1,200.00 நிகர இலாபம் 12,307.50 — 33,507.50 **கழிக்க:** எடுப்புகள் 7,500.00 | 26,007 50 | சரக்கிருப்பு | 8,000 00 |
| | | அறைகலன்-பொருத்துகள் 1,000 **கழிக்க:** தேய்மானம் 100 | 900 00 |
| | | தட்டச்சு 750.00 **கழிக்க:** தேய்மானம் 112.50 | 637 50 |
| | | சைக்கிள் 200 **கழிக்க:** தேய்மானம் 30 | 170 00 |
| | | மோட்டார் வண்டி 16,500 **கழிக்க:** தேய்மானம் 3,300 | 13,200 00 |
| ரூ. | 43,907 50 | ரூ. | 43,907 50 |

## கணக்குகள்

### கொடுக்கப்படவேண்டியவை, முன்கூட்டிச் செலுத்தியவை ஆகிய சரிக்கட்டுகள் கொண்ட பயிற்சிகள்

**வினா எண் 1**

பின்வரும் இருப்புகள் பட்டியைக்கொண்டு, இருப்பாய்வு வியாபாரக் கணக்கு, இலாப - நட்டக் கணக்கு, 1959 மார்ச் 31 ஆம் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைத் தயாரிக்க:

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| கொள்முதல் | 16,000 | பழுதுபார்ப்புச் செலவு | 300 |
| வட்டம் (பற்று) | 1,300 | பல்வகைச் செலவுகள் | 55 |
| சம்பளமும் கூலியும் | 8,500 | கட்டடங்கள் | 4,000 |
| விற்பனை | 30,000 | இயந்திரம் | 1,500 |
| பயணச் செலவுகள் | 500 | குதிரைகளும் வண்டிகளும் | 500 |
| உள் ஏற்றிச் செல் செலவு | 275 | வியாபாரச் சரக்கிருப்பு (1-4-1958) | 5,900 |
| காப்பீடு | 150 | முதல் | 13,750 |
| கழிவு | 325 | பற்பல கடனாளிகள் | 3,250 |
| வாடகை-உள்ளூர் வீதங்கள் | 500 | பற்பல கடனீந்தோர் | 2,100 |
| கைவச ரொக்கம் | 25 | | |
| வங்கிவச ரொக்கம் | 2,770 | | |

பின்வருவனவற்றிற்கு வகை செய்க:

(அ) சம்பளம் - கூலி இவற்றிற்கான பொறுப்பு 650
(அதாவது கொடுபடவேண்டியது)

(ஆ) பயன்திரா வாடகை - உள்ளூர் வீதங்கள் 30
(அதாவது முன்கூட்டிச்செலுத்தியது)

(இ) 1959 மார்ச் 31 ஆம் நாளன்றைய சரக்கிருப்பு 6,500

**விடை:** (மொ. இ. ரூ. 14,325; நி. இ. ரூ. 2,075; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 18,575)

**வினா எண் 2**

திரு. ராம்கோபாலின் ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட 1957 டிசம்பர் 31ஆம் நாளன்றைய இருப்புகள் பின் வருமாறு:

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| ராம்கோபாலின் முதல் | 40,000 | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 3,000 |
| வட்டி (பற்று) | 1,500 | பற்பல கடனீந்தோர் | 20,000 |
| அலுவலக வாடகை | 500 | வங்கி இருப்பு (வரவு) | 2,000 |
| வரிகள் - காப்பீடு | 200 | தொழில் வளாகம் (Premises) | 40,000 |
| பொறி - இயந்திரம் | 20,000 | வளாக அடைமானத்தின் மீது கடன் | 30,000 |
| பற்பல கடனாளிகள் | 40,000 | ஏடுகள்- எழுது பொருள் இருப்பு | 500 |
| கூலி | 30,000 | அலுவலகச் செலவுகள் | 700 |
| சரக்கிருப்பு (1-1-1957) | 5,000 | விற்பனை | 96,400 |
| சம்பளம் | 7,000 | கொள்முதல் | 42,000 |
| செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 4,000 | | |
| விடு கருவிகள் | 1,000 | | |
| கைவச ரொக்கம் | 1,000 | | |

இறுதிச் சரக்கிருப்பின் மதிப்பு ரூ 8,000 ஆகும். கொடுபடவேண்டிய கூலி ரூ. 600; கொடுபடவேண்டிய சம்பளம் ரூ. 200; கொடுபடவேண்டிய வாடகை ரூ. 150. முன்கூட்டிச் செலுத்திய காப்பீடு ரூ. 50.

தக்க சரிக்கட்டுப் பதிவுகள் செய்து, 1957 டிசம்பர் 31ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப - நட்டக் கணக்கு, அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைத் தயாரிக்க.

**உதவிக் குறிப்பு** (Hints): வட்டி (பற்று) என்பது ஒரு செலவு; எனவே அது இலாப - நட்டக் கணக்கில் பற்றுப் பகுதியில் தோன்றவேண்டும்.

வங்கி இருப்பு (வரவு): இஃது ஒரு பொறுப்பு.

தொழில் வளாகம் (Business Premises) இது ஒரு சொத்து.

வளாக அடைமானத்தின் மீது கடன்: இது ஒரு பொறுப்பு. ஏடுகள் - எழுதுபொருள் இருப்பு : இது ஒரு சொத்து.

**விடை**: (மொ. இ. ரூ. 26,800; நி. இ. ரூ. 16,600; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 1,13,550).

**வினா எண் 3**

*1970 திசம்பர் 31ஆம் நாளன்று திரு. எஸ். குமார் என்பவரது ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட இருப்பாய்வு பின் வருமாறு:*

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| இயந்திரம் | 4,000 | முதல் | 9,000 |
| வங்கிவச ரொக்கம் | 1,000 | விற்பனை | 16,000 |
| கைவச ரொக்கம் | 500 | பற்பல கடனீந்தோர் | 4,500 |
| கூலி | 1,000 | பெற்ற வட்டி | 300 |
| கொள்முதல் | 8,000 | | |
| சரக்கிருப்பு (1-1-1970) | 6,000 | | |
| பற்பல கடனாளிகள் | 4,400 | | |
| பெறுதற்குரிய மாற்றுச்சீட்டுகள் | 2,900 | | |
| வாடகை | 450 | | |
| கழிவு | 250 | | |
| பொதுச் செலவுகள் | 800 | | |
| சம்பளம் | 500 | | |
| | 29,800 | | 29,800 |

**சரிக்கட்டுகள்**

| | | ரூ. |
|---|---|---|
| (அ) | மிகையாகச் செலுத்திய கூலி | 100 |
| (ஆ) | முன்கூட்டிச் செலுத்திய வாடகை | 150 |
| (இ) | கொடுபடவேண்டிய கழிவு | 75 |
| (ஈ) | கனிந்த நிலையில் வரவேண்டிய வட்டி | 125 |
| (உ) | 31-12-1970 அன்று சரக்கிருப்பு | 8,000 |

*31-12-1970ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க.*

**விடை:** *(மொ. இ. ரூ. 9,100; நி. இ. ரூ. 7,600; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 21,175)*

**வினா எண் 4**

1972 திசம்பர் 31ஆம் நாளன்று திரு. எஸ். சுகுமார் என்பவரின் ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட இருப்பாய்வு பின் வருமாறு:

| | பற்று | வரவு |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| அறைகலன்-பொருத்துகள் .. .. | 640 | |
| மோட்டார் வண்டிகள் .. .. | 6,250 | |
| கட்டடங்கள் .. .. .. | 7,500 | |
| முதல் .. .. .. | | 12,500 |
| வராக் கடன் .. .. .. | 125 | |
| பற்பல கடனாளிகள் .. .. | 3,800 | |
| பற்பல கடனீந்தோர் .. .. | | 2,700 |
| சரக்கிருப்பு (1-1-1972) .. .. | 3,460 | |
| கொள்முதல் .. .. .. | 5,475 | |
| விற்பனை .. .. .. | | 15,450 |
| வங்கி மேல்வரைப்பற்று .. .. | | 2,850 |
| விற்பனைத் திருப்பம் .. .. | 200 | |
| கொள்முதல் திருப்பம் .. .. | | 125 |
| விளம்பரம் .. .. .. | 450 | |
| வட்டி .. .. .. | 118 | |
| கழிவு .. .. .. | | 375 |
| ரொக்கம் .. .. .. | 650 | |
| வருமான வரி .. .. .. | 250 | |
| காப்பீடு .. .. .. | 1,000 | |
| பொதுச் செலவுகள் .. .. | 782 | |
| சம்பளம் .. .. .. | 3,390 | |
| | 34,000 | 34,000 |

**சரிக்கட்டுகள்**

(அ) 31-12-1972 அன்றைய சரக்கிருப்பு ரூ. 3,500.

(ஆ) வங்கி மேல்வரைப்பற்று மீது கொடுபட வேண்டியதாக உள்ள வட்டி ரூ. 100.

(இ) கொடுபடவேண்டிய சம்பளம் ரூ. 300.

(ஈ) ஒரு காலாண்டுக்குரிய காப்பீட்டுத் தொகை முன் கூட்டிச் செலுத்தப் பட்டிருக்கிறது.

(உ) பெற்ற கழிவில் மூன்றிலொரு பகுதி அடுத்த ஆண்டு செய்ய வேண்டிய பணியைச் சார்ந்தது.

**உதவிக் குறிப்பு** (அ) காப்பீட்டில் ¼ பகுதியாகிய ரூ. 250 முன்கூட்டிச் செலுத்திய செலவாகும்.
(ஆ) பெற்ற கழிவில் ⅛ பகுதியாகிய ரூ. 125 முன்கூட்டிப் பெற்ற வருமானமாகும். எனவே இத் தொகையை இலாப-நட்டக் கணக்கில் கழிவிலிருந்து கழிப்பதோடு, இருப்பு நிலைக் குறிப்பில் பொறுப்புகள் பகுதியில் காண்பிக்கவேண்டும்.

**விடை:** (மொ. இ. ரூ. 9,940; நி. இ. ரூ. 4,265; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 22,590)

**வினா எண் 5**

Xஎன்பவரது பின்வரும் பேரேட்டு இருப்புகளிலிருந்து, தக்க சரிக்கட்டுகள் செய்தபின் 1970 டிசம்பர் 31 ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க:

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| Xஎன்பவரின் முதல் | 80,000 | அச்சு-எழுது பொருள் | 400 |
| அவரது எடுப்புகள் | 6,000 | வாடகை-உள்ளூர் வரிகள்-வரிகள் | 4,600 |
| பொறி-இயந்திரம் | 25,000 | பற்பல கடனீந்தோர் | 10,000 |
| சரக்கிருப்பு (1-1-1970) | 15,000 | விற்பனை | 1,20,000 |
| கொள்முதல் | 82,000 | வெளித் திருப்பம் | 1,000 |
| உள்திருப்பம் | 2,000 | அஞ்சல்-தந்திச் செலவு | 800 |
| அறைகலன்-பொருத்துகள் | 5,000 | நடப்பு ஆண்டில் வளாகத்தைத் துணை-வாடகைக்கு விட்டுப் பெற்றவாடகை | |
| பற்பல கடனாளிகள் | 20,000 | | |
| வெளி ஏற்றிச் செல் செலவு | 500 | | |
| சத்தமும் வரியும் | 2,000 | காப்பீட்டுக் கட்டணம் | 2,400 |
| வியாபாரச் செலவுகள் | 800 | சம்பளம்-கூலி | 700 |
| | | கைவச ரொக்கம் | 21,300 |
| | 20,500 | வங்கிவச ரொக்கம் | 6,200 |

**சரிக்கட்டுகள்**

(அ) 1970 டிசம்பர் 31 அன்றைய சரக்கிருப்பு ரூ. 14,000.
(ஆ) முன்கூட்டிச் செலுத்திய காப்பீடு ரூ. 100.
(இ) கொடுபட வேண்டிய வாடகை ரூ. 400.
(ஈ) கனிந்த நிலையில் பெறவேண்டிய வாடகை ரூ. 100.

**விடை**: (மொ. இ. ரூ. 34,000; நி. இ. ரூ. 7,100 இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 91,500; அனாமத்துக் கணக்கு (பற்று) ரூ. 600).

**வினா எண் 6**

திரு. அருள் என்பவரது பின்வரும் இருப்பாய்விலிருந்து 1974 மார்ச் 31ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கையும், அந்நாளன்றைய இருப்பு நிலைக் குறிப்பையும் தயாரிக்க:

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு | 45,000 | முதல் | 90,000 |
| பொறி-இயந்திரம் | 85,000 | பற்பல கடனீந்தோர் | 43,000 |
| அறைகலன்-பொருத்துகள் | 7,500 | பெற்ற வட்டம் | 3,500 |
| சொந்த வளாகம் | 75,000 | வங்கி மேல் வரைப்பற்று | 20,000 |
| கொள்முதல் | 1,50,000 | கொள்முதல் திருப்பம் | 1,500 |
| சம்பளம் | 14,000 | விற்பனை | 3, 37,070 |
| பற்பல கடனாளிகள் | 55,000 | | |
| தயாரிப்புக்கூலி | 30,000 | | |
| தயாரிப்புச் செலவுகள் | 15,000 | | |
| உள் ஏற்றிச்செல் செலவு | 2,000 | | |
| வெளிஏற்றிச் செல் செலவு | 2,100 | | |
| ஆலைச் செலவுகள் | 10,000 | | |
| வாராக் கடன் | 750 | | |
| வட்டி-வங்கிச் கட்டணங்கள் | 625 | | |
| வாடகை | 750 | | |
| காப்பீடு | 1,500 | | |
| வங்கிவச ரொக்கம் | 695 | | |
| கைவச ரொக்கம் | 150 | | |
| | 4,95,070 | | 4,95,070 |

**சரிக்கட்டுகள்**

| | | ரூ. |
|---|---|---|
| (1) | இறுதிச் சரக்கிருப்பு | 57,000 |
| (2) | பயன்தீராக் காப்பீடு | 500 |
| (3) | சம்பளத்தில் அடுத்த ஆண்டுக்குரிய முன்பணம் என்ற வகையில் சேர்ந்துள்ள தொகை | 600 |
| (4) | மேல்வரைப்பற்று மீது கொடுபட வேண்டிய வட்டி | 1,000 |
| (5) | மாதம் ரூ. 200 வீதம் கடைசி இரண்டு மாதங்களுக்கு வாடகை செலுத்தப்படாமலுள்ளது. | |

**உதவிக்குறிப்பு:** (அ) பயன்தீராக் காப்பீடு: முன்கூட்டிச் செலுத்தப்பட்ட செலவு இவ்வாறு அழைக்கப்படுவதுண்டு.

(ஆ) சம்பள முன்பணம்: நடப்பு ஆண்டில் செலுத்தப்பட்ட அடுத்த ஆண்டுக்குரிய சம்பள முன்பணம் முன்கூட்டிச் செலுத்திய செலவாகும்.

(இ) மாதம் ரூ. 200 வீதம் இரு மாதங்களுக்குக் கொடுபட வேண்டிய வாடகை ரூ. 400 ஆகும்.

**விடை:** (மொ.இ. ரூ. 1,43,570; நி.இ. ரூ. 1,27,045; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ.2,81,445).

கொடுக்கப்படவேண்டியவை, முன்கூட்டிச் செலுத்தியவை, தேய்மானம் பற்றிய சரிக்கட்டுகளைக் கொண்ட பயிற்சிகள்.

**வினா எண் 7**

*கீழ்க்காணும் விவரங்களிலிருந்து திரு குமரன் என்பவரது 1966 ஜூன் 30ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கையும் அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க:*

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| விற்பனை | 83,000 | விற்பனைத் திருப்பம் | 600 |
| தொடக்கச் சரக்கிருப்பு | 8,200 | அறைகலன் | 7,400 |
| நிலம்-கட்டடங்கள் | 23,700 | பயணச் செலவுகள் | 5,300 |
| கடனாளிகள் | 9,300 | | |
| கடனீந்தோர் | 6,100 | சம்பளம் | 16,900 |
| பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 1,200 | கொள்முதல் திருப்பம் | 100 |
| கூலி | 12,600 | காப்பீடு | 600 |
| கொள்முதல் | 13,600 | முதல் | 29,600 |
| (உள்) ஏற்றிச் செல் செலவு | 900 | பொறிவகை | 20,000 |
| பெற்ற வட்டம் | 200 | வங்கி மேல் வரைப்பற்று | 5,000 |
| ரொக்கம் | 3,700 | | |

*இறுதிச் சரக்கிருப்பு ரூ. 7,000 என மதிப்பிடப்பட்டது. பொறிவகை மீது 10% தேய்மானம் நீக்குக. காலாண்டுக்குரிய காப்பீட்டுத் தொகை முன்கூட்டிச் செலுத்தப்பட்டிருக்கிறது. தொழிலாளிகளுக்குக் கொடுபட வேண்டியதாகவுள்ள தொகை ரூ. 3,000.*

**விடை**: *(மொ.இ. ரூ. 51,200; நி.இ. ரூ. 26,750; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 70,450).*

**வினா எண் 8**

1966 டிசம்பர் 31 ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய, திரு. சந்திரன் என்பவரது வியாபார, இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்பு நிலைக் குறிப்பையும் தயாரிக்க.

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| நிலம்-கட்டடங்கள் | 27,500 | அஞ்சற் செலவு | 1,000 |
| விற்பனை | 73,700 | விற்பாண்மையர் சம்பளம் | 6,300 |
| கொள்முதல் திருப்பம் | 4,000 | பொறிவகை | 16,300 |
| கடனீந்தோர் | 2,300 | விடுகருவிகள் | 2,700 |
| பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 6,200 | ரொக்கம் | 500 |
| கடனாளிகள் | 6,100 | வட்டங்கள் | 300 |
| சம்பளம் | 12,600 | பெற்ற வாடகை | 2,400 |
| பயணச் செலவுகள் | 4,300 | முதல் | 34,800 |
| கூலி | 14,800 | | |
| வரிகள் | 2,400 | | |
| சரக்கிருப்பு (1-1-1966) | 1,900 | | |
| கொள்முதல் | 8,300 | | |
| வெப்பமாக்கம் (Heating) | 6,000 | | |

**சரிக்கட்டுகள்**

பொறிவகை மீதும் விடுகருவிகள் மீதும் 20% தேய்மானம் நீக்குக. முன்கூட்டிச் செலுத்திய வரிகள் ரூ. 180. விற்பாண்மையருக்கு மிகையாகச் செலுத்திய தொகை ரூ. 50. இறுதிச் சரக்கிருப்பு ரூ. 1,500 என மதிப்பிடப்பட்டது.

**விடை:** (மொ. இ. ரூ. 48,200; நி.இ. ரூ. 20,130; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 57,230; அனாமத்துக் கணக்கு ரூ. 3,800).

**வினா எண் 9**

திரு. சந்திரன் என்பவரின் 1967 ஜூன் 30ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க.

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| ரொக்கம் | .. | 3,200 | |
| விற்பனை | .. | | 2,48,000 |
| கடனாளிகள் | .. | 10,600 | |
| நிலம்-கட்டடங்கள் | .. | 1,05,000 | |
| கூலி (ஆலை சார்ந்தது) | .. | 37,000 | |
| தொடக்கச் சரக்கிருப்பு | .. | 8,500 | |
| கடனீந்தோர் | .. | | 10,000 |
| பெறுதற்குரிய மாற்றுச்சீட்டுகள் | .. | 16,200 | |
| பொறிவகை | .. | 32,400 | |
| சம்பளம் | .. | 26,500 | |
| நிலக்கரி | .. | 12,300 | |
| செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுகள் | .. | | 3,200 |
| அறைகலன் | .. | 8,500 | |
| கொள்முதல் திருப்பம் | .. | | 1,600 |
| விற்பனைத் திருப்பம் | .. | 800 | |
| காப்பீடு | .. | 3,800 | |
| வாராக் கடன் | .. | 200 | |
| வாடகை-உள்ளூர் வீதங்கள் | .. | 4,500 | |
| வங்கி | .. | 12,800 | |
| கொள்முதல் | .. | 72,000 | |
| கடன்கள் | .. | | 23,500 |
| வட்டங்கள் (பற்று) | .. | 400 | |
| பெற்ற வாடகை | .. | | 2,500 |
| முதல் | .. | | 65,900 |
| | | 3,54,700 | 3,54.700 |

**சரிக்கட்டுகள்**

கூலி வகையில் இன்னும் ரூ. 9,200 கொடுபட வேண்டியதாக இருக்கிறது. இறுதிச் சரக்கிருப்பின் மதிப்பு ரூ. 4,300 ஆகும். சம்பள வகையில் செலுத்திய ரூ. 800ஐத் திரும்பப் பெற வேண்டும். காலாண்டுக்குரிய காப்பீடு முன்கூட்டிச் செலுத்தப் பட்டிருக்கிறது. பொறி வகை மீது 15% தேய்மானம் நீக்குக.

(**விடை:** மொ.இ. ரூ. 1,14,100; நி.இ. ரூ. 78,090; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 1,89,890).

**உதவிக் குறிப்பு:** சம்பள வகையில் திரும்பப் பெற வேண்டிய தொகையை முன்கூட்டிச் செலுத்திய சம்பளமாகக் கொள்க.

**வினா எண் 10**

பின்வரும் விவரங்களிலிருந்து இராமன் சகோதரர்களின் 1967 டிசம்பர் 31ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கையும் அந்நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க:

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| நிலம்-கட்டடங்கள் | .. | 82,600 | |
| ரொக்கம் | .. | 8,200 | |
| கடனாளிகள் | .. | 15,300 | |
| விற்பனை | .. | | 2,66,400 |
| தொடக்கச் சரக்கிருப்பு | .. | 4,700 | |
| கடனீந்தோர் | .. | | 12,600 |
| கூலி (தயாரிப்பு) | .. | 27,400 | |
| நிலக்கரி | .. | 12,300 | |
| பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | .. | 4,300 | |
| பொறிவகை | .. | 76,500 | |
| அறைகலன் | .. | 3,700 | |
| சம்பளம் | .. | 24,700 | |
| விற்பனைத் திருப்பம் | .. | 1,300 | |
| கொள்முதல் திருப்பம் | .. | | 1,400 |
| வாராக்கடன் | .. | 400 | |
| வாடகை-வரிகள் | .. | 3,600 | |
| காப்பீடு | .. | 1,200 | |
| பயணச் செலவுகள் | .. | 8,300 | |
| கொள்முதல் | .. | 36,500 | |
| திரு. கேசு என்பவரிடமிருந்து பெற்ற கடன் | .. | | 15,000 |
| வங்கி | .. | 12,000 | |
| வட்டம் (பற்று) | .. | 600 | |
| முதல் | .. | | 28,200 |
| | | 3,23,600 | 3,23,600 |

**சரிக்கட்டுகள்**

பொறிவகை மீது 10%ம், அறைகலன் மீது 20%ம் தேய்மானம் நீக்குக. காலாண்டுக்குரிய காப்பீடு முன்கூட்டிச் செலுத்தப்பட்டிருக்கிறது. ரூ. 400 அளவிற்குக் கூலி கொடுபட வேண்டியதாக இருக்கிறது. இறுதிச் சரக்கிருப்பு ரூ. 7,500 என மதிப்பிடப்பட்டது.

**விடை:** (மொ. இ. ரூ. 1,92,700; நி. இ. ரூ. 1,45,810; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 2,02,010).

**வினா எண் 11**

திரு. ராஜன் என்பவரது 1968 டிசம்பர் 31ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கையும் அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க:

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| கூலி (ஆலை) | .. | 33,000 | |
| தொடக்கச் சரக்கிருப்பு | .. | 5,700 | |
| கடனீந்தோர் | .. | | 15,180 |
| பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | .. | 10,700 | |
| பொறிவகை | .. | 62,700 | |
| ரொக்கம் | .. | 1,800 | |
| விற்பனை | .. | | 2,62,000 |
| கடனீந்தோர் | .. | 15,600 | |
| நிலம் கட்டடங்கள் | .. | 82,080 | |
| சம்பளம் | .. | 24,700 | |
| நிலக்கரி | .. | 8,700 | |
| செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுகள் | | | 1,500 |
| அறைகலன் | .. | 6,200 | |
| கொள்முதல் திருப்பம் | .. | | 900 |
| விற்பனைத் திருப்பம் | .. | 600 | |
| கொள்முதல் | .. | 58,000 | |
| கடன்கள் | .. | | 15,000 |
| வட்டங்கள் (பற்று) | .. | 600 | |
| பெற்ற வாடகை | .. | | 1,500 |
| முதல் | .. | | 52,300 |
| காப்பீடு | .. | 12,600 | |
| வாராக் கடன் | .. | 6,000 | |
| வாடகை-உள்ளூர் வீதங்கள் | .. | 6,000 | |
| வங்கி | .. | 13,400 | |
| | | 3,48,380 | 3,48,380 |

**சரிக்கட்டுகள்**

ரூ. 8,600 அளவிற்குக் கூலி கொடுபடவேண்டியதாக இருக்கிறது. இறுதிச் சரக்கிருப்பின் மதிப்பு ரூ. 7,300 ஆகும். காலாண்டுக்குரிய உள்ளூர் வீதங்கள் முன்கூட்டிச் செலுத்தப்பட்டுள்ளன. பொறிவகை மீது 10% தேய்மானம் நீக்குக.

**விடை:** (மொ.இ. ரூ. 1,55,600; நி. இ. ரூ. 1,02,430; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 1,95,010).

**வினா எண் 12**

திரு. கிருஷ்ணசந்த் என்பவரின் 1966 டிசம்பர் 31ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க:

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| சம்பளம் | .. | 12,400 | |
| நிலக்கரி | .. | 1,700 | |
| செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுகள் | .. | | 800 |
| அறைகலன் | .. | 600 | |
| கொள்முதல் திருப்பம் | .. | | 400 |
| விற்பனைத் திருப்பம் | .. | 200 | |
| கூலி (ஆலை) | .. | 4,200 | |
| தொடக்கச் சரக்கிருப்பு | .. | 1,400 | |
| கடனீந்தோர் | .. | | 300 |
| பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | .. | 600 | |
| பொறிவகை | .. | 9,200 | |
| ரொக்கம் | .. | 500 | |
| விற்பனை | .. | | 26,300 |
| கடனாளிகள் | .. | 1,200 | |
| நிலம்-கட்டடங்கள் | .. | 5,400 | |
| காப்பீடு | .. | 1,800 | |
| வாராக் கடன் | .. | 100 | |
| வாடகை-உள்ளூர் வரிகள் | .. | 700 | |
| வங்கி | .. | 4,700 | |
| கொள்முதல் | .. | 5,300 | |
| கடன்கள் | .. | | 8,500 |
| வட்டங்கள் (பற்று) | .. | 400 | |
| பெற்ற வாடகை | .. | | 900 |
| முதல் | .. | | 13,200 |
| | | 50,400 | 50,400 |

**சரிக்கட்டுகள்**

ரூ. 1,200 அளவிற்குச் சம்பளம் கொடுபட வேண்டியதாக இருக்கிறது. இறுதிச் சரக்கிருப்பின் மதிப்பு ரூ. 2,300 ஆகும். காலாண்டுக்குரிய காப்பீடு முன்கூட்டிச் செலுத்தப்பட்டிருக்கிறது. பொறிவகை மீது 20% தேய்மானம் நீக்குக.

**விடை:** (மொ. இ. ரூ. 16,200; நி. இழப்பு ரூ. 890; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 23,110).

**வினா எண் 13**

பின்வரும் விவரங்களிலிருந்து திரு. கோபாலன் என்பவரின் 1968 டிசம்பர் 31ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கையும், அந்நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க:

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| முதல் | .. | | 30,000 |
| எடுப்புகள் | .. | 1,000 | |
| நிலம்-கட்டடங்கள் | .. | 89,600 | |
| ரொக்கம் | .. | 1,250 | |
| கடனாளிகள் | .. | 15,380 | |
| விற்பனை | .. | | 2,66,040 |
| சரக்கிருப்பு (ஜனவ்ரி 1, 1968) | .. | 4,790 | |
| கூலி | .. | 27,480 | |
| ஏற்றிச்செல் செலவு | .. | 12,310 | |
| பெறுதற்குரிய மாற்றுச்சீட்டுகள் | .. | 4,300 | |
| கடனீந்தோர் | .. | | 12,850 |
| இயந்திரங்கள் | .. | 76,500 | |
| அறைகலன் | .. | 3,700 | |
| சம்பளம் | .. | 23,740 | |
| விற்பனைத் திருப்பம் | .. | 1,340 | |
| வாராக் கடன் | .. | 400 | |
| வாடகை-வரிகள் | .. | 3,670 | |
| காப்பீடு | .. | 1,000 | |
| எழுதுபொருள் | .. | 1,300 | |
| பயணச் செலவுகள் | .. | 7,000 | |
| இராமன் என்பவரிடமிருந்து பெற்ற கடன் | .. | | 15,000 |
| கொள்முதல் | .. | 36,590 | |
| வங்கி | .. | 12,000 | |
| அனுமதித்த வட்டம் | .. | 650 | |
| பொதுச் செலவுகள் | .. | 70 | |
| அஞ்சற் செலவு | .. | 1,250 | |
| கொள்முதல் திருப்பம் | .. | | 1,430 |
| | | 3,25,320 | 3,25,320 |

**சரிக்கட்டுகள்**

(1) தேய்மானம் நீக்குக:

| | | |
|---|---|---|
| இயந்திரம் | .. | 10% |
| அறைகலன் | .. | 20% |
| நிலம்-கட்டடங்கள் | .. | 2% |

| | | ரூ. |
|---|---|---|
| (2) | கொடுபட வேண்டிய வரிகள் .. | 250 |
| (3) | மிகையாகச் செலுத்திய கூலி .. | 4,350 |
| (4) | சரக்கிருப்பு (டிசம்பர் 31, 1968) .. | 7,530 |

**விடை:** (மொ.இ. ரூ. 1,96,840; நி. இ. ரூ. 1,47,328) இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 2,04,428;

**வினா எண் 14**

பின்வரும் இருப்பாய்வையும் அதற்குப் பிறகு தோன்றும் செய்திகளையும் கொண்டு, 1971 டிசம்பர் 31ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க:

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| முதல் .. | | 16,090 |
| எடுப்புகள் .. | 700 | |
| பொறி-இயந்திரம் .. | 12,000 | |
| குதிரைகள்-வண்டிகள் .. | 2,600 | |
| பற்பல கடனாளிகள் .. | 3,600 | |
| பற்பல கடனீந்தோர் .. | | 2,600 |
| கொள்முதல் | 2,000 | |
| விற்பனை .. | | 6,200 |
| கூலி .. | 800 | |
| ஈட்டிய கழிவு .. | | 1,000 |
| வங்கிவச ரொக்கம் .. | 2,600 | |
| சம்பளம் .. | 800 | |
| பழுதுபார்ப்புச் செலவுகள் .. | 190 | |
| சரக்கிருப்பு (1-1-1971) .. | 1,600 | |
| வாடகை .. | 450 | |
| தயாரிப்புச் செலவுகள் .. | 150 | |
| செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுகள் .. | | 2,350 |
| வாராக்கடன் .. | 500 | |
| ஏற்றிச்செல் செலவு .. | 160 | |
| | 28,150 | 28,150 |

**சரிக்கட்டுகள்**

இறுதிச் சரக்கிருப்பின் மதிப்பு ரூ. 1,600 ஆகும். பொறி-இயந்திரம் மீது 10%ம். குதிரைகள்-வண்டிகள் மீது 15%ம், தேய்மானம் நீக்குக. செலுத்தாமலுள்ள வாடகை ரூ. 50 ஆகும்.

**விடை:** (மொ. இ. ரூ. 3,090; நி. இ. ரூ. 510; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 20,810).

**வினா எண் 15**

திரு. இராமன் என்பவரது ஏடுகளிலிருந்து பின்வரும் 1971 மார்ச் 31ஆம் நாளன்றைய தொகைகள் எடுக்கப்பட்டன. கீழ்க் காணும் சரிக்கட்டுகளைக் கருத்திற்கொண்டு அந்த ஆண்டுக் குரிய இறுதிக் கணக்குகளைத் தயாரிக்க:

(அ) பொறி-இயந்திரம் மீதும், அறைகலன் மீதும் 10% தேய்மானம் நீக்குக.

(ஆ) செலுத்தப் பெறாமலுள்ள மார்ச் மாத வாடகையாகிய ரூ. 150க்கு வகை செய்க.

(இ) பற்பல கடனாளிகள் மீது 2½% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கு உருவாக்குக.

(ஈ) கொடுபடவேண்டிய கூலி ரூ. 800; கொடுபடவேண்டிய சம்பளம் ரூ. 350.

(உ) 1971 மார்ச் 31 ஆம் நாளன்றைய சரக்கிருப்பு ரூ. 16,580.

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| பொறி-இயந்திரம் | .. | 55,000 | |
| அறைகலன்-பொருத்துகள் | .. | 1,720 | |
| முதல் | .. | | 93,230 |
| ஆலை எரிபொருள்-சக்தி | .. | 542 | |
| அலுவலகச் சம்பளம் | .. | 3,745 | |
| ஒளியாக்கம் (ஆலை) | .. | 392 | |
| விற்பனை | .. | | 1,26,117 |
| பயணச் செலவுகள் | .. | 925 | |
| விற்பனை மீதான ஏற்றிச்செல் செலவு | .. | 960 | |
| வட்டம் (பற்று) | .. | 422 | |
| எடுப்புகள் | .. | 6,820 | |
| தயாரிப்புச் செலவுகள் | .. | 2,940 | |
| காப்பீடு | .. | 470 | |
| சரக்கிருப்பு (1-4-1970) | .. | 21,725 | |
| வங்கிவச ரொக்கம் | .. | 2,245 | |
| கைவச ரொக்கம் | .. | 110 | |
| பற்பல கடனாளிகள் | .. | 48,000 | |
| பற்பல கடனீந்தோர் | .. | | 22,880 |
| கொள்முதல் | .. | 83,290 | |
| கூலி | .. | 9,915 | |
| வாடகை-வரிகள் | .. | 1,705 | |
| அலுவலகச் செலவுகள் | .. | 2,778 | |
| கொள்முதல் மீதான ஏற்றிச்செல் செலவு | .. | 897 | |
| செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுகள் | .. | | 6,984 |
| கொள்முதல் திருப்பம் | .. | | 3,172 |
| கழிவு | .. | 260 | |
| விற்பனைத் திருப்பம் | .. | 7,422 | |
| முன்கூட்டிச் செலுத்திய காப்பீடு | .. | 100 | |
| | | 2,52,383 | 2,52,383 |

**விடை:** (மொ. இ.—ரூ. 17,946; நி.இ.—ரூ. 691; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 1,16,883).

**உதவிக் குறிப்பு:** 'முன்கூட்டிச் செலுத்திய காப்பீடு' என்னும் செய்தி இருப்பாய்விலேயே தோன்றுவதால் அதற்குரிய சரிக்கட்டு ஏற்கனவே செய்யப்பட்டுவிட்டது எனப் பொருள். எனவே 'முன்கூட்டிச்செலுத்திய காப்பீடு, ரூ. 100' என்பதை இருப்புநிலைக் குறிப்பின் சொத்துப் பகுதிக்கு எடுத்துச் சென்றாலே போதுமானது. இது குறித்து இலாப-நட்டக் கணக்கில் தோன்றும் காப்பீட்டில் எந்தச் சரிக்கட்டும் தேவையில்லை.

**வினா எண் 16**

திரு. ஆறுமுகம் என்பவரது ஏடுகளிலிருந்து எடுக்கப் பட்ட 1960 திசம்பர் 31 ஆம் நாளன்றைய இருப்புகள் பின்வருமாறு. அவற்றைக் கொண்டும், தக்க சரிக்கட்டுகள் செய்தும் 1960 திசம்பர் 31 ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப - நட்டக் கணக்கையும், அந்த இறுதி நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க:

| பற்று இருப்புகள் | தொகை | வரவு இருப்புகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ஆறுமுகம்—எடுப்புகள் | 3,000 | ஆறுமுகம்—முதல் | 15,000 |
| அறைகலன் - பொருத்துகள் | 500 | பற்பல கடனீந்தோர் | 13,000 |
| தட்டச்சுகள் | 1,000 | விற்பனை | 80,000 |
| சைக்கிள் | 250 | வெளித் திருப்பம் | 500 |
| பற்பல கடனாளிகள் | 15,000 | ஐயக் கடன் ஒதுக்கு | 500 |
| வாடகை | 2,400 | | |
| சம்பளம் | 3,600 | | |
| வாடிக்கையருக்கு அனுமதித்த வட்டம் | 425 | | |
| பொதுச் செலவுகள் | 1,800 | | |
| சரக்கிருப்பு (1-1-1960) | 15,000 | | |
| கொள்முதல் | 60,000 | | |
| உள் திருப்பம் | 1,000 | | |
| உள் ஏற்றிச்செல் செலவு | 750 | | |
| வெளி ஏற்றிச் செல் செலவு | 1,250 | | |
| உள்ளூர் வீதங்கள்—வரிகள் | 600 | | |
| கைவச ரொக்கம் | 75 | | |
| வங்கிவச ரொக்கம் | 2,350 | | |
| | 1,09,000 | | 1,09,000 |

**செய்ய வேண்டிய சரிக்கட்டுகளாவன:**

(அ) 31-12-1960 அன்று கைவச சரக்கிருப்பு ரூ. 11,000.

(ஆ) அறைகலன் மீது 6%ம், தட்டச்சுகள் மீது 15%ம், சைக்கிள் மீது 20%ம் தேய்மானம் நீக்குக.

(இ) பற்பல கடனாளிகள் மீது 5% ஐயக் கடன் ஒதுக்கு பேணுக.

**விடை:** (மொ. இ.—ரூ. 14,750; நி. இ.—ரூ. 4,195; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 29,195)

**வினா எண் 17**

திரு. ஆர். சங்கர் என்பவரது ஏடுகளிலிருந்து எடுக்கப் பட்ட 1974 மார்ச் 31 ஆம் நாளன்றைய தொகைகள் பின் வருமாறு. கீழ்க்காணும் சரிக்கட்டுகளைச் செய்து அந்த ஆண்டுக்குரிய அவரது இறுதிக் கணக்குகளைத் தயாரிக்க:

(அ) பொறி - இயந்திரம், அறைகலன் - பொருத்துகள் இவற்றின் மீது 10% தேய்மானம் நீக்குக.

(ஆ) செலுத்தப்பெறாமலுள்ள மார்ச் மாத வாடகை யாகிய ரூ. 150க்கு வகைசெய்க.

(இ) கடனாளிகள் மீது 2½% அளவிற்கு ஐயக்கடன் ஒதுக்கு உருவாக்குக.

(ஈ) கொடுபடவேண்டியவை: கூலி ரூ. 800; சம்பளம் ரூ. 350.

(உ) 1974 மார்ச் 31 ஆம் நாளன்றைய சரக்கிருப்பு ரூ. 16,580.

| பற்று இருப்புகள் | தொகை | வரவு இருப்புகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| பொறி - இயந்திரம் | 55,000 | முதல் | 90,230 |
| அறைகலன் பொருத்துகள் | 1,720 | விற்பனை | 1,26,117 |
| ஆலை எரி பொருள்-சக்தி | 542 | பற்பல கடனீந்தோர் | 22,880 |
| அலுவலகச் சம்பளம் | 3,745 | கொள்முதல் திருப்பம் | 6,172 |
| ஒளியாக்கம் (ஆலை) | 392 | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 6,412 |
| பயணச் செலவுகள் | 925 | ஈட்டிய வட்டி | 80 |
| விற்பனை மீதான ஏற்றிச்செல் செலவு | 960 | | |
| வட்டம் | 422 | | |
| எடுப்புகள் | 6,820 | | |
| சரக்கிருப்பு (1-4-1973) | 21,725 | | |
| தயாரிப்புச் செலவுகள் | 2,940 | | |
| காப்பீடு | 470 | | |
| வங்கிவச ரொக்கம் | 2,245 | | |
| கைவச ரொக்கம் | 118 | | |
| பற்பல கடனாளிகள் | 48,000 | | |
| கொள்முதல் | 89,790 | | |
| கூலி | 9,915 | | |
| வாடகை-வரிகள் | 1,705 | | |
| அலுவலகச் செலவுகள் | 2,778 | | |
| கொள்முதல் மீதான ஏற்றிச் செல் செலவு | 897 | | |
| கழிவு | 260 | | |
| விற்பனைத் திருப்பம் | 522 | | |
| | 2,51,891 | | 2,51,891 |

**விடை:** (மொ. இ.—ரூ. 21,346; நி. இ.—ரூ. 2,789; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 1,16,791).

**வினா எண் 18**

திரு. பொன்னம்பலம் என்பவரது ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட 1965 திசம்பர் 31 ஆம் நாளன்றைய இருப்புகள் பின்வருமாறு:

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| முதல் .. .. .. .. | | 85,000 |
| எடுப்புகள் .. .. .. | 5,000 | |
| சரக்கிருப்பு (1-1-1965) .. .. | 16,000 | |
| பற்பல கடனீந்தோர் .. .. | | 18,000 |
| அறைகலன் .. .. .. | 6,000 | |
| அச்சு - எழுதுபொருள் .. .. | 2,000 | |
| நிலக்கரி - நீர் .. .. .. | 800 | |
| கொள்முதல் .. .. .. | 1,20,000 | |
| உள் ஏற்றிச்செல் செலவு .. .. | 3,000 | |
| வங்கிக் கடன் .. .. .. | | 30,000 |
| பெற்ற வட்டம் .. .. .. | | 600 |
| அனுமதித்த வட்டம் .. .. | 800 | |
| விற்பனை .. .. .. | | 2,00,000 |
| அஞ்சற் செலவு .. .. .. | 400 | |
| ஐயக் கடன் ஒதுக்கு .. .. | | 1,000 |
| செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுகள் | | 17,800 |
| சம்பளம் .. .. .. .. | 4,000 | |
| தயாரிப்புக் கூலி .. .. .. | 25,000 | |
| விளம்பரம் .. .. .. | 20,000 | |
| இயந்திரம் .. .. .. | 80,000 | |
| அலுவலக வாடகை .. .. | 2,500 | |
| பெறுதற்குரிய மாற்றுச்சீட்டுகள் | 12,000 | |
| காப்பீடு .. .. .. .. | 600 | |
| கைவச ரொக்கம் .. .. .. | 2,500 | |
| வங்கிவச ரொக்கம் .. .. | 10,000 | |
| பற்பல கடனாளிகள் .. .. | 40,000 | |
| ஆலை வாடகை .. .. .. | 1,800 | |
| | 3,52,400 | 3,52,400 |

**செய்யவேண்டிய சரிக்கட்டுகளாவன:**

(அ) இறுதிச் சரக்கிருப்பின் மதிப்பு ரூ. 20,000 ஆகும்.

(ஆ) ஐயக் கடன் ஒதுக்கை 5% ஆக உயர்த்துக.

(இ) 1966 சூன் 30 ஆம் நாள் முடிய காப்பீடு செலுத்தப்பட்டுள்ளது.

(ஈ) இயந்திரத்தின் மீது 10%ம், அறைகலன் மீது 5%ம் தேய்மானம் நீக்குக.

(உ) கொடுபடவேண்டிய செலவுகளாவன:

(i) தயாரிப்புக் கூலி ரூ. 2,000;

(ii) சம்பளம் ரூ. 500

1965 திசம்பர் 31-ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப - நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க.

**விடை:** (மொ. இ—ரூ. 51,400; நி. இ—ரூ. 12,200; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 1,60,500)

**வினா எண் 19**

திரு. ஆலவாயன் என்பவரது ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட பின்வரும் விவரங்களிலிருந்து, 1966 மார்ச் 31-ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க:

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| முதல் .. .. .. .. | | 50,000 |
| வங்கிவச ரொக்கம் .. .. | 2,000 | |
| கைவச ரொக்கம் .. .. .. | 500 | |
| கட்டடங்கள் .. .. .. | 30,000 | |
| கூலி .. .. .. .. | 15,000 | |
| சம்பளம் .. .. .. .. | 10,000 | |
| வாடகை - உள்ளூர் வீதங்கள் .. | 1,800 | |
| அச்சு - எழுதுபொருள் .. .. | 1,200 | |
| சரக்கிருப்பு (1-4-1965) .. .. | 8,000 | |
| கொள்முதல் .. .. .. | 70,000 | |
| காப்பீடு .. .. .. .. | 800 | |
| இயந்திரம் .. .. .. | 12,000 | |
| எடுப்புகள் .. .. .. | 6,000 | |
| நிலம் .. .. .. .. | 13,500 | |
| விற்பனை .. .. .. | | 1,25,500 |
| உள் ஏற்றிச்செல் செலவு .. .. | 800 | |
| எரிவளி .. .. .. | 2,200 | |
| பற்பல கடனீந்தோர் .. .. | | 2,000 |
| பற்பல கடனாளிகள் .. .. | 15,000 | |
| கொள்முதல் திருப்பம் .. .. | | 2,000 |
| விற்பனைத் திருப்பம் .. .. | 1,500 | |
| பெறுதற்குரிய மாற்றுச்சீட்டுகள் .. | 4,000 | |
| பெற்ற வட்டம் .. .. .. | | 400 |
| அனுமதித்த வட்டம் .. .. | 8,000 | |
| அறைகலன் .. .. .. | 3,000 | |
| பயணச் செலவுகள்.. .. .. | 1,800 | |
| கடன்கள் .. .. .. .. | | 10,000 |
| அனாமத்துக் கணக்கு .. .. | | 17,200 |
| | 2,07,100 | 2,07,100 |

**பின்வருவனவற்றிற்கு வகை செய்க:**

(அ) முன்கூட்டிச்செலுத்திய காப்பீடு .. .. ரூ. 200.

(ஆ) இயந்திரம் மீது 10%ம், அறைகலன் மீது 5%ம் தேய்மானம் நீக்குக.

(இ) 3% வீதத்தில் முதல் மீது வட்டி அளிக்க.

(ஈ) கொடுபடவேண்டிய செலவுகளாவன:
கூலி ரூ. 800; சம்பளம் ரூ. 600.

(உ) வாராக் கடன் ரூ. 1,000ஐப் போக்கெழுதி, கடனாளிகள் மீது 3% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கு உருவாக்குக.

(ஊ) இறுதிச் சரக்கிருப்பு மதிப்பு ரூ. 10,000.

**விடை:** (மொ. இ—ரூ. 39,200; நி. இ—ரூ. 11,330; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 87,430; அனாமத்துக் கணக்கு (வரவு இருப்பு) ரூ. 17,200)

**வினா எண் 20**

திரு. நந்தராஜன் என்பவரது ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட பின்வரும் விவரங்களிலிருந்து, 1964 திசம்பர் 31 ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப - நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க:

| பற்று இருப்புகள் | தொகை | வரவு இருப்புகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ரொக்கம் | 2,000 | கடனீந்தோர் | 7,500 |
| சரக்கிருப்பு (1-1-1964) | 8,320 | வங்கி மேல் வரைப்பற்று | 3,700 |
| சம்பளம் | 12,600 | விற்பனை | 58,000 |
| விளம்பரம் | 1,200 | கொள்முதல் திருப்பம் | 400 |
| பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 600 | பெற்ற வட்டம் | 300 |
| கட்டுமம் | 500 | கடன்கள் | 10,000 |
| கொள்முதல் | 15,200 | முதல் | 20,620 |
| பயணச் செலவுகள் | 1,600 | | |
| விற்பனைத் திருப்பம் | 200 | | |
| வாராக் கடன் | 100 | | |
| கூலி | 10,200 | | |
| நிலம் | 13,200 | | |
| பொறி வகை | 18,500 | | |
| அறைகலன் | 2,500 | | |
| லாரிகள் | 8,000 | | |
| கடனாளிகள் | 5,800 | | |
| | 1,00,520 | | 1,00,520 |

**சரிக்கட்டுகள்**

பொறிவகை மீது 20%ம், நிலத்தின் மீது 2%ம் தேய்மானம் நீக்குக. கடனாளிகள் மீது 3% ஐயக் கடன் ஒதுக்கு உருவாக்குக. புதியதாக எடுக்கப்பட்ட காப்பீட்டுத் திட்டாவணத்தின் (Policy) மீது முனைமம் (Premium) ரூ. 300 கொடுபடவேண்டியதாக இருக்கிறது. பணியாளர்கள் பயணச் செலவுகள் என மிகையாகப் பெற்ற தொகை ரூ. 200. இறுதிச் சரக்கிருப்பு ரூ. 7,500 என மதிப்பிடப்பட்டது.

**விடை:** (மொ. இ.—ரூ. 31,980; நி. இ.—ரூ. 12,042; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 54,162).

**வினா எண் 21**

திரு. கிருஷ்ணன் என்பவரது 1963 சூன் 30 ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப - நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க:

| பற்று இருப்புகள் | தொகை | வரவு இருப்புகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| நிலம் - கட்டடங்கள் | 18,300 | விற்பனை | 86,300 |
| கூலி | 18,900 | கொள்முதல் திருப்பம் | 700 |
| அறைகலன் | 3,800 | ஐயக் கடன் ஒதுக்கு | 400 |
| சம்பளம் | 16,500 | கடனீந்தோர் | 3,700 |
| பொறிவகை | 27,300 | வங்கி வைப்புமீது பெற்ற வட்டி | 100 |
| செலுத்திய கழிவு | 2,300 | முதல் | 43,300 |
| வங்கி | 8,000 | | |
| ரொக்கம் | 500 | | |
| பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 1,200 | | |
| உள் ஏற்றிச்செல் செலவு | 600 | | |
| கொள்முதல் | 25,000 | | |
| கடனாளிகள் | 6,000 | | |
| தொடக்கச் சரக்கிருப்பு | 2,000 | | |
| காப்பீடு | 2,400 | | |
| விற்பனைத் திருப்பம் | 200 | | |
| அஞ்சற் செலவு | 300 | | |
| பொதுச் செலவுகள் | 1,200 | | |
| | 1,34,500 | | 1,34,500 |

**சரிக்கட்டுகள்**

இறுதிச் சரக்கிருப்பு ரூ. 3,200 என மதிப்பிடப்பட்டது. கடனாளிகள் மீது 5% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கிற்கு வகைசெய்க. காலாண்டுக்குரிய காப்பீடு முன்கூட்டிச் செலுத்தப்பட்டுள்ளது. கூலி ரூ. 800ம், விளம்பரச் செலவுகள் ரூ. 300ம் கொடுபடவேண்டியதாக உள்ளன. பொறிவகை மீது 10% தேய்மானம் நீக்குக.

**விடை:** (மொ. இ.—ரூ. 42,700; நி. இ. ரூ. 17,770; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 65,870).

**வினா எண் 22**

கீழ்க் காணுபவை திரு. இஸ்மாயில் என்பவரது ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட 1964 மார்ச் 31 ஆம் நாளன்றைய இருப்புகளாகும்:

| பற்று இருப்புகள் | தொகை | வரவு இருப்புகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| திரு. இஸ்மாயிலின் எடுப்புகள் | 6,000 | திரு. இஸ்மாயிலின் முதல் | 15,000 |
| சரக்கிருப்பு (1-4-1963) | 12,500 | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 1,200 |
| பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 1,500 | பற்பல கடனீந்தோர் | 10,000 |
| பற்பல கடனாளிகள் | 15,000 | விற்பனை | 2,50,000 |
| விளம்பரம் | 750 | | |
| கேளிக்கைச் செலவுகள் | 600 | | |
| அனுமதித்த வட்டம் | 1,200 | | |
| அஞ்சல் - தந்திச் செலவு | 500 | | |
| காப்பீடு | 600 | | |
| பல்வகைச் செலவுகள் | 1,200 | | |
| வாராக் கடன் | 1,000 | | |
| கொள்முதல் | 1,90,000 | | |
| கூலி | 10,000 | | |
| விற்பனைத் திருப்பம் | 10,000 | | |
| உள் ஏற்றிச்செல் செலவு | 5,000 | | |
| சம்பளம் | 5,500 | | |
| வாடகை | 2,200 | | |
| அறைகலன் | 1,000 | | |
| தட்டச்சு | 800 | | |
| லாரி | 6,000 | | |
| லாரி பேணுகைச் செலவு | 3,600 | | |
| கைவச ரொக்கம் | 350 | | |
| வங்கிவச ரொக்கம் | 900 | | |
| | 2,76,200 | | 2,76,20 |

**பின்வருவனவற்றிற்குச் சரிக்கட்டுகள் செய்க :**

(அ) 31-3-1964 அன்றைய சரக்கிருப்பு .. ரூ. 7,500.

(ஆ) கொடுபடவேண்டிய செலவுகளாவன:

கூலி ரூ. 1,000; சம்பளம் ரூ. 500;
வாடகை ரூ. 200; லாரி பேணுகை ரூ. 500.

(இ) பற்பல கடனாளிகள் மீது 5%. அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கு உருவாக்குக.

(ஈ) தேய்மானம் நீக்குக:

அறைகலன் மீது 10%; தட்டச்சு மீது 15%; லாரி மீது 25%.

31-3-1964 ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப - நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க.

**விடை:** (மொ. இ.—ரூ. 29,000; நி. இ.—ரூ. 8,180; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 30,580).

**வினா எண் 23**

திரு. பரசுராம் என்பவரது ஏடுகள் காண்பிக்கும் இருப்புகள் பின்வருமாறு. 1968 திசம்பர் 31 ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப - நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க:

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| 1968 சனவரி 1 ஆம் நாளன்றைய சரக்கிருப்பு .. .. .. | 15,000 | |
| கொள்முதல் .. .. .. | 13,000 | |
| விற்பனை .. .. .. | | 30,000 |
| உள் ஏற்றிச்செல் செலவு .. .. | 200 | |
| அச்சு - எழுதுபொருள் .. .. | 800 | |
| சம்பளம் .. .. .. | 5,000 | |
| எடுப்புகள் .. .. .. | 1,700 | |
| பற்பல கடனீந்தோர் .. .. | | 2,000 |
| பற்பல கடனாளிகள் .. .. | 18,000 | |
| அறைகலன் .. .. .. | 1,000 | |
| முதல் .. .. .. | | 25,000 |
| அஞ்சல் - தந்திச் செலவு .. .. | 900 | |
| செலுத்திய வட்டி.. .. .. | 400 | |
| இயந்திரம் .. .. .. | 4,000 | |
| கடன் கணக்கு .. .. .. | | 3,000 |
| | 60,000 | 60,000 |

சரிக்கட்டுதல்

(1) இயந்திரத்தின் மீது 10%ம் அறைகலன் மீது 5%ம் தேய்மானம் நீக்குக.

(2) முதல் மீது 5% வீதத்தில் வட்டி அனுமதிக்க.

(3) 5% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கு உருவாக்குக.

(4) 1968 திசம்பர் 31 ஆம் நாளன்றைய சரக்கிருப்பு ரூ. 12,000.

**விடை:** (மொ. இ.—ரூ. 13,800; நி. இ.—ரூ. 4,100; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 33,650)

**வினா எண் 24**

பின்வரும் இருப்பாய்வு 1969 ஜுன் 30 ஆம் நாளன்று திரு. இராமன் என்பவரது ஏடுகளிலிருந்து இறக்கப்பட்டது;

| | பற்று | வரவு |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| முதல் .. .. .. .. | | 49,000 |
| எடுப்புகள் .. .. .. | 4,000 | |
| பொதுச் செலவுகள் .. .. | 5,680 | |
| கட்டடம் .. .. .. | 22,000 | |
| இயந்திரங்கள் .. .. .. | 10,000 | |
| சரக்கிருப்பு (1-7-1968) .. .. | 32,400 | |
| நிலக்கரி .. .. .. | 4,480 | |
| கூலி .. .. .. | 14,400 | |
| வரிகள் - காப்பீடு .. .. .. | 2,630 | |
| கடனாளிகள் .. .. .. | 12,560 | |
| கடனீந்தோர் .. .. .. | | 5,760 |
| வட்டம் .. .. .. | 1,100 | |
| 6% வட்டி வீதத்திற்குக் கடன் .. | | 15,000 |
| மோட்டார் கார் .. .. | 7,500 | |
| அறைகலன் .. .. .. | 500 | |
| ஐயக் கடன் ஒதுக்கு .. .. | | 1,800 |
| கழிவு .. .. .. | | 2,640 |
| மோட்டார் கார் செலவுகள் .. | 2,810 | |
| செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுகள் | | 7,700 |
| ரொக்கம் .. .. .. .. | 160 | |
| வங்கி மேல்வரைப்பற்று .. .. | | 6,600 |
| இந்தியன் வங்கி பங்குகள் .. .. | 5,000 | |
| விற்பனை .. .. .. | | 1,30,720 |
| கொள்முதல் .. .. .. | 93,550 | |
| கடன் மீதான வட்டி .. .. | 450 | |
| | 2,19,220 | 2,19,220 |

பின்வருவனவற்றிற்குத் தக்கவாறு வகைசெய்த பின், 1969 சூன் 30 ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப - நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க:

(1) இறுதிச் சரக்கிருப்பு .. ... ரூ. 47,000.

(2) இயந்திரங்கள் மீது 10%ம், மோட்டார் கார் மீது 12%ம் தேய்மானம் நீக்குக.

(3) கடன் மீது ஆறு மாத வட்டி கொடுபடவேண்டியதாக இருக்கிறது.

(4) வாராக் கடன் ரூ. 320 ஐப் போக்கெழுதுக.

(5) கடனாளிகள் மீது 5% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கு பேணுக.

**விடை:** (மொ. இ.—ரூ. 32,890; நி. இ.—ரூ. 21,378; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 1,01,888):

**உதவிக்குறிப்பு** 'இந்தியன் வங்கி பங்குகள்' என்பது 'முதலீடுகள்' (Investments) ஆகும். எனவே இந்த விவரம் இருப்புநிலைக் குறிப்பில் 'சொத்துகள்' பகுதியில் தோன்றும்.

**வினா எண் 25**

திரு. சுகுமாரன் என்பவரது 1966 ஜூன் 30 ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப - நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க:

| பற்று இருப்புகள் | தொகை | வரவு இருப்புகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ரொக்கம் | 370 | விற்பனை | 63,900 |
| தொடக்கச் சரக்கிருப்பு | 5,700 | கடனீந்தோர் | 5,200 |
| கடனாளிகள் | 3,200 | ஐயக் கடன் ஒதுக்கு | 400 |
| கூலி | 13,200 | பெற்ற வாடகை | 5,000 |
| ஏற்றிச்செல் செலவு | 300 | கொள்முதல் திருப்பம் | 500 |
| வாணிகக் குறிகள் | 5,300 | முதல் | 58,720 |
| விளம்பரம் | 1,250 | | |
| சம்பளம் | 10,900 | | |
| இயந்திரம் | 28,900 | | |
| நிலம் - கட்டடங்கள் | 28,000 | | |
| மின்னாற்றல் (ஆலை) | 6,500 | | |
| பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 1,700 | | |
| பயணச் செலவுகள் | 2,300 | | |
| காப்பீடு | 3,600 | | |
| கொள்முதல் | 12,000 | | |
| வட்டம் | 300 | | |
| வாராக் கடன் | 700 | | |
| வங்கி | 9,500 | | |
| | 1,33,720 | | 1,33,720 |

**சரிக்கட்டுகள் :**

போக்கெழுதப்படவேண்டிய ரூ. 200 ஏட்டு மதிப்புள்ள பழுதுற்ற சரக்குகளையும் சேர்த்து இறுதிச் சரக்கிருப்பு ரூ. 3,200 என மதிப்பிடப்பட்டது. இயந்திரத்தின் மீது 20%ம், நிலம்- கட்டடங்கள் மீது 5%ம் தேய்மானம் நீக்குக. முன் கூட்டிச்செலுத்திய காப்பீடு ரூ. 800. பெற்ற வாடகையில் 1966 சூலை மாதத்திற்குரிய வாடகையாகிய ரூ. 300ம் சேர்ந்திருக்கிறது. கடனாளிகள் மீது 5% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கு பேணுக.

**விடை:** (மொா. இ.—ரூ. 29,900; நி. இ.—ரூ. 9,210; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 73,430).

**உதவிக் குறிப்பு:**

(1) வாணிகக் குறிகள் ஒரு சொத்தாகும்.

(2) இக்கணக்கில் இறுதிச் சரக்கிருப்பு பற்றி இரண்டு சரிக்கட்டுகள். அவற்றிற்குரிய குறிப்பேட்டுப் பதிவு களாவன:

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| (அ) | இறுதிச் சரக்கிருப்பு பற்று வியாபாரக் க/கு (இறுதிச் சரக்கிருப்பு பற்றிய பதிவு). | 3,000 | 3,000 |
| (ஆ) | இலாப -நட்டக் க/கு பற்று வியாபாரக் க/ (பழுதுற்ற சரக்குகளைப் போக்கெழுதுதல்—இந்தப் பதிவால் மொத்த இலாபம் பாதிக்கப்படாமல் இருக்கும்). | 200 | 200 |

**வினா எண் 26**

பின்வருபவை திரு. வேலன் என்பவரது ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட 1967 திசம்பர் 31 ஆம் நாளன்றைய இருப்புகளாகும்:

| பற்று இருப்புகள் | தொகை | வரவு இருப்புகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| கட்டடங்கள் | 15,000 | முதல் | 20,000 |
| இயந்திரம் | 10,000 | கொள்முதல் திருப்பம் | 1,000 |
| அறைகலன் | 1,000 | விற்பனை | 1,40,000 |
| மோட்டார் கார் | 8,000 | பற்பல கடனீந்தோர் | 4,800 |
| தொடக்கச் சரக்கிருப்பு | 16,000 | ஈட்டிய வட்டம் | 500 |
| கொள்முதல் | 94,000 | ஐயக் கடன் ஒதுக்கு | 300 |
| விற்பனைத் திருப்பம் | 500 | அனாமத்துக் கணக்கு | 20,000 |
| பற்பல கடனாளிகள் | 15,000 | | |
| பொதுச் செலவுகள் | 800 | | |
| கைவச ரொக்கம் | 300 | | |
| வங்கிவச ரொக்கம் | 4,700 | | |
| சம்பளம் | 14,000 | | |
| வாடகை | 4,000 | | |
| கழிவு | 1,400 | | |
| உள்ளூர் வீதங்கள்-வரிகள் | 600 | | |
| வாராக் கடன் | 200 | | |
| காப்பீடு | 400 | | |
| அனுமதித்த வட்டம் | 700 | | |
| | 1,86,600 | | 1,86,600 |

**பின்வருவனவற்றிற்கு வகை செய்க :**

*(1)* கொடுபடவேண்டியவை: சம்பளம் ரூ. 1,200; கழிவு ரூ. 200; வாடகை ரூ. 800.

*(2)* முன்கூட்டிச்செலுத்திய காப்பீடு ரூ. 100.

*(3)* சரக்கிருப்பு 31-12-1967 அன்று ரூ. 20,000.

*(4)* 5% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கு பேணுக.

*(5)* இயந்திரத்தின் மீது 5%ம், மோட்டார் கார் மீது 10%ம், அறைகலன் மீது 4%ம், கட்டடங்கள் 3%ம் தேய்மானம் நீக்குக.

31-12-1967ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கையும் அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க.

**விடை:** (மொ. இ.—ரூ. 50,500; நி.இ.—ரூ. 24,560; இருப்பு நிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 71,500; அனாமத்துக் கணக்கு ரூ. 20,000).

**வினா எண் 27**

திரு. சின்னப்பன் என்பவரது ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட 1968 ஜூன் 30ஆம் நாளன்றைய இருப்புகள் பின்வருமாறு:

| பற்று இருப்புகள் | தொகை | வரவு இருப்புகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| எடுப்புகள் | 5,000 | முதல் | 20,000 |
| கொள்முதல் | 90,000 | விற்பனை | 1,30,000 |
| உள் திருப்பம் | 700 | வெளித் திருப்பம் | 900 |
| உள் ஏற்றிச் செல் செலவு | 1,100 | பற்பல கடனீந்தோர் | 6,000 |
| வெளி ஏற்றிச் செல் செலவு | 800 | | |
| கொள்முதல் மீதான வரி | 2,000 | | |
| சரக்கிருப்பு (1-7-1967) | 11,000 | | |
| மோட்டார் வேன் | 6,000 | | |
| சம்பளம் | 5,000 | | |
| வாடகை | 2,000 | | |
| வரிகள் | 300 | | |
| காப்பீடு | 600 | | |
| பற்பல கடனாளிகள் | 8,000 | | |
| கைவச ரொக்கம் | 500 | | |
| வங்கிவச ரொக்கம் | 2,500 | | |
| அறைகலன் | 1,000 | | |
| நிலம் | 20,400 | | |
| | 1,56,900 | | 1,56,900 |

**செய்யவேண்டிய சரிக்கட்டுகளாவன:**

(அ) மோட்டார் வேன் மீது 10%ம், அறைகலன் மீது 5%ம் தேய்மானம் நீக்குக.

(ஆ) 30-6-1968 அன்று சரக்கிருப்பு ரூ. 14,000.

(இ) 5% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கு உருவாக்குக.

30-6-1968ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்பு நிலைக் குறிப்பையும் தயாரிக்க.

**விடை:** (மொ. இ.—ரூ. 40,100; நி. இ.—ரூ. 30,350; இருப்புநிலைக் குறிப்புமொத்தம் ரூ. 51,350).

**வினா எண் 28**

திரு. ராமதாஸ் என்பவரது ஏடுகளிலிருந்து எடுக்கப் பட்ட 1958 திசம்பர் 31ஆம் நாளன்றைய இருப்புகள் பின் வருமாறு: அவருடைய அந்த ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்பு நிலைக் குறிப்பையும் தயாரிக்க:

| பற்று இருப்புகள் | தொகை | வரவு இருப்புகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| எடுப்புகள் | 2,500 | முதல் | 15,000 |
| அறைகலன்-பொருத்துகள் | 1,300 | வங்கி மேல் வரைப்பற்று | 2,100 |
| தொழில் வளாகம் | 10,000 | பற்பல கடனீந்தோர் | 5,500 |
| சரக்கிருப்பு (1-1-1958) | 11,000 | குடியிருப்போரிட மிருந்து பெற்ற வாடகை | 500 |
| பற்பல கடனாளிகள் | 9,000 | விற்பனை | 75,000 |
| கொள்முதல் | 55,000 | வட்டம் (வரவு) | 1,000 |
| உள் திருப்பம் | 1,000 | ஐயக் கடன் ஒதுக்கு | 1,000 |
| வட்டம் (பற்று) | 800 | | |
| வரிகள் | 1,000 | | |
| பொதுச் செலவுகள் | 2,000 | | |
| சம்பளம் | 4,500 | | |
| கழிவு (பற்று) | 1,100 | | |
| கொள்முதல் மீதான ஏற்றிச் செல் செலவு | 900 | | |
| | 1,00,100 | | 1,00,100 |

**சரிக்கட்டுகள்**

1958 திசம்பர் 31ஆம் நாளன்றைய சரக்கிருப்பு ரூ. 10,000 ஆகும், ஐயக்கடன் ஒதுக்கிற்காக ரூ. 500க்கு வகை செய்க. தொழில் வளாகத்தின் மீது ரூ. 200ம் அறைகலன்-பொருத்துகள் மீது ரூ. 150ம் தேய்மானம் நீக்குக.

**விடை:** (மொ. இ.—ரூ. 17,100; நி.இ.— ரூ.9,350; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 29,450).

**வினா எண்-29**

திரு. பாலன் என்பவரது ஏடுகளிலிருந்து 1958 திசம்பர் 31ஆம் நாளன்று இறக்கப்பட்ட இருப்பாய்வு பின்வருமாறு. கீழ்க்காணும் சரிக்கட்டுகளைச் செய்த பின்னர், 31-12-1958 ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்பு நிலைக் குறிப்பையும் தயாரிக்க:

(அ) பொறி-இயந்திரம் மீது 10% தேய்மானம் நீக்குக.

(ஆ) அறைகலன்-பொருத்துகள் மீது 5% தேய்மானம் நீக்குக.

(இ) கடனாளிகள் மீது 5% அளவிற்கு ஐயக்கடன் ஒதுக்கு பேணுக.

(ஈ) கனிந்தும் (பெற உரியதாகியும்) பெறப்படாமலுள்ள வாடகை ரூ. 50.

(உ) பயன்தீராக் காப்பீடு ரூ. 30.

(ஊ) 31-12-1958 அன்றைய சரக்கிருப்பு ரூ. 14,500 என மதிப்பிடப்பட்டது.

**இருப்பாய்வு**

| பற்று இருப்புகள் | தொகை | வரவு இருப்புகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| சொந்த வளாகம் (Premises) | 15,000 | முதல் | 50,000 |
| கொள்முதல் | 27,000 | கழிவு | 4,000 |
| வாராக் கடன் | 250 | வட்டம் | 300 |
| உள்ளூர் வீதங்கள்-காப்பீடு | 300 | வெளித் திருப்பம் | 800 |
| தயாரிப்புக் கூலி | 8,400 | பற்பல கடனீந்தோர் | 6,200 |
| சரக்கிருப்பு (1-1-1958) | 9,600 | செலுத்துதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 1,500 |
| உள் திருப்பம் | 1,200 | ஐயக்கடன் ஒதுக்கு | 350 |
| உள் ஏற்றிச் செல் செலவு | 500 | சில்லறை வரவுகள் | 50 |
| பற்பல கடனாளிகள் | 10,000 | விற்பனை | 73,000 |
| எரிபொருள்-சக்தி | 200 | | |
| வாணிக நற்பெயர் | 30,000 | | |
| அறைகலன்-பொருத்துகள் | 4,000 | | |
| கைவச ரொக்கம் | 1,050 | | |
| வங்கிவச ரொக்கம் | 7,500 | | |
| அலுவலகச் சம்பளம் | 1,200 | | |
| பொறி-இயந்திரம் | 20,000 | | |
| | 1,36,200 | | 1,36,200 |

**விடை:** (மொ. இ.—ரூ. 41,400; நி. இ.—ரூ. 41,730; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 99,430).

**வினா எண் 30**

திரு. மோகன் என்பவரது ஏடுகளிலிருந்து பின்வரும் இருப்புகள் இறக்கப்பட்டன. 1970 திசம்பர் 31ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்பு நிலைக் குறிப்பையும் தயாரிக்க:

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| சரக்கிருப்பு (1-1-1970) | .. | 20,000 | |
| முதல் | .. | | 25,000 |
| பெற்ற வட்டம் | .. | | 200 |
| விற்பனை | .. | | 65,000 |
| வங்கிக் கடன் | .. | | 2,000 |
| கொள்முதல் | .. | 45,000 | |
| பற்பல கடனாளிகள் | .. | 16,000 | |
| அறைகலன் | .. | 1,000 | |
| இயந்திரம் | .. | 8,000 | |
| எடுப்புகள் | .. | 2,500 | |
| பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | .. | 600 | |
| செலுத்திய வட்டி | .. | 100 | |
| அஞ்சற் செலவு | .. | 300 | |
| ஏற்றிச்செல் செலவு | .. | 250 | |
| சம்பளம் | .. | 3,200 | |
| வாராக்கடன் | .. | 350 | |
| வங்கிக் கட்டணங்கள் | .. | 50 | |
| கைவச ரொக்கம் | .. | 150 | |
| வங்கிவச ரொக்கம் | .. | 1,500 | |
| பற்பல கடனீந்தோர் | .. | | 7,500 |
| வாடகை | .. | 700 | |
| | | 99,700 | 99,700 |

**சரிக்கட்டுகள்:**

இயந்திரத்தின் மீது 10%ம், அறைகலன் மீது 5%ம், தேய்மானம் நீக்குக. கடனாளிகள் மீது 5% அளவிற்கு ஐயக்கடன் ஒதுக்கு உருவாக்குக. முதல் மீது 8% வட்டி அனுமதிக்க. கொடுபடவேண்டிய வாடகை ரூ. 300. இறுதிச் சரக்கிருப்பு ரூ. 18,000 என மதிப்பிடப்பட்டது.

**விடை:** (மொ. இ. —ரூ. 17,750; நி. இ. —ரூ. 9,300; இருப்பு நிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 43,600).

**வினா எண் 31**

திரு. இராமன் என்பவரது ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட 1959 திசம்பர் 31ஆம் நாளன்றைய இருப்பாய்வு பின்வருமாறு. 31-12-1959ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கையும், அந்நாளன்றைய இருப்பு நிலைக் குறிப்பையும் தயாரிக்க:

| பற்று இருப்புகள் | தொகை | வரவு இருப்புகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| எடுப்புகள் | 4,800 | முதல் | 50,000 |
| சரக்கிருப்பு (1-1-1959) | 30,000 | பற்பல கடனீந்தோர் | 10,000 |
| அறைகலன்-பொருத்துகள் | 13,000 | 6%வீதத்திற்கு வங்கிக்கடன் | 20,000 |
| அச்சு-எழுது பொருள் | 1,200 | பெற்ற வட்டம் | 400 |
| நிலக்கரி, எரி பொருள், நீர் | 600 | விற்பனை | 2,35,350 |
| நிதம் | 3,500 | ஐயக்கடன் ஒதுக்கு (1-1-1959) | 600 |
| கொள்முதல் | 75,000 | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 6,500 |
| வருமானவரி | 9,500 | | |
| அனுமதித்த வட்டம் | 950 | | |
| பொறி பழுது பார்ப்புச் செலவு | 1,000 | | |
| ஆலை வாடகை | 2,500 | | |
| சம்பளம் | 2,800 | | |
| தயாரிப்புக் கூலி | 24,000 | | |
| விளம்பரம் | 19,000 | | |
| பொறி-இயந்திரம் | 70,000 | | |
| அலுவலக வாடகை | 3,600 | | |
| சில்லறைச் செலவு | 1,000 | | |
| பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 12,500 | | |
| வெளி ஏற்றிச் செல் செலவு | 1,500 | | |
| காப்பீடு | 600 | | |
| வட்டி | 1,000 | | |
| வங்கிவச ரொக்கம் | 7,500 | | |
| கைவச ரொக்கம் | 3,500 | | |
| பற்பல கடனாளிகள் | 33,800 | | |
| | 3,22,850 | | 3,22,850 |

**தேவையான சரிக்கட்டுகள் :**

(1) இறுதிச் சரக்கிருப்பின் மதிப்பு ரூ. 40,000 ஆகும்.

(2) பொறி-இயந்திரத்தின் மீது 10%ம், அறைகலன்-பொருத்துகள் மீது 5%ம், தேய்மானம் நீக்குக.

(3) ஐயக்கடன் ஒதுக்கை 5%அளவிற்கு உயர்த்துக; கடனீந்தோர் மீதான வட்ட ஒதுக்கை 2% அளவிற்கு உருவாக்குக.

(4) 31-3-1960 வரையிலுமான 3 மாதங்களுக்குக் காப்பீடு முன்கூட்டிச் செலுத்தப் பட்டிருக்கிறது.

(5) ஆலை வாடகை வகையில் ரூ. 200 முன்கூட்டிச் செலுத்தப் பட்டிருக்கிறது.

(6) பழுதுபார்ப்பு வகையில் செலுத்த வேண்டிய ரூ. 300 இன்னும் கொடுபட வேண்டியதாக இருக்கிறது.

**விடை:** (மொ. இ.—ரூ. 1,39,950; நி. இ.—ரூ. 98,960; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 1,71,460).

**வினா எண் 32**

திரு. மீனாட்சிசுந்தரம் என்பவரது பேரேட்டிலிருந்து எடுக்கப்பட்ட 1961 திசம்பர் 31ஆம் நாளைய இருப்புகள் பின்வருமாறு:

| பற்று இருப்புகள் | தொகை | வரவு இருப்புகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| எடுப்புகள் | 3,500 | முதல் க/கு | 20,000 |
| கட்டடம் | 10,000 | விற்பனை | 1,25,000 |
| இயந்திரம் | 2,500 | பற்பல கடனீந்தோர் | 7,500 |
| அறைகலன்-பொருத்துகள் | 600 | ஐயக்கடன் ஒதுக்கு | 400 |
| சைக்கிள்கள் | 400 | கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்கு | 200 |
| தாடக்கச் சரக்கிருப்பு | 12,500 | 9% வட்டிக்குக் கடன் | 5,000 |
| கொள்முதல் | 75.000 | | |
| விற்பனைத் திருப்பம் | 5,000 | | |
| கொள்முதல் மீது செலுத்திய வரி | 15,000 | | |
| பற்பல கடனாளிகள் | 10,000 | | |
| சம்பளம் | 4,400 | | |
| கூலி | 7,500 | | |
| வாடகை | 2,750 | | |
| பயணச் செலவுகள் | 1,250 | | |
| அஞ்சல்-தந்திச் செலவு | 135 | | |
| உள் ஏற்றிச் செல் செலவு | 2,500 | | |
| வெளி ஏற்றிச் செல் செலவு | 750 | | |
| பொதுக் கட்டணங்கள் | 900 | | |
| உள்ளூர் வீதங்கள்-வரிகள் | 90 | | |
| செலுத்திய வட்டி | 375 | | |
| வாராக் கடன் | 300 | | |
| கைவச ரொக்கம் | 250 | | |
| வங்கிவச ரொக்கம் | 2,400 | | |
| | 1,58,100 | | 1,58,100 |

**செய்யவேண்டிய சரிக்கட்டுகளாவன :**

(1) 31-12-1961ஆம் நாளன்றைய சரக்கிருப்பு ரூ. 14,000.

(2) கொடுபடவேண்டிய செலவுகளாவன: சம்பளம் ரூ. 400; வாடகை ரூ. 250; கூலி ரூ. 600; செலுத்தியது போக ஓராண்டுக்குரிய மீதி வட்டி.

(3) ஐயக்கடன் ஒதுக்கை 5% அளவிற்கும், கடனாளி கள் மீதான வட்ட ஒதுக்கை 2½% அளவிற்கும் பேணுக.

(4) கட்டடம் மீது 2½%ம். இயந்திரம் மீது 10%ம், அறைகலன் மீது 6%ம், சைக்கிள்கள் மீது 15%ம் தேய்மானம் நீக்குக.

1961 திசம்பர் 31ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக் குரிய வியாபார இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளன் றைய இருப்பு நிலைக் குறிப்பையும் தயாரிக்க.

**விடை:** (மொ. இ. ரூ. 20,900; நி. இ. ரூ. 8,491-50; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 38,816-50).

| | | | ரூ. |
|---|---|---|---|
| **உதவிக்குறிப்பு :** | ரூ. 5000 மீது 9% வீதம் ஓராண்டு வட்டி | — | 450 |
| | ஏற்கனவே செலுத்திய வட்டி | — | 375 |
| | கொடுபட வேண்டிய வட்டி | — | 75 |

**வினா எண் 33**

திரு. பால் என்பவரது ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட 1963 ஜூன் 30ஆம் நாளன்றைய இருப்புகள் பின்வருமாறு :

| பற்று இருப்புகள் | தொகை | வரவு இருப்புகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| எடுப்புகள் க/கு | 3,600 | முதல் க/கு | 5,000 |
| கட்டிடங்கள் | 15,000 | வியாபாரக் கடனீந்தோர் | 5,000 |
| பொறி-இயந்திரம் | 15,000 | பெற்ற கடன்கள் | 25,000 |
| அறைகலன்-பொருத்துகள் | 4,000 | விற்பனை | 3,00,000 |
| லாரி | 10,000 | ஐயக்கடன் ஒதுக்கு | 300 |
| கொள்முதல் மீதான சத்தமும் வரியும் | 25,000 | கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்கு | 150 |
| வெளி ஏற்றிச் செல் செலவு | 1,000 | வங்கியிடமிருந்து பெற்ற மேல்வரைப் பற்று | 24,750 |
| சம்பளம் | 6,600 | | |
| கூலி | 20,000 | | |
| ஒளியாக்கக் கட்டணங்கள் | 1,000 | | |
| வரிகள்-உரிமங்கள் | 1,200 | | |
| அஞ்சல்-தந்திச் செலவு | 150 | | |
| பொதுக் கட்டணங்கள் | 750 | | |
| செலுத்திய வட்டி | 2,250 | | |
| லாரி பேணுகைச் செலவு | 3,500 | | |
| பற்பல கடனாளிகள் | 10,000 | | |
| வைப்புகள் (பற்று) | 1,000 | | |
| கொள்முதல் | 2,20,000 | | |
| தொடக்கச் சரக்கிருப்பு | 15,000 | | |
| உள் ஏற்றிச் செல் செலவு | 2,000 | | |
| காப்பீடு | 500 | | |
| விற்பனை மீதான கழிவு | 1,000 | | |
| வாடிக்கையருக்கு அனுமதித்த வட்டம் | 1,500 | | |
| கைவச ரொக்கம் | 150 | | |
| | 3,60,200 | | 3,60,200 |

**தேவையான சரிக்கட்டுகளாவன:**

(1) 30-6-1963 அன்று கைவசச் சரக்கிருப்பு ரூ. 20,000.

(2) பின்வருவனவற்றிற்கு வகை செய்க:

(அ) கொடுபட வேண்டிய சம்பளம் ரூ. 600.

(ஆ) கொடுபடவேண்டிய கூலி ரூ. 1,000

(இ) கடன்கள் மீது கொடுபட வேண்டிய வட்டி ரூ. 500; மேல்வரைப்பற்று மீது கொடுபட வேண்டிய வட்டி ரூ. 250.

(ஈ) கொடுபட வேண்டிய லாரி பேணுகைச் செலவு ரூ. 500.

(உ) முன்கூட்டிச் செலுத்திய காப்பீடு ரூ. 125.

(3) கடனாளிகள் மீது 5% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கும், 2½% அளவிற்கு வட்ட ஒதுக்கும் பேணுக.

(4) கட்டிடங்கள் மீது 5%ம், இயந்திரம் மீது 10%ம் அறைகலன்-பொருத்துகள் மீது 10%ம், லாரி மீது 25%ம், தேய்மானம் நீக்குக.

1963 ஜூன் 30ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க.

**விடை:** (மொ. இ. —ரூ. 37,000; நி.இ.— ரூ. 10,387-50; இருப்பு நிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 69,387-50).

**உதவிக் குறிப்பு :** வரிகள் - உரிமங்கள் (Licences) என்பது ஒரு செலவாகும்.

**வினா எண் 34**

திரு. பீட்டர் என்பவரது ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட 31-12-1964ஆம் நாளன்றைய இருப்புகள் பின்வருமாறு :

| பற்று இருப்புகள் | தொகை | வரவு இருப்புகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| எடுப்புகள் | 5,000 | முதல் க/கு | 20,000 |
| பெறுதற்குரிய மாற்றுச்சீட்டுகள் | 2,000 | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 1,500 |
| சரக்கிருப்பு (1-1-1964) | 15,000 | பற்பல கடனீந்தோர் | 9,000 |
| அறைகலன் | 750 | விற்பனை | 2,45,000 |
| தட்டச்சு | 1,000 | ஐயக் கடன் ஒதுக்கு | 500 |
| சைக்கிள்கள் | 500 | | |
| லாரி | 15,000 | கடனாளிகள் மீதான வட்ட ஒதுக்கு | 250 |
| பற்பல கடனாளிகள் | 16,000 | | |
| கொள்முதல் | 1,75,000 | வங்கியிடமிருந்து பெற்ற மேல்வரைப் பற்று | 12,500 |
| உள் திருப்பம் | 15,000 | | |
| உள் ஏற்றிச் செல் செலவு | 10,000 | | |
| லாரி பேணுகைச் செலவு | 5,500 | | |
| சம்பளம் | 8,250 | | |
| கூலி | 11,000 | | |
| வாடகை | 3,300 | | |
| வட்டி | 450 | | |
| அஞ்சல்-எழுதுபொருள் | 300 | | |
| அனுமதித்த வட்டம்-கழிவு | 2,000 | | |
| பொதுக் கட்டணங்கள் | 1,250 | | |
| உரிமங்கள்-வரிகள் | 500 | | |
| பழுதுபார்ப்பு-பேணுகைச் செலவுகள் | 300 | | |
| கைவச ரொக்கம் | 650 | | |
| | 2,88,750 | | 2,88,750 |

**தேவையான சரிக்கட்டுகளாவன:**

(1) 31-12-1964 அன்றைய சரக்கிருப்பு ரூ. 20,000.

(2) கொடுபட வேண்டிய செலவுகளாவன:
வாடகை ரூ. 300; சம்பளம் ரூ. 750;
கூலி ரூ. 1000; லாரி பேணுகை ரூ. 500;
வட்டி ரூ. 250.

(3) முன்கூட்டிச் செலுத்திய உரிமங்கள்-வரிகள்
ரூ. 125.

(4) கடனாளிகள் மீது 5% அளவிற்கு ஐயக்கடன்
ஒதுக்கும், 2½% அளவிற்கு வட்ட ஒதுக்கும்
பேணுக.

(5) அறைகலன் மீது 10%ம், தட்டச்சு மீது 15%ம்,
சைக்கிள்கள் மீது 20%ம் லாரி மீது 25%ம்,
தேய்மானம் நீக்குக.

1964 திசம்பர் 31ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க.

**விடை:** (மொ. இ. —ரூ. 38,000; நி. இ. — ரூ. 9,970; இருப்புநிலைக் குறிப்பு ரூ. 50,770).

**வினா எண் 35**

திரு. நடராஜன் என்பவரது ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட 1965 மார்ச் 31ஆம் நாளன்றைய இருப்புகள் பின்வருமாறு:

| பற்று இருப்புகள் | தொகை | வரவு இருப்புகள் | தொகை |
|---|---|---|---|
| | ரு. | | ரு. |
| எடுப்புகள் | 3,000 | முதல் | 10,000 |
| கட்டடங்கள் | 5,000 | பற்பல கடனீந்தோர் | 10,000 |
| இயந்திரம் | 2,500 | 10%வட்டிக்குப் பெற்ற கடன்கள் | 5,000 |
| அறைகலன் | 2,000 | வெளித் திருப்பம் | 5,000 |
| தட்டச்சு | 1,000 | விற்பனை | 2,00,000 |
| பற்பல கடனாளிகள் | 15,000 | ஈட்டிய வட்டம் | 500 |
| கொள்முதல் | 1,40,000 | ஐயக் கடன் ஒதுக்கு | 600 |
| தொடக்கச் சரக்கிருப்பு | 20,000 | | |
| உள் திருப்பம் | 10,000 | | |
| கூலி | 10,000 | | |
| சம்பளம் | 7,500 | | |
| உள் ஏற்றிச் செல் செலவு | 3,000 | | |
| வெளி ஏற்றிச் செல் செலவு | 5,000 | | |
| வாடகை | 2,750 | | |
| அனுமதித்த வட்டம் | 750 | | |
| வட்டி (1964 திசம்பர் முடியச் செலுத்தியது) | 375 | | |
| காப்பீடு | 600 | | |
| அஞ்சல்-எழுது பொருள் | 250 | | |
| உள்ளூர் வீதங்கள்-வரிகள் | 150 | | |
| விளம்பரம் | 750 | | |
| சில்லறைச் செலவு | 500 | | |
| போக்கெழுதிய வாராக் கடன் | 300 | | |
| கைவச ரொக்கம் | 250 | | |
| வங்கிவச ரொக்கம் | 425 | | |
| | 2,31,100 | | 2,31,100 |

**செய்யவேண்டிய சரிக்கட்டுகளாவன:**

(1) 1965 மார்ச் 31ஆம் நாளன்றைய சரக்கிருப்பு ரூ. 10,000.

(2) கொடுபட வேண்டிய செலவுகளாவன: சம்பளம் ரூ. 500; கூலி ரூ. 1,000; வாடகை ரூ. 250; கடன் மீது 3 மாதங்களுக்குரிய வட்டி.

(3) முன்கூட்டிச் செலுத்திய காப்பீடு ரூ. 150.

(4) கடனாளிகள் மீது 5% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கு பேணுக.

(5) அறைகலன் மீது 10%ம், கட்டடங்கள் மீது 5%ம் இயந்திரம் மீது 10%ம், தட்டச்சு மீது 15%ம் தேய்மானம் நீக்குக.

1965 மார்ச் 31ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்குரிய வியாபார, இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்பு நிலைக் குறிப்பையும் தயாரிக்க.

**விடை:** (மொ. இ. —ரூ. 31,000; நி. இ. — ரூ. 10,850; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 34,725.)

**வினா எண் 36**

கீழ்க் காணப்படுவது திரு. X என்பவருடைய 1965 திசம்பர் 31ஆம் நாளன்றைய இருப்பாய்வு ஆகும். அந்த ஆண்டில் நடைபெற்ற நடவடிக்கைகளின் விளைவுகளைக் காண்பிக்கும் பொருட்டு அவருடைய இறுதிக் கணக்குகளைத் தயாரிக்க:

| பற்று இருப்புகள் | தொகை | வரவு இருப்புகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| பொறி - இயந்திரம் | 5,000 | விற்பனை | 48,000 |
| அலுவலக அறைகலன் - பொருத்துகள் | 260 | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 560 |
| சரக்கிருப்பு (1-1-1965) | 4,800 | பற்பல கடனீந்தோர் | 5,200 |
| மோட்டார் வேன் | 1,200 | ஐயக் கடன் ஒதுக்கு | 250 |
| பற்பல கடனாளிகள் | 4,500 | வெளித் திருப்பம் | 550 |
| கைவச ரொக்கம் | 40 | பெற்ற வட்டம் | 370 |
| வங்கிவச இருப்பு | 650 | முதல் க/கு | 4,000 |
| ஆலைக் கூலி | 15,000 | | |
| அலுவலகக் கூலி | 1,400 | | |
| கொள்முதல் | 21,350 | | |
| பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 720 | | |
| உள் திருப்பம் | 930 | | |
| எடுப்புகள் | 700 | | |
| வாடகை | 600 | | |
| ஒளியாக்கம் - வெப்பமாக்கம் (ஆலை) | 80 | | |
| தொலைபேசிச் செலவு | 35 | | |
| காப்பீடு | 30 | | |
| விளம்பரம் | 635 | | |
| பொதுச் செலவுகள் | 100 | | |
| வாராக் கடன் | 250 | | |
| அனுமதித்த வட்டம் | 650 | | |
| | 58,930 | | 58,930 |

**செய்ய வேண்டிய சரிக்கட்டுகளாவன**

(1) 1965 திசம்பர் 31 ஆம் நாளன்றைய சரக்கிருப்பு ரூ. 5,200.

(2) கொடுபடவேண்டிய வாடகை ரூ. 200.

(3) செலுத்த உரியதாகியும் செலுத்தப்படாமலுள்ள 3 மாதங்களுக்குரிய ஒளியாக்கம் - வெப்பமாக்கம் ரூ. 30.

(4) முன்கூட்டிச் செலுத்திய காப்பீடு ரூ. 10.

(5) பொறி - இயந்திரம் மீது 10%ம், அறைகலன் மீது 5%ம், மோட்டார் வேன் மீது 25%ம் தேய்மானம் நீக்குக.

(6) ஐயக் கடன் ஒதுக்கு ரூ. 300 ஆக இருக்குமாறு அதிகரிக்க.

(7) கடனாளிகள் மீதும், கடனீந்தோர் மீதும் 2½% அளவிற்கு வட்ட ஒதுக்கு உருவாக்குக.

**விடை:** (மொ. இ—ரூ. 11,560; நி. இ—ரூ. 7,202; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 16,362).

**வினா எண் 37**

1968 டிசம்பர் 31 ஆம் நாளோடு முடிவுறும் வாணிக ஆண்டின் இறுதியில் எடுக்கப்பட்ட பின்வரும் இருப்புகளி லிருந்து, அந்த ஆண்டுக்குரிய வியாபார, இலாப - நட்டக் கணக்கையும், அந் நாளன்றைய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க. அவ்வாறு தயாரிக்குமுன் கீழ்க்காணும் சரிக்கட்டு களுக்கும் தக்க கவனம் தருக:

| பற்று இருப்புகள் | தொகை | வரவு இருப்புகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| சரக்கிருப்பு (1-1-1968) | 8,000 | முதல் (1-1-1968) | 50,000 |
| கொள்முதல் க/கு | 20,000 | விற்பனை | 80,000 |
| உள் திருப்பக் க/கு | 1,500 | வெளித் திருப்பம் | 400 |
| உள் ஏற்றிச்செல் செலவு | 1,200 | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 2,500 |
| வெளி ஏற்றிச் செல் செலவு | 2,500 | பற்பல கடனீந்தோர் | 15,800 |
| கூலி | 3,300 | பணிபயிலுநர் முனைமம் (வரவு) | 500 |
| சம்பளம் | 5,500 | அனாமத்துக் க/கு (வரவு) | 10,800 |
| வாடகை | 1,100 | | |
| அச்சு - எழுது பொருள் | 250 | | |
| உள்ளூர் வீதங்கள்- வரிகள் | 250 | | |
| பயணச் செலவுகள் | 150 | | |
| பற்பல செலவுகள் | 200 | | |
| தொழில் வளாகம் | 65,000 | | |
| அறைகலன் - பொருத்துகள் | 2,500 | | |
| பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 3,500 | | |
| பற்பல கடனாளிகள் | 20,000 | | |
| கட்டும யந்திரம் | 4,500 | | |

| பற்று இருப்புகள் | தொகை | வரவு இருப்புகள் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| சத்தம் - | | | |
| துறைமுகக் கட்டணம் | 2,400 | | |
| தீக் காப்பீட்டு முனைமம் | 900 | | |
| வாராக் கடன் | 2,100 | | |
| வட்டக் க/கு (பற்று) | 400 | | |
| ஸ்மித் என்பவரின் கடன் க/கு (பற்று) | 5,000 | | |
| முதலீடு | 3,000 | | |
| கைவச ரொக்கம் | 250 | | |
| வங்கிவச ரொக்கம் | 3,500 | | |
| உரிமையாளரின் எடுப்புகள் (Withdrawals) | 3,000 | | |
| | 1,60,000 | | 1,60,00 |

**நடப்பு ஆண்டில் செய்ய வேண்டிய சரிக்கட்டுகளாவன:**

(1) 1968 திசம்பர் 31 ஆம் நாளன்றைய சரக்கிருப்பு ரூ. 7,000.

(2) இறுதி மாதத்திற்காகத் தொழிலாளிகளுக்கு கொடுபடவேண்டியதாகவுள்ள கூலி ரூ. 300.

(3) எழுத்தர்களுக்கு 1968 திசம்பர் மாதத்திற்காகக் கொடுபடவேண்டியதாகவுள்ள சம்பளம் ரூ. 500.

(4) இறுதி மாதத்திற்காகக் கொடுபட வேண்டியதாகவுள்ள கிடங்கு வாடகை ரூ. 100/-.

(5) 1968 சூலை 1 ஆம் நாள் முதல் 1969 சூன் 30 ஆம் நாளோடு முடிவுறும் ஆண்டுக்காக 1968 சூலை 17 ஆம் தேதி செலுத்திய ரூ. 600 தீக் காப்பீட்டு முனைமத்தில் சேர்ந்துள்ளது.

(6) 4 ஆண்டுகளுக்குரிய பணிபயிலுநர் முனைமம் (Apprentice Premium) 1968 சனவரி 1 ஆம் நாள் முன்கூட்டிச் செலுத்தப்பட்டிருக்கிறது.

(7) எழுதுபொருளுக்காகச் செலுத்த வேண்டிய ரூ. 30 இன்னும் செலுத்தப்படாமலுள்ளது.

(8) தொழில் வளாகத்தின் மீது 5%ம், அறைகலன் - பொருத்துகள் மீது 10%ம், கட்டும இயந்திரத்தின் மீது 10% தேய்மானம் நீக்குக.

(9) 5% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கு உருவாக்குக.

(10) கடனாளிகள் மீது 3% அளவிற்கு வட்ட ஒதுக்கு உருவாக்குக.

(11) ஸ்மித் என்பவருக்குக் கொடுக்கப்பட்ட கடன் மீது 7% வீதத்தில் ஓராண்டு வட்டி கனிந்திருக்கிறது (Accrued) —செலுத்தப்பட உரியதாயிருக்கிறது.

(12) முதலீடு மீது 1968 திசம்பர் 31 ஆம் நாளோடு முடிவுறும் அரையாண்டுக்கு 5% வீதத்தில் வட்டி கனிந்திருக்கிறது.

(13) முதல் மீது 5% வீதத்தில் வட்டி அனுமதிக்க.

(14) எடுப்புகள் மீது நடப்பு ஆண்டுக்கு விதிக்கப்பட வேண்டிய வட்டி ரூ. 80 எனக் கணக்கிடப் பட்டிருக்கிறது.

**விடை:** (மொ. இ.—ரூ. 50,700; நி. இ.—ரூ. 30,880; இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ. 1,09,455; அனாமத்துக் கணக்கு ரூ. 10,800 (வரவு).

**உதவிக்குறிப்பு:** பணிபயிலுநர் முனைமமாகப் பெற்ற ரூ. 500 இல், நடப்பு ஆண்டிற்குரிய தொகையாகிய ரூ. 125 இலாப - நட்டக் கணக்கில் வரவுப் பகுதியில் தோன்றும்; அடுத்த மூன்று ஆண்டுகளுக்குரிய மீதித் தொகையாகிய ரூ. 375 இருப்புநிலைக் குறிப்பில் 'பொறுப்புகள்' பகுதியில் தோன்றும்.

## ஐயக் கடன் ஒதுக்கும் வட்ட ஒதுக்குகளும்

### வினா எண் 38

திரு. ராஜு என்பவரின் 31-12-1972 ஆம் நாளன்றைய இருப்பாய்வு வேறு பல செய்திகளோடு பின்வரும் செய்திகளையும் தாங்கியிருக்கறது:

| | | |
|---|---|---|
| கடனாளிகள் | .. | 40,000 |
| வாராக் கடன்கள் | .. | 500 |
| ஐயக் கடன் ஒதுக்கு (1-1-1972) | .. | 1,000 |

கடனாளிகள் மீது 5% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கு பேணவேண்டும். அதற்குரிய குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து வாராக் கடன் க/கு, ஐயக் கடன் க/கு, இலாப-நட்டக் க/கு, இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைக் காட்டுக.

### வினா எண் 39

திரு. அசோக் என்பவரது 31-12-1970 ஆம் நாளன்றைய இருப்பாய்வு காட்டும் செய்திகளில் சில பின் வருமாறு:

| | | ரூ. |
|---|---|---|
| பற்பல கடனாளிகள் | .. | 10,000 |
| வாராக் கடன்கள் | .. | 300 |
| ஐயக் கடன் ஒதுக்கு | .. | 1,000 |

கடனாளிகள் மீது 5% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கு பேணவேண்டும். அதற்குரிய குறிப்பேட்டுப் பதிவுகள் தந்து, தக்க பேரேட்டுக் கணக்குகள், இலாப-நட்டக் கணக்கு, இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைக் காட்டுக.

**உதவிக்குறிப்பு:** தேவையான புதிய ஐயக் கடன் ஒதுக்கு ரூ.500—அதாவது $10,000 \times \frac{5}{100}$; ஆனால் தற்பொழுதுள்ள பழைய ஒதுக்கோ ரூ. 1,000; இதிலிருந்து வாராக் கடன் ரூ. 300 ஐக் கழித்தபின்னும் எஞ்சியிருக்கும் தொகை ரூ. 700. தேவையான புதிய ஒதுக்கைக் காட்டிலும் பழைய ஒதுக்கில் ரூ. 200 அதிகமாக இருப்பதால், இயல்பாகச் செய்வதற்கும் எதிர்மாறான சரிக்கட்டுப் பதிவைச் செய்ய வேண்டும் பின்வருவது போன்று:

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| ஐயக் கடன் ஒதுக்குக் க/கு பற்று | 200 | |
| இலாப - நட்டக் க/கு | | 200 |

(ஆக இலாப - நட்டக் கணக்கில் ரூ. 200 ஐ வரவுப் பகுதியில் காண்பிக்கவேண்டும்).

**வினா எண் 40**

திரு. எஸ். வின்செண்ட் என்பவரது 31-12-1973 ஆம் நாளன்றைய இருப்பாய்வில் பின்வரும் செய்திகள் உள:

| | | ரூ. |
|---|---|---|
| பற்பல கடனாளிகள் | .. | 15,300 |
| வாராக் கடன்கள் | .. | 500 |
| ஐயக் கடன் ஒதுக்கு | .. | 800 |

பற்பல கடனாளிகளில் அடங்கியுள்ள கடன் தொகை ரூ. 300 திரும்பப்பெற (அதாவது வசூலிக்க) முடியாதது எனக் கருதப்படுவதால் அதைப் போக்கெழுதிவிட வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கிறது. 5% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கைப் பேணவேண்டும். இதற்குரிய குறிப்பேட்டுப் பதிவுகள் தந்து, தக்க பேரேட்டுக் கணக்குகள், இலாப - நட்டக் கணக்கு, இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைக் காட்டுக.

**உதவிக்குறிப்பு :** புதிய வாராக் கடன் ஆன ரூ. 300 ஐப் போக்கெழுதிவிடுக. (இருப்பாய்வில் தோன்றுவது நடப்பு ஆண்டில் ஏற்பட்ட பழைய வாராக் கடன் என்பதை நினைவுபடுத்திக் கொள்க). அந் நிலையில் கடனாளிகள் ரூ. 15,000 ஆகக் குறைவர். இத்தொகையில் 5%—அதாவது ரூ. 750—தேவையான புதிய ஐயக் கடன் ஒதுக்கு ஆகும்)

**வினா எண் 41**

1970 சனவரி 1 ஆம் நாளன்று ஐயக் கடன் ஒதுக்கு காட்டிய தொகை ரூ. 900 ஆகும். அந்த ஆண்டில் ஏற்பட்ட 1970 திசம்பர் 31 அன்று, இருந்த பற்பல கடனாளிகள் ரூ. 20,000. கடனாளிகள் மீது 5% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கு பேண வேண்டும். இவை குறித்த பதிவுகள் பின் வருவனவற்றில் எவ்வாறு தோன்றும்:

(அ) குறிப்பேடு

(ஆ) பேரேடு

(இ) இலாப - நட்டக் கணக்கு

(ஈ) இருப்புநிலைக் குறிப்பு.

**வினா எண் 42**

*1972 சனவரி 1 ஆம் நாளன்று ஐயக் கடன் ஒதுக்குக் கணக்கு ரூ. 1,500 வரவு - இருப்பு காட்டியது. அந்த ஆண்டில் ஏற்பட்ட வாராக் கடன் ரூ. 900 ஆகும். 1972 திசம்பர் 31 ஆம் நாளன்று இருந்த பற்பல கடனாளிகள் ரூ. 18,000 ஆவர். இவர்களில் ஒருவரிடமிருந்து வரவேண்டிய கடனான ரூ. 500 பெற இயலாதது; எனவே அதைப் போக்கெழுதிவிட வேண்டும். கடனாளிகள் மீது 5% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கு பேண வேண்டும். இவை பற்றிய பதிவுகளைக் குறிப்பேடு, பேரேடு, இலாப - நட்டக் க/கு இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றில் காண்பிக்க.*

**வினா எண் 43**

*1978 திசம்பர் 31 ஆம் நாளன்றைய இருப்பாய்வு ஒன்றில் பின்வரும் செய்திகள் காணப்பட்டன:*

| | | ரூ. |
|---|---|---|
| *பற்பல கடனாளிகள்* | ,, | *15,000* |
| *ஐயக் கடன் ஒதுக்கு (1-1-1978)* | ,, | *1,500* |

*பற்பல கடனாளிகளில் அடங்கியுள்ள ரூ. 800 திரும்பப் பெற இயலாத கடனாகும். எனவே அதைப் போக்கெழுதிவிட வேண்டும். கடனாளிகள் மீது 10% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கு பேண வேண்டும். இவை குறித்த குறிப்பேட்டுப் பதிவுகள் தந்து, பேரேட்டுக் கணக்குகள், இலாப - நட்டக் கணக்கு, இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைக் காண்பிக்க.*

**உதவிக் குறிப்பு:** *(புதிய ஐயக் கடன் ஒதுக்கிற்குரிய தொகையைக் கணக்கிடுமுன், பற்பல கடனாளிகளிலிருந்து புதிய வாராக் கடனான ரூ. 800 ஐக் கழிக்க).*

**வினா எண் 44**

*திரு. அர்ச்சுனன் என்பவரது 31-12-1975 ஆம் நாளன்றைய இருப்பாய்விலுள்ள சில செய்திகளாவன:*

| | | பற்று | வரவு |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| *பற்பல கடனாளிகள்* | ,, | *60,000* | |
| *வாராக் கடன்கள்* | ,, | *1,500* | |
| *ஐயக் கடன் ஒதுக்கு (1-1-1975)* | ,, | | *2,100* |

இருப்பாய்வைத் தயாரித்த பிறகு செய்யவேண்டியதாக வுள்ள சரிக்கட்டுகளாவன:

(1) மேலும் வாராக் கடனாகவுள்ள ரூ. 500 ஐப் போக் கெழுதுக.

(2) கடனாளிகள் மீது 5% அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கு பேணுக.

(3) கடனாளிகள் மீது 2% அளவிற்கு வட்ட ஒதுக்கு உருவாக்குக.

தேவையான பேரேட்டுக் கணக்குகளை எழுதுவதோடு, இவை குறித்த பதிவுகளை இலாப - நட்டக்கணக்கு, இருப்பு நிலைக் குறிப்பு ஆகியவற்றில் காண்பிக்க.

**உதவிக் குறிப்பு:** வட்ட ஒதுக்கைத் 'திடமான கடனாளிகள்' மீது கணக்கிடவேண்டும் என்பதை நினைவு படுத்திக் கொள்க; ('திடமான கடனாளிகள்' என்போர் 'நிகரக் கடனாளிகளிலிருந்து' புதிய ஐயக் கடன் ஒதுக்கைக் கழித்த நிலையில் எஞ்சியுள்ள கடனாளிகள் ஆவர்; 'நிகரக் கடனாளிகள்' என்போர் பற்பல கடனாளிகளிலிருந்து புதிய வாராக் கடனைக் கழித்தபின் எஞ்சி நிற்கும் கடனாளிகள் ஆவர்)

**வினா எண் 45**

ஒரு வாணிகரின் 1973 டிசம்பர் 31 ஆம் நாளன்றைய இருப்பாய்வு பற்பல கடனீந்தோர் என ரூ. 12,000 காட்டு கிறது. அந்த ஆண்டுக்குரிய இறுதிக் கணக்குகளைத் தயாரிக்கும் முன்னர், கடனீந்தோர் மீது 3% அளவிற்கு வட்ட ஒதுக்கு உருவாக்குவது என முடிவு செய்யப்படுகிறது. இதற்குரிய குறிப்பேட்டுப் பதிவைத் தந்து, பேரேட்டுக் கணக்கு, இலாப - நட்டக் கணக்கு, இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றையும் காண்பிக்க.

## அத்தியாயம் 16

# மாற்றுச் சீட்டுகள்
# (Bill of Exchange)

வாணிகத்திற்கு நிதிவசதி செய்துதருவதில் இன்று மாற்றுச் சீட்டுகள் பேருதவியாக விளங்கி வருகின்றன. சரக்குகளைக் கொள்முதல் செய்வோர், தாம் கொள்முதல் செய்யும் சரக்குகளுக்குரிய தொகையை உடனடியாக ரொக்கமாகச் செலுத்துவதற்குப் பெரும்பாலும் இயலுவதில்லை. அவர்களுக்குக் கடன்வசதி தேவைப்படுகிறது. பொருள்களை விற்போரும் இக் கடன்வசதி அளித்துச் சரக்கு - வாங்குவோரைத் தம்மிடமிருந்து சரக்குகளைப் பெருமளவிலும் வழக்கமாகவும் வாங்குவதற்கு ஊக்குவிக்கின்றனர். இவ்வாறு ஊக்குவிப்பது தவிர்க்கமுடியாததாகவும் இருக்கிறது.

இந்த அடிப்படையில் வியாபாரம் நடைபெறும் பொழுது, கொள்முதல் - செய்பவர் அவர் வாங்கும் சரக்குகளுக்குரிய தொகையை ஓரிரு அல்லது மூன்று மாதங்களில் செலுத்துவதாக உறுதிமொழி அளிக்கிறார். இத்தகைய வாய்மொழியான உறுதிமொழிகள் தெளிவற்றவை; எப்பொழுது பணம் செலுத்தப்படும் என்பது உறுதியற்றதாகவே இருக்கும்; அல்லாமலும் வரவேண்டிய பணம் பற்றிய எழுத்துமூலமான சான்றும் கடனீந்தவரிடம் இல்லை. இக் குறைபாடுகளைப் போக்குமுகத்தான் மாற்றுச் சீட்டுகள் எழுச்சி பெற்றன. கடன் அடிப்படையில் சரக்குகளை விற்பவர் வாங்குபவர் மீது மாற்றுச்சீட்டு எழுதுவார்.

குறிப்பிட்ட பணத்தைக் குறிப்பிட்ட காலம் கழியும் பொழுது செலுத்துமாறு குறிப்பிட்ட நபருக்கு விடுக்கப்படும் எழுத்து மூலமான ஆணையே **மாற்றுச் சீட்டாகும்.**

**வரைவிலக்கணம் (Definition)** : *1881* ஆம் ஆண்டு மாற்றுமுறை ஆவணச் சட்டத்தின் (Negotiable Instruments Act of 1881) 5, ஆம் பிரிவு **மாற்றுச் சீட்டிற்கு** இவ்வாறு வரைவிலக்கணம் வகுத்திருக்கிறது:

''குறிப்பிட்ட நபருக்கோ அவரது ஆணைக்கேற்பவோ அல்லது அந்த முறியைக் கொணர்வோருக்கோ குறிப்பிட்ட

பணத்தொகையைச் செலுத்துமாறு குறிப்பிட்ட நபருக்கு ஒருவர் எந்த நிபந்தனையும் இணைக்காமல் எழுத்துமூலமாகக் கையொப்பமிட்டு விடுக்கும் ஆணை தாங்கிய முறியே **மாற்றுச் சீட்டாகும்''**

சுருங்கச்சொல்லின், மாற்றுச்சீட்டு என்பது குறிப்பிட்ட பணத் தொகையைச் செலுத்துமாறு ஒருவர் மற்றொருவருக்கு எழுத்துமூலமாக விடுக்கும் ஆணையேயாகும்.

**அதன் இயல்புகள்**

மாற்றுச் சீட்டின் இயல்புகளாவன:

(அ) அது எழுத்து மூலம் அமையும் முறியாகும்.

(ஆ) அது நிபந்தனையற்ற ஆணையைத் தாங்கியிருக்கும்.

(இ) அந்த ஆணை திட்டவட்டமான பணத்தொகையைச் செலுத்துமாறு விடுக்கப்படுவதாகும்.

(ஈ) அதன் செலுத்தப்பெறுநர் (Payee) (அதாவது அதன் பணம் பெறுதற்குரியவர்) குறிப்பிட்ட நபராக இருத்தல் வேண்டும். அவர் பெயர் அதில் குறிப்பிடப்பட்டிருக்கவேண்டும். கொணர்வோருக்குச் செலுத்தப்படுவதாகவும் அது இருக்கலாம்.

(உ) மாற்றுச் சீட்டு மூலம் ஆணை விடுப்பவர் (அதாவது அதை எழுதுபவர்) அதில் கையொப்பமிட வேண்டும். அவருக்கு எழுதுநர் (Drawer) எனப் பெயர்.

(ஊ) அந்த ஆணை குறிப்பிட்ட நபருக்கு விடுக்கப்படுவதாக இருத்தல் வேண்டும். அவருக்கு எழுதப் பெறுநர் (Drawee) எனப் பெயர்.

(எ) மாற்றுச் சீட்டுகளில் பெரும்பாலும் மூன்று தரப்பார்—அதாவது எழுதுநர், எழுதப்பெறுநர், செலுத்தப்பெறுநர் என்போர்—இருப்பர்.

**மாற்றுச்சீட்டின் மாதிரிப் படிவம்**

ரூ. 1,000/- சென்னை - 600 001
ஜனவரி 1, 1978

| முத்திரை வரி இல்லை |
|---|

இத் தேதியிலிருந்து மூன்று மாதங்கள் கழியும் பொழுது, மதிப்புப் பெற்றுக்கொண்ட வகையில், திரு. எஸ். திலிப் என்பவருக்கோ அவரது ஆணைக்கேற்பவோ ஓர் ஆயிரம் ரூபாய் மட்டும் செலுத்துக.

**கே. குமார்**

**எழுதப்பெறுநர் :**
திரு. ஜி. கோபு,
திருச்சி - 2.
620 002.

## மாற்றுச்சீட்டு பற்றிய முக்கியமான சொற்றொடர்களுக்கு விளக்கம்

**(1) மாற்றுச் சீட்டு எழுதுதல் :**

மேலே கொடுக்கப்பட்டுள்ள வடிவத்தில், கடனீந்தவர் (கடன் அடிப்படையில் சரக்கு விற்றவர்) கடனாளி மீது மாற்றுச்சீட்டு எழுதிக் கையொப்பமிடுவார். இவ்வாறு முழுமையான வடிவத்தில் மாற்றுச் சீட்டைத் தயாரிப்பதை 'மாற்றுச்சீட்டு எழுதுதல்' எனக் கூறுகிறோம். கடனீந்தவர் அதை எழுதிமுடித்த நிலையில் அதன் **'எழுதுநர்'** ஆகிறார்.

**(2) மாற்றுச் சீட்டைச் சார்ந்த தரப்பார் (Parties)**

(அ) எழுதுநர்: இவர் மாற்றுச்சீட்டை எழுதிக் கையொப்பமிடுபவர் ஆவார்.

(ஆ) எழுதப்பெறுநர்: எவர் மீது அது எழுதப்படுகிறதோ அவர் இவ்வாறு அழைக்கப்படுகிறார்.

(இ) செலுத்தப்பெறுநர்: மாற்றுச் சீட்டில் கூறப்பட்டுள்ள பணத்தைப் பெறுதற்குரியவர் இவர்.

(ஈ) ஏற்குநர் (Acceptor): குறிப்பிட்ட காலங்கழித்துச் செலுத்துமாறு வரையப்பட்டிருக்கும் மாற்றுச்சீட்டின் எழுதப்பெறுநர் அதை 'ஏற்றதாகக்' (Accepted) குறித்துக் கையொப்பமிடுவார். அப்பொழுது அவர் 'எழுதப் பெறுநர்' என்னும் நிலையிலிருந்து மாறி 'ஏற்குநர்' எனும் பெயர் பெறுவார்.

**(3) மாற்றுச்சீட்டை ஏற்றல் (Acceptance of a Bill):**

மாற்றுச் சீட்டை எழுதுபவர் அவரே அதன் செலுத்தப் பெறுநராக இருப்பின், அதை எழுதி முடித்தவுடன் எழுதப் பெறுநருக்கு ஏற்புக்காக அனுப்புவார் அல்லது முன்னிலைப் படுத்துவார்; செலுத்தப்பெறுநர் வேறொருவராக இருப்பர்.

எழுதுநர் அதை எழுதி முடித்தவுடன் செலுத்தப் பெறுநரிடம் தந்துவிடுவார். செலுத்தப்பெறுநர் அதை எழுதப் பெறுநருக்கு—(கடனாளிக்கு அதாவது சரக்கு வாங்கியவருக்கு) அனுப்பிவைப்பார் அல்லது முன்னிலைப் படுத்துவார் (Presentment). அதைப் பெறும் எழுதப்பெறுநர் அதன் முகப்பில் **ஏற்றேன்** (Accepted) என எழுதிக் கையொப்பமிடுவார். இதற்கு **ஏற்பு** (Acceptance) எனப் பெயர். அவ்வாறு ஏற்றுக்கொண்டதன் மூலம், அதில் குறிப்பிடப்பட்டுள்ள தொகையைக் குறிப்பிடப்பட்டுள்ளபடி செலுத்துவதாக அவர் ஒப்புக்கொள்கிறார்; அதன்படி செலுத்துவது அவரது கடமையும் பொறுப்புமாகும். ஏற்கும் வரை அவருக்கு இப் பொறுப்பு இல்லை; ஏற்றபின்னே அது ஏற்படுகிறது;. அந் நிலையில் அவர் **ஏற்குநர்** என அழைக்கப்படுகிறார். ஏற்றபின் அவர் அந்த மாற்றுச் சீட்டை எழுதுநருக்கோ செலுத்தப்பெறு நருக்கோ (எவரிடமிருந்து பெற்றாரோ அவருக்குத்) திருப்பி யனுப்பிவிடுவார். எழுதுநரே செலுத்தப்பெறுநராகவும் இருக்கலாம். செலுத்தப்பெறுநருக்கு அது **பெறுதற்குரிய மாற்றுச் சீட்டாகும்** (Bill Receivable). ஏற்குநருக்கு அது **செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டாகும்** (Bill Payable).

கேட்கும்பொழுது செலுத்தத்தக்க மாற்றுச் சீட்டு களுக்கு (அதாவது கேட்பு மாற்றுச் சீட்டுகளுக்கு— (Demand Bills) ஏற்பு தேவையில்லை. தவணை மாற்றுச் சீட்டு களுக்கே (Time Bills) இது தேவைப்படுகிறது. எழுதுநரின் ஆணையை மதித்துப் பணம் செலுத்த எழுதப்பெறுநர் ஒப்புக் கொள்ளுவாரா என்று செலுத்தப்பெறுநருக்குள்ள ஐயப் பாட்டை 'ஏற்பு' என்னும் வழி போக்குகிறது.

**எடுத்துக்காட்டு**

1977 சனவரி 1 ஆம் நாளன்று அசோக் என்பவர் அருண் என்பவருக்கு ரூ. 500 மதிப்புள்ள சரக்குகளைக் கடனாக விற்றார். அன்றே அசோக் என்பவர் அருண்மீது ரூ. 500க்கு மூன்று மாத மாற்றுச் சீட்டு ( மூன்று மாதம்

கழியும்பொழுது செலுத்தத்தக்க மாற்றுச் சீட்டு) எழுதி அருணுக்கு அனுப்பினார். அருண் அதை ஏற்று, அசோக்கிற்குத் திருப்பியனுப்பினார்.

இந்த எடுத்துக்காட்டில் அசோக் என்பவர் அம்மாற்றுச் சீட்டின் எழுதுநரும் செலுத்தப்பெறுநரும் ஆவார். அவருக்கு அது 'பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு' ஆகும். அருண் அதன் ஏற்குநர்; எனவே அவருக்கு அது 'செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டு' ஆகும்.

**(4) மாற்றுச் சீட்டின் செலுத்தற்குரிய நாளும் (Due Date) சலுகை நாட்களும் (Days of Grace)**

மாற்றுச் சீட்டின் தொகையை அதன் ஏற்குநர் எந்தத் தேதியில் செலுத்த வேண்டியதாக இருக்கிறதோ அதற்கு அம் மாற்றுச் சீட்டின் செலுத்தற்குரிய நாள் (Due Date) எனப் பெயர். மாற்றுச் சீட்டின் தவணைக் காலத்தைக் கொண்டு அதன் செலுத்தற்குரிய நாள் கணக்கிடப்படுகிறது. அதன் தவணைக் காலம் (Period of Time Bill) என்று முடிவடைகிறதோ அத்துடன் மூன்று நாட்களைக் கூட்டி அந்த உரிய நாள் கணக்கிடப்படுகிறது. இவ்வாறு கூடுதலாகச் சேர்க்கப்படும் அந்த மூன்று நாட்களுக்குச் **சலுகை நாட்கள்** எனப் பெயர். ஏற்குநருக்கு அதிக அவகாசம் கொடுப்பதற்காகவே இச்சலுகை நாட்கள் சேர்த்துக் கொள்ளப்படுகின்றன. தவணை மாற்றுச் சீட்டுகள் (Time Bills) மட்டுமே சலுகை நாள்களுக்கு உரியவை. கேட்பு மாற்றுச் சீட்டுகள் (Demand Bills) சலுகை நாள்களுக்கு உரியவையாகா.

**எடுத்துக்காட்டு:**

| மாற்றுச் சீட்டின் தேதி | தவணைக் காலம் | சலுகை நாள்கள் | செலுத்தற்குரிய நாள் |
|---|---|---|---|
| 1978 சனவரி 1 | 1 மாதம் | 3 | 1978 பிப்ரவரி 4 |
| 1978 சனவரி 1 | 30 நாள்கள் | 3 | 1978 பிப்ரவரி 3 |
| 1978 சனவரி 1 | 3 மாதங்கள் | 3 | 1978 ஏப்ரல் 4 |

### (5) மாற்றுச் சீட்டை மேலெழுதுதல் (Endorsement of a Bill)

மாற்றுச் சீட்டின் செலுத்தப்பெறுநர் தான் மற்றொருவருக்குத் தரவேண்டிய கடனை அடைப்பதற்காக அதை அந்த மற்றவருக்கு மாற்றித்தரலாம் (Transfer). அதற்கு **மாற்றுநர்** (Transferor), எவருக்கு அதை மாற்றித்தருகிறாரோ அவர் பெயரை அதன் பின்புறம் எழுதிக் கையொப்பமிட்டுத் தரவேண்டும். எவர் பெயருக்கு அது மாற்றியெழுதித் தரப்படுகிறதோ அவருக்கு **மாற்றப்பெறுநர்** (Transferee) எனப் பெயர். மாற்றுநர் அம்மாற்றுச் சீட்டின் பின்புறம் மாற்றப்பெறுநரின் பெயர் ஏதும் எழுதாமல் வெறும் கையொப்பமிட்டும் தரலாம். இவ்வாறு மாற்றுச் சீட்டை வைத்திருப்பவர் அதை மற்றொருவருக்கு மாற்றித்தருவதற்காக அதன் பின்புறம் மாற்றப்பெறுநரின் பெயரை எழுதியோ எழுதாமலோ கையொப்பமிட்டுத் தருவதற்கு **மேலெழுத்து** (Endorsement) எனப்பெயர். மேலெழுதி மாற்றித்தருபவருக்கு **மேலெழுதுநர்** (Endorser) எனவும், மேலெழுத்து மூலமாக அந்த மாற்றுச்சீட்டை மாற்றப்பெறுநருக்கு **மேலெழுத்து - பெறுநர்** (Endorser) எனவும் பெயர். ஒரு மாற்றுச் சீட்டு எவருக்கு உரியது என்பதை அதன் பின்புறம் தோன்றும் இறுதி மேலெழுத்து தீர்மானிக்கிறது.

### (6) மாற்றுச் சீட்டை வட்டஞ்செய்தல் (Discounting a Bill)

மாற்றுச் சீட்டு முதிர்வடைந்து செலுத்தற்குரியதாகு முன்னர் அதன் செலுத்தப்பெறுநருக்கு ( அல்லது அதை வைத்திருப்பவருக்கு) அவசரமாகப் பணம் தேவைப்படலாம். அந்நிலையில் அவர் தம் வங்கியிடம் அந்த மாற்றுச் சீட்டை வட்டஞ்செய்து நிதி வசதி பெறலாம். வங்கி அந்த மாற்றுச் சீட்டைப் பெற்று, அதன் தொகை (முகமதிப்பு), முதிர்வடைவதற்கு அது இன்னும் கடக்கவேண்டிய காலம் இந்த இரண்டையும் அடிப்படையாகக்கொண்டு வட்டி கணக்கிட்டு, அந்த வட்டித் தொகையை முகமதிப்பிலிருந்து கழித்துக் கொண்டு மீதியைக் கொடுக்கும். இவ்வாறு வட்டியாகக் கழிக்கப்படும் தொகைக்கு **வட்டம்** (Discount) எனவும், இந்த முறையில் வங்கியிடமிருந்து மாற்றுச் சீட்டைக் கொடுத்து நிதி வசதி பெறுவதை **வட்டஞ் செய்தல்** (Discounting of a Bill) எனவும் கூறுகிறோம்.

**எடுத்துக்காட்டு** ரூ. 5,000 முகமதிப்பும், முதிர்வடை வதற்கு மேலும் இரு மாதங்களைக் கடக்க வேண்டுவதாகவும் உள்ள மாற்றுச் சீட்டை அதன் செலுத்தப்பெறுநர் வட்டஞ் செய்ய விழைகிறார் எனக் கொள்வோம்.

வங்கி விதிக்கும் வட்டி வீதம் 12% எனக் கொண்டால்,

ரூ. 5,000க்கு இந்த வட்டி வீதத்தில் 2 மாதங்களுக்குரிய வட்டம் ரூ. 100 ஆகும்.

(அதாவது, $5000 \times \frac{2}{12} \times \frac{12}{100}$).

வங்கி அந்த மாற்றுச் சீட்டை வட்டஞ்செய்ய முடிவு செய்தால் அது ரூ. 5,000 லிருந்து ரூ. 100ஐ வட்டமாகக் கழித்துக்கொண்டு ரூ. 4,900 வழங்கும்.

செலுத்தப்பெறுநர் இத்தொகையைப் பெற்றுப் பயனடை யலாம். அதாவது அவர் 2 மாதங்கள் கழித்து ரூ. 5,000 பெறுவதற்கு, இப்பொழுதே ரூ. 4,900 பெறுவதைச் சமமாகக் கருதுகிறார் என்பது உட்பொருள்.

**(7) மாற்றுச் சீட்டு வகைகள்**

மாற்றுச் சீட்டில் பல வகைகள் உள. அவையாவன:

**(அ) வாணிக மாற்றுச் சீட்டு (Trade Bill)**

வாணிக மாற்றுச் சீட்டு என்பது வாணிக நடவடிக்கைகள் விளைவாக ஒருவருக்கொருவர் தரவேண்டியதாக வரும் கடனை அடைப்பதற்காக எழுதப்படுவதாகும். கடன் அடிப் படையில் சரக்குகளை விற்போர், வாங்குவோர் மீது எழுதும் மாற்றுச் சீட்டுகள் இந்த வகையைச் சார்ந்தவை. இங்கு மாற்றுச் சீட்டு எழுதுபவர் விற்ற சரக்குகளுக்கு ஈடாக அதை எழுதுகிறார்; அதை ஏற்பவரும் (Acceptor) தான் பெற்ற சரக்குகளுக்கு ஈடாக அதை ஏற்கிறார். அதாவது கொடுத்து பெற்ற மதிப்பு அடிப்படையில் இம் மாற்றுச் சீட்டுகள் எழுதப் படுகின்றன — ஏற்கப்படுகின்றன.

**(ஆ) பணவசதி மாற்றுச் சீட்டு (Accommodation Bill)**

சரக்கு ஏதும் விற்கப்படாமல் - வாங்கப்படாமலேயே (அதாவது மதிப்பு ஏதும் தரப்படாமல் பெறப்படாமலேயே) இத்தகைய மாற்றுச் சீட்டுகள் எழுதப்படுகின்றன - ஏற்கப் படுகின்றன. இவை வாணிக நடவடிக்கைகளின் விளைவாக எழுவதில்லை. எழுதுநரின் பணத் தேவையைச் சமாளிக்கும்

பொருட்டோ, எழுதுநர் - ஏற்குநர் ஆகிய இரு தரப்பாரின் பணத்தேவையை ஈடுசெய்யும் பொருட்டோ இவை எழுதப் படுகின்றன — ஏற்கப்படுகின்றன.

**(இ) கேட்பு மாற்றுச் சீட்டு (Demand Bill) :**

இது அதன் செலுத்தப்பெறுநர் அல்லது அனத வைத்திருப்பவர் கேட்கும்பொழுது செலுத்தத்தக்க மாற்றுச் சீட்டாகும். இதற்கு ஏற்பு (Acceptance) தேவையில்லை. இது சலுகை நாள்களுக்கும் உரியது அல்ல.

**(ஈ) தவணை மாற்றுச் சீட்டு (Time Bill) :**

எழுதிய தேதியிலிருந்து அல்லது ஏற்கப்பட்ட தேதியிலிருந்து குறிப்பிட்ட காலம் கழியும்பொழுது செலுத்தத் தக்கதாக வரையப்படும் மாற்றுச் சீட்டு இவ்வாறு அழைக்கப் படுகிறது.

**மாற்றுச் சீட்டு நடவடிக்கைகளைக் கணக்கு ஏடுகளில் பதிதல்**

மாற்றுச் சீட்டு பற்றிய நடவடிக்கைகளை எழுதுநர் ஏடுகளிலும், ஏற்குநர் ஏடுகளிலும் பதிய வேண்டும். அவற்றை இந்த இரு தரப்பார் ஏடுகளில் எவ்வாறு பதிவது என இப் பொழுது காணுவோம். எழுதுநருக்குப் 'பெறுதற்குரிய மாற்றுச் சீட்டாக' இருப்பது ஏற்குநருக்குச் 'செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டாக' அமையும் என்பதை ஈண்டு நினைவு படுத்திக் கொள்க.

| மாற்றுச் சீட்டு பற்றிய நடவடிக்கை | எழுதுநரின் ஏடுகளில் செய்ய வேண்டிய பதிவு (அவரே செலுத்தப் பெறுநராக இருக்கும் பொழுது) | ஏற்குநரின் ஏடுகளில் செய்ய வேண்டிய பதிவு |
|---|---|---|
| (1) மாற்றுச் சீட்டை எழுதும் பொழுது, ஏற்கும் பொழுது | **எழுதும்பொழுது :**<br>பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று ..<br>ஏற்குநர் க/கு ..<br>(மாற்றுச் சீட்டு எழுதுவது பற்றிய பதிவு) | **ஏற்கும்பொழுது :**<br>எழுதுநர் க/கு பற்று ..<br>செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு க/கு ..<br>(மாற்றுச் சீட்டை ஏற்பது பற்றிய பதிவு) |
| (2) எழுதிய அல்லது ஏற்கப் பெற்ற மாற்றுச் சீட்டை எழுதுநர் அல்லது செலுத்தப் பெறுநர் பல விதமாகக் கையாளலாம். அதற்கேற்பப் பதிவுகள் மாறுபடும். அவற்றை இப்பொழுது காணுவோம் : | | |
| (அ) எழுதுநர் அல்லது செலுத்தப் பெறுநர் அந்த மாற்றுச் சீட்டைச் செலுத்தற்குரிய நாள் வரை வைத்திருக்கும்பொழுது | இதற்குப் பதிவு ஏதும் தேவையில்லை. | மாற்றுச் சீட்டை செலுத்தற்குரிய நாள் வரை அதன் எழுதுநர் எந்த விதமாகக் கையாண்டாலும் இவரது ஏடுகளில் பதிவு தேவையில்லை. |

| மாற்றுச் சீட்டு பற்றிய நடவடிக்கை | எழுதுநரின் ஏடுகளில் செய்ய வேண்டிய பதிவு (அவரே செலுத்தப் பெறுநராக இருக்கும் பொழுது | ஏற்குநரின் ஏடுகளில் செய்யவேண்டிய பதிவு |
|---|---|---|
| (ஆ) எழுதுநர் அல்லது செலுத்தப் பெறுநர் அந்த மாற்றுச் சீட்டைத் தனக்குக் கடனீந்த ஒருவருக்கு மேலெழுதிக் (மாற்றிக்) கொடுக்கும் பொழுது | கடனீந்தவர் க/கு பற்று .. பெறுதற்குரிய மாற்றுச் சீட்டு க/கு .. (மாற்றுச் சீட்டை மெலெழுதி மாற்றிக் கொடுத்ததற்குப் பதிவு) | பதிவு ஏதும் தேவையில்லை—காரணம், இவர் இதனால் பாதிக்கப் படுவதில்லை. |
| (இ) செலுத்தற்குரியதாகு முன் அம் மாற்றுச் சீட்டை எழுதுநர் அல்லது செலுத்தப் பெறுநர் வங்கியிடம் வட்டஞ் செய்யும் பொழுது | வங்கியிடம் வட்டஞ் செய்தல் என்றால் வங்கிக்கு மேலெழுதிக் கொடுத்துவிட்டு உடனடியாகப் பணம் பெறுதல் ஆகும். அதன் முகமதிப்புக்குக் குறைவாகவே அவர் (எழுதுநர்-செலுத்தப்பெறுநர்) பணம் பெறுவார். அதற்குரிய பதிவு:<br>வங்கிக் க/கு பற்று ..<br>வட்டக் க/கு பற்று ..<br>பெறுதற்குரிய மாற்றுச் சீட்டு க/கு ..<br>(மாற்றுச் சீட்டை வங்கியிடம் வட்டம் செய்வது குறித்த பதிவு) | இவருடைய ஏடுகளில் இதற்குப் பதிவு ஏதும் இல்லை—காரணம் இவர் இதனால் பாதிக்கப்படுவதில்லை. |

| | | |
|---|---|---|
| | **எடுத்துக்காட்டு:**<br>ரூ. 1000க்குரிய மாற்றுச் சீட்டை அதன் எழுதுநர்-செலுத்தப் பெறுநர் ரூ. 990க்கு வட்டஞ் செய்தால், அதற்குரிய பதிவு:<br><br>ரூ. ரூ.<br>வங்கிக் க/கு பற்று 990<br>வட்டக் க/கு பற்று 10<br>பெறுதற்குரிய மாற்றுச் சீட்டு க/கு 1,000 | |
| (ஈ) எழுதுநர்-செலுத்தப் பெறுநர் அம் மாற்றுச் சீட்டை வங்கியிடம் வசூலிப்பதற்காக அனுப்புதல், இதற்குச் செலுத்தப்பெறுநரின் ஏடுகளில் இரு பதிவுகள் உள. | **(அ) வசூலுக்காக அனுப்பும் பொழுது:**<br>மாற்றுச் சீட்டு வசூலுக்குரிய வங்கிக் க/கு பற்று<br>பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு க/கு | **(அ) வசூலுக்காக செலுத்தப் பெறுநரால் வங்கிக்கு அனுப்பப்படும் பொழுது:**<br>பதிவு ஏதும் தேவையில்லை. |

| மாற்றுச் சீட்டு பற்றிய நடவடிக்கை | எழுதுநரின் ஏடுகளில் செய்ய வேண்டிய பதிவு (அவரே செலுத்த பெறுநராக இருக்கும் பொழுது) | ஏற்குநரின் ஏடுகளில் செய்ய வேண்டிய பதிவு |
| --- | --- | --- |
| | **(ஆ) வசூலிக்கப்பட்டு விட்டது என வங்கி அறிவிக்கும் பொழுது :**<br>வங்கிக் க/கு பற்று ..<br>மாற்றுச் சீட்டு வசூலுக்குரிய வங்கிக் க/கு ..<br><br>**குறிப்பு:—** (ஆண்டு இறுதியில் 'மாற்றுச் சீட்டு வசூலுக்குரிய வங்கிக் கணக்கில்' பற்று-இருப்பு இருந்தால் வசூலுக்காக அனுப்பப்பட்ட மாற்றுச் சீட்டுகளில் சில வசூலிக்கப் பெறாமல் இருக்கின்றன என்று பொருள். இது இருப்புநிலைக் குறிப்பின் சொத்துகள் பகுதிக்கு எடுத்துச் செல்லப்பட வேண்டும்). | **(ஆ) மாற்றுச்சீட்டை வங்கி கொடுக்க, ஏற்குநர் அதற்குரிய தொகையைச் செலுத்தும் பொழுது:**<br>செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு பற்று ..<br>ரொக்கம் அல்லது வங்கி க/கு<br>(செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டு மீது பணஞ்செலுத்துவது பற்றிய பதிவு) |

| | | |
|---|---|---|
| (3) மாற்றுச் சீட்டு செலுத்தற்குரிய நாளில் மதிக்கப்படும் பொழுது (செலுத்தப்படும் பொழுது) செய்ய வேண்டிய பதிவுகள். | | |
| (அ) எழுதுநர்-செலுத்தப் பெறுநர் உரிய நாள் வரை மாற்றுச் சீட்டை வைத்திருந்து, அவரே சமர்ப்பித்துப் பணம் பெறும் பொழுது | ரொக்கக் க/கு பற்று .. பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு .. (மாற்றுச் சீட்டுக்குரிய பணம் பெறுதல் குறித்த பதிவு) | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று .. ரொக்கக் க/கு .. (மாற்றுச் சீட்டுக்குரிய பணம் செலுத்துதல் குறித்த பதிவு) |
| (ஆ) எழுதுநர் செலுத்தப் பெறுநர் அந்த மாற்றுச் சீட்டை வேறொருவருக்கு மேலெழுதிக் கொடுத்த நிலையில், மேலெழுதப் பெறுநர் (Endorsee) அதைச் சமர்ப்பித்துப் பணம் பெறும்பொழுது | பதிவு ஏதும் இல்லை. | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று .. ரொக்கக் க/கு .. (மாற்றுச் சீட்டுக்குரிய பணம் செலுத்துதல் குறித்த பதிவு) |
| (இ) எழுதுநர்-செலுத்தப் பெறுநர் அந்த மாற்றுச் சீட்டை வங்கியிடம் முன்னர் வட்டஞ் செய்த நிலையில் வங்கி அதைச் சமர்ப்பித்துப் பணம் பெறும் பொழுது | பதிவு ஏதும் இல்லை (வட்டஞ்செய்யும் பொழுது பதிவு செய்யப் பட்டுவிட்டதால்— பதிவு 2-இ ஐக் காண்க— இப்பொழுது பதிவு தேவையில்லை) | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று .. ரொக்கக் க/கு .. (மாற்றுச் சீட்டுக்குரிய பணம் செலுத்துதல் குறித்த பதிவு) |

| மாற்றுச் சீட்டு பற்றிய நடவடிக்கை | எழுதுநர் ஏடுகளில் செய்ய செய்ய வேண்டிய பதிவு (அவரே செலுத்த பெறுநராக இருக்கும்பொழுது) | ஏற்குநரின் ஏடுகளில் செய்ய வேண்டிய பதிவு |
|---|---|---|
| (ஈ) எழுதுநர்-செலுத்தப் பெறுநர் அந்த மாற்றுச் சீட்டை வசூலிப்பதற்காக வங்கியிடம் அனுப்பியிருந்து, அவருடைய சார்பில் வங்கி பணம் பெறும்பொழுது | வங்கிக் க/கு பற்று .. மாற்றுச் சீட்டு வசூலுக்குரிய வங்கிக் க/கு .. (வசூலுக்காக வங்கியிடம் அனுப்பப்பட்ட மாற்றுச் சீட்டை வங்கி வசூலித்தது குறித்த பதிவு)<br><br>**குறிப்பு :** இந்தப் பதிவை முன்னரே பார்த்தோம்— பதிவு 2-ஈ இல் காண்க. | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று .. ரொக்கக் க/கு .. (மாற்றுச் சீட்டுக்குரிய பணம் செலுத்துதல் குறித்த பதிவு).<br><br>**குறிப்பு:** மாற்றுச் சீட்டை எழுதுநர், மேலெழுதப் பெறுநர், வங்கி ஆகிய எவர் சமர்ப்பித்துப் பணம் பெற்றாலும், அதற்கு ஏற்குநர் அவர்தம் ஏட்டில் செய்யும் பதிவு ஒன்றே தான் என்பதைக் கவனிக்க. |
| (4) **மாற்றுச் சீட்டை அவமதித்தல் (செலுத்தத் தவறுதல் குறித்த பதிவுகள்)** | | |

| | | |
|---|---|---|
| (அ) செலுத்தற்குரிய நாளன்று எழுதுநர்-செலுத்தப் பெறுநர் மாற்றுச் சீட்டை சமர்ப்பிக்கும் பொழுது, அது அவமதிக்கப்பட்டதற்காக (செலுத்தமறுக்கப்பட்டதற்காக) | ஏற்குநர் க/கு பற்று<br>பெறுதற்குரிய மாற்றுச் சீட்டு க/கு ..<br>(மாற்றுச் சீட்டு அவமதிக்கப்பட்டது குறித்த பதிவு) | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டு க/கு பற்று ..<br>எழுதுநர் க/கு ..<br>(மாற்றுச் சீட்டை அவமதித்தது குறித்த பதிவு) |
| (ஆ) எழுதுநர்-செலுத்தப் பெறுநர் அந்த மாற்றுச் சீட்டை முன்னர் மேலெழுதிக் கொடுத்த நிலையில், மேலெழுதிப் பெறுநர் அதைச் சமர்ப்பிக்கும்பொழுது அது அவமதிக்கப்பட்டதற்காக | மாற்றுச்சீட்டு அவமதிக்கப்பட்டது எனக் கூறி மேலெழுதிப்பெறுநர் அறிவிக்கை (Notice) தரும்பொழுது:<br>ஏற்குநர் க/கு பற்று<br>மேலெழுதிப்பெறுநர் க/கு ..<br>(மேலெழுதிக் கொடுத்த மாற்றுச் சீட்டு அவமதிக்கப்பட்டது குறித்த பதிவு) | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு க/கு பற்று ..<br>எழுதுநர் க/கு ..<br>(மாற்றுச் சீட்டை அவமதித்தது குறித்த பதிவு) |
| (இ) எழுதுநர்-செலுத்தப் பெறுநர் வங்கியிடம் வட்டஞ் செய்த மாற்றுச் சீட்டை அந்த வங்கி சமர்ப்பிக்கும் பொழுது அது அவமதிக்கப்பட்டதற்காக | வங்கியிடமிருந்து அறிவிக்கை வந்தவுடன்:<br>ஏற்குநர் க/கு பற்று ..<br>வங்கிக் க/கு ..<br>(வட்டஞ்செய்த மாற்றுச் சீட்டு அவமதிக்கப்பட்டது குறித்த பதிவு) | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டு க/கு பற்று ..<br>எழுதுநர் க/கு ..<br>(செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டை அவமதித்தது குறித்த பதிவு) |

| மாற்றுச் சீட்டு பற்றிய நடவடிக்கை | எழுதுநர் ஏடுகளில் செய்யவேண்டிய பதிவு (அவரே செலுத்தப் பெறுநராக இருக்கும்பொழுது) | ஏற்குநரின் ஏடுகளில் செய்யவேண்டிய பதிவு |
|---|---|---|
| (ஈ) எழுதுநர்-செலுத்தப் பெறுநர் வசூலிப்பதற்காக வங்கியிடம் அனுப்பிய மாற்றுச் சீட்டை, அந்த வங்கி சமர்ப்பிக்கும் பொழுது அது அவமதிக்கப்பட்டதற்காக | ஏற்குநர் க/கு பற்று .. மாற்றுச் சீட்டு வசூலுக்குரிய வங்கிக் க/கு .. (வசூலுக்காக வங்கி மூலம் அனுப்பப்பட்ட மாற்றுச் சீட்டு அவமதிக்கப்பட்டது குறித்த பதிவு) | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று .. எழுதுநர் க/கு .. (செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டை அவமதித்தது குறித்த பதிவு)<br><br>**குறிப்பு :** ஏற்குநர் மாற்றுச் சீட்டை அவமதிக்கும் பொழுது, மேற்கூறிய அ, ஆ, இ, ஈ ஆகிய நான்கு நிலைகளிலும் அவரது ஏடுகளில் செய்ய வேண்டிய பதிவு ஒன்றே என்பதைக் கவனி. இப் பதிவு அவர் மாற்றுச் சீட்டை ஏற்றபொழுது செய்யப்பட்ட பதிவை இரத்து செய்கிறது. |

**எடுத்துக்காட்டு 1**

*1977 சனவரி 1ஆம் நாள் இராம் என்பவர் ஷியாம் என்பவர்மீது ரூ. 1000க்கு 3 மாத காலத்திற்கு மாற்றுச் சீட்டு ஒன்று எழுதினார். ஷியாம் அதை ஏற்று இராம் என்பவருக்குத் திருப்பியனுப்பினார்.*

*(அ) அந்த மாற்றுச் சீட்டு செலுத்தற்குரிய நாளில் செலுத்தப்பட்டது எனவும்,*

*(ஆ) அந்த மாற்றுச் சீட்டு செலுத்தற்குரிய நாளில் அவமதிக்கப்பட்டது எனவும்*

*தனித்தனியே எடுத்துக் கொண்டு இருவர் ஏடுகளிலும் செய்ய வேண்டிய பதிவுகளைக் காட்டிடுக.*

விடை:

**இராம் என்பவரது ஏடுகள்**
**குறிப்பேடு**

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| 1977 சனவரி 1 | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று | | 1,000 | |
| | ஷியாம் க/கு | | | 1,000 |
| | ஷியாம் மீது மாற்றுச் சீட்டு எழுதப்பட்டது குறித்த பதிவு) | | | |
| ஏப்ரல் 4 | (அ) மாற்றுச் சீட்டு செலுத்தப் பட்டது என எடுத்துக் கொண்டால் : | | | |
| | ரொக்கக் க/கு பற்று | | 1,000 | |
| | பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு க/கு | | | 1,000 |
| | (மாற்றுச் சீட்டு செலுத்தப்பட்டது குறித்த பதிவு) | | | |
| | (ஆ) மாற்றுச்சீட்டு அவமதிக்கப் பட்டது எனக் கொண்டால்: | | | |
| ,, | ஷியாம் க/கு பற்று | | 1,000 | |
| | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டு க/கு | | | 1,000 |
| | (மாற்றுச் சீட்டு அவமதிக்கப்பட்டது குறித்த பதிவு) | | | |

**ஷியாம் என்பவரது ஏடுகள்**

**குறிப்பேடு**

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| 1977 சனவரி 1 | இராம் க/கு பற்று | | 1,000 | |
| | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு க/கு | | | 1,000 |
| | (இராம் எழுதிய மாற்றுச்சீட்டை ஏற்றது குறித்த பதிவு) | | | |
| | **(அ) மாற்றுச்சீட்டு செலுத்தப்பட்டது எனக் கொண்டால்:** | | | |
| ஏப்ரல் 4 | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று | | 1,000 | |
| | ரொக்கக் க/கு | | | 1,000 |
| | (உரிய நாளில் மாற்றுச்சீட்டைச் செலுத்ியது குறித்த பதிவு) | | | |
| | **(ஆ) மாற்றுச்சீட்டு அவமதிக்கப் பட்டது எனக் கொண்டால்:** | | | |
| ஏப்ரல் 4 | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று | | 1,000 | |
| | இராம் க/கு | | | 1,000 |
| | (செலுத்தற்குரிய நாளில் மாற்றுச் சீட்டை அவமதித்தது குறித்த பதிவு) | | | |

**விளக்கம் :** மாற்றுச் சீட்டை எழுதிய

| | | |
|---|---|---|
| நாள் | .. | 1977 ஜனவரி 1 |
| தவணை | .. | மூன்று மாதங்கள் |
| தவணை முடிவுறும் நாள் | .. | 1977 ஏப்ரல் 1 |
| சலுகை நாள்கள் | .. | 3 நாள்கள் |
| செலுத்தற்குரிய நாள் | .. | 1977 ஏப்ரல் 1+3 நாள்கள் |
| | = | 1977 ஏப்ரல் 4. |

**எடுத்துக்காட்டு 2**

1977 சனவரி 1ஆம் நாள் இராம் என்பவர் ஷியாம் என்பவர்மீது ரூ. 1,000க்கு 3 மாத காலத்திற்கு மாற்றுச் சீட்டு ஒன்று எழுதினார். ஷியாம் அதை ஏற்று இராம் என்பவருக்குத் திருப்பியனுப்பினார். 1977 ஜனவரி 15ஆம் நாளன்று இராம் அதை ஜான் என்பவருக்கு மேலெழுதிக் கொடுத்தார் (Endorsed).

(அ) செலுத்தற்குரிய நாளில் அந்த மாற்றுச்சீட்டு செலுத்தப்பட்டது எனவும்,

(ஆ) அது செலுத்தற்குரிய நாளில் அவமதிக்கப்பட்டது எனவும்

தனித்தனியே கொண்டு இராம், ஷியாம் ஆகியோரது ஏடுகளில் தோன்றத்தக்க குறிப்பேட்டுப் பதிவுகளைக் காண்பிக்க.

**விடை**

**இராம் என்பவரது ஏடுகள்**
**குறிப்பேடு**

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| 1977 சனவரி 1 | பெறுதற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு பற்று | | 1,000 | |
| | ஷியாம் க/கு | | | 1,000 |
| | (ஷியாம் மீது மாற்றுச்சீட்டு எழுதியது குறித்த பதிவு) | | | |

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| சனவரி 15 | ஜான் க/கு பற்று பெறுதற்குரிய மாற்றுச் சீட்டு (மாற்றுச்சீட்டை ஜான் என்பவருக்கு மேலெழுதித் தருதல் குறித்த பதிவு) | | 1,000 | 1,000 |
| ஏப்ரல் 4 | (அ) மாற்றுச் சீட்டு செலுத்தப்பட்டது எனக் கொண்டால்: பதிவு ஏதும் இல்லை | | | |
| | (ஆ) மாற்றுச் சீட்டு அவமதிக்கப் பட்டது எனக் கொண்டால்: ஷியாம் க/கு பற்று ஜான் க/கு (மாற்றுச்சீட்டு அவமதிக்கப்பட்டது குறித்த பதிவு) | | 1,000 | 1,000 |
| | அவமதிக்கப்பட்ட மாற்றுச் சீட்டுக் குரிய தொகையை இராம் என்பவர் ஜானுக்குச் செலுத்தி விட்டார் எனக் கொண்டால்: | | | |
| ஏப்ரல் 4 | ஜான் க/கு பற்று ரொக்கக் க/கு (ஜானுக்குப் பணம் செலுத்தியது குறித்த பதிவு) | | 1,000 | 1,000 |

**ஷியாம் என்பவரது ஏடுகள்**
**குறிப்பேடு**

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| 1977 சனவரி 1 | இராம் க/கு பற்று | | 1,000 | |
| | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு க/கு | | | 1,000 |
| | (இராம் எழுதிய மாற்றுச்சீட்டை ஏற்றது குறித்த பதிவு) | | | |
| சனவரி 15 | மாற்றுச்சீட்டை இராம் என்பவர் ஜானுக்கு மேலெழுதிக் கொடுப்பதற்கு இவரது (ஷியாமின்) ஏடுகளில் பதிவு ஏதும் தேவையில்லை. | | | |
| ஏப்ரல் 4 | (அ) மாற்றுச் சீட்டு செலுத்தப்பட்டது எனக் கொண்டால்: | | | |
| | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு பற்று | | 1,000 | |
| | ரொக்கக் க/கு | | | 1,000 |

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| ஏப்ரல் 4 | (ஆ) **மாற்றுச்சீட்டு அவமதிக்கப் பட்டது எனக் கொண்டால்:** செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று இராம் க/கு (மாற்றுச்சீட்டு அவமதிக்கப்பட்ட தற்குப் பதிவு) | | 1,000 | 1,000 |
| ஏப்ரல் 4 | அவமதிக்கப்பட்ட மாற்றுச்சீட்டுக் குரிய தொகையை இராம் என்பவர் ஜானுக்குச் செலுத்தினார் எனக் கொண் டால் இவரது (ஷியாமின்) ஏடு களில் பதிவு ஏதும் தேவை யில்லை. | | | |

**எடுத்துக்காட்டு 3**

1977 சனவரி 1 ஆம் நாளன்று இராம் என்பவர் ஷியாம் என்பவர் மீது ரூ. 1,000க்கு 3 மாதத்திற்கு மாற்றுச்சீட்டு ஒன்று எழுதினார். ஷியாம் அதை ஏற்று, இராம் என்பவருக்குத் திருப்பியனுப்பினார். 1977 பிப்ரவரி 1 ஆம் நாள் இராம் அதைத் தமது வங்கியரிடம் ஆண்டுக்கு 9% வீதத்தில் வட்டஞ்செய்தார். செலுத்தற்குரிய நாளில்

(அ) அந்த மாற்றுச்சீட்டு செலுத்தப்பட்டது எனவும்,

(ஆ) அது அவமதிக்கப்பட்டது எனவும்

தனித்தனியே கொண்டு, இராம், ஷியாம் ஏடுகளில் தோன்றத்தக்க குறிப்பேட்டுப் பதிவுகளைக் காண்பிக்க.

**விடை:**

**இராம் என்பவரின் ஏடுகள்**
**குறிப்பேடு**

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| **1977** | | | ரூ. | ரூ. |
| **சனவரி 1** | பெறுதற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு பற்று | | 1,000 | |
| | ஷியாம் க/கு | | | 1,000 |
| | (ஷியாம் என்பவர் மீது எழுதிய மாற்றுச்சீட்டு குறித்த பதிவு) | | | |
| **பிப்ரவரி 1** | வங்கிக் க/கு பற்று | | 985 | |
| | வட்டக் க/கு பற்று | | 15 | |
| | பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு க/கு | | | 1,000 |
| | (மாற்றுச்சீட்டை 9% வீதம் வட்டஞ் செய்தது குறித்த பதிவு) **குறிப்பு:** வட்டம் கணக்கிடல்: $1000 \times \frac{9}{100} \times \frac{2}{12}$ | | | |
| **ஏப்ரல் 4** | (அ) வட்டஞ்செய்த மாற்றுச்சீட்டு செலுத்தப் பட்டது எனக் கொண்டால் : இவரது (இராமின்) ஏடுகளில் பதிவு ஏதுமில்லை. | | | |
| | (ஆ) வட்டஞ்செய்த மாற்றுச்சீட்டு அவமதிக்கப் பட்டது எனக் கொண்டால் : | | | |
| | ஷியாம் க/கு பற்று | | 1,000 | |
| | வங்கி க/கு | | | 1,000 |
| | (வட்டஞ்செய்த மாற்றுச்சீட்டு அவமதிக்கப்பட்டது குறித்த பதிவு) | | | |

**ஷியாம் என்பவரது ஏடுகள்**
**குறிப்பேடு**

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1977 | | | ரூ. | ரூ. |
| சனவரி 1 | இராம் க/கு பற்று | | 1,000 | |
| | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுக/கு | | | 1,000 |
| | (இராம் எழுதிய மாற்றுச்சீட்டை ஏற்றது குறித்த பதிவு) | | | |
| பிப்ரவரி 1 | இராம் என்பவர் மாற்றுச் சீட்டை வட்டஞ்செய்ததற்கு இவரது (ஷியாமின்) ஏடுகளில் பதிவு ஏதுமில்லை. | | | |
| ஏப்ரல் 4 | (அ) மாற்றுச்சீட்டு செலுத்தப் பட்டது எனக் கொண்டால் : | | | |
| | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு க/கு பற்று | | 1,000 | |
| | ரொக்கக் க/கு | | | 1,000 |
| | (மாற்றுச்சீட்டைச் செலுத்தியது குறித்த பதிவு) | | | |
| | (ஆ) மாற்றுச்சீட்டு அனுமதிக்கப் பட்டது என்றால் : | | | |
| | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு க/கு பற்று | | 1,000 | |
| | இராம் க/கு | | | 1,000 |
| | (மாற்றுச்சீட்டை அவமதித்தது குறித்த பதிவு) | | | |

**மாற்றுச்சீட்டை ஒய்வுபடுத்தல் (Retiring a Bill)**

சிலபோழ்து மாற்றுச்சீட்டு முதிர்வடைந்து செலுத்தற்குரியதாகும் முன்னரே அதன் ஏற்குநர் அதைச் செலுத்தத் தயாராக இருக்கலாம். அப்பொழுது அவர் முழுத் தொகையைச் செலுத்தத் தேவையில்லை; சற்றுக் குறைவாகச் செலுத்தினால் போதுமானது; எவ்வளவு குறைவாகச் செலுத்தவேண்டும் என்பது, அம் மாற்றுச்சீட்டு முதிர்வடைவதற்கு மேலும் கடக்கவேண்டிய காலம், நடப்பு வட்டி வீதம் ஆகியவற்றைப் பொறுத்திருக்கிறது. இச் சலுகையை ஏற்குநர் பெறுகிறார்; செலுத்தப்பெறுநர் அளிக்கிறார். இச் சலுகைக்குத் தள்ளுபடி (Rebate) அல்லது வட்டம் (Discount) எனப் பெயர். இது ஏற்குநருக்கு ஆதாயம்; எழுதுநர் - செலுத்தப்பெறுநருக்குச் செலவு. ஆக, மாற்றுச்சீட்டு முதிர்வடையுமுன்னரே அதற்குரிய தொகையில் சற்று குறைத்துக்கொண்டு செலுத்துவதை **மாற்றுச்சீட்டை ஓய்வுபடுத்தல்** எனக் கூறுகிறோம்.

இதற்குரிய பதிவுகளாவன:

| எழுதுநர் – செலுத்தப் பெறுநர் ஏடுகளில் | ஏற்குநர் ஏடுகளில் |
|---|---|
| ரொக்கக் க/கு பற்று ..<br>வட்டக் க/கு பற்று ..<br>பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு க/கு ..<br>(வட்டம் அளித்து மாற்றுச் சீட்டை ஓய்வுபடுத்த அனுமதித்தல் குறித்த பதிவு) | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு பற்று ..<br>ரொக்கக் க/கு ..<br>வட்டக் க/கு ..<br>(வட்டம் பெற்று மாற்றுச்சீட்டை ஓய்வுபடுத்தல் குறித்த பதிவு) |

**குறிக்கைக் கட்டணம் (Noting Charges)**

எழுதப்பெறுநர் அல்லது ஏற்குநரால் மாற்றுச்சீட்டு அவமதிக்கப்படும்பொழுது, அதன் செலுத்தப்பெறுநர் (அல்லது அதை வைத்திருப்பவர்) அவமதிக்கப்பட்டது என்னும் செய்தியைப் **பொதுக் குறிப்பரை** (Notary Public) கொண்டு அம்மாற்றுச்சீட்டின்மீது குறிக்கப் பெறலாம். இவ்வாறு குறிக்கப்பெறுவதற்குக் **குறிக்கை** (Noting) எனப் பெயர்.

அவமதிக்கப்பட்டதற்கு இக் குறிக்கையே போதுமான சான்றாகும். இக்குறிக்கையில் அவமதிக்கப்பட்ட நிகழ்ச்சி, அவமதிக்கப்பட்ட தேதி, அதற்குரிய காரணங்கள் ஆகியவை இடம்பெறும். இவ்வாறு குறிக்கை செய்வதற்குப் பொதுக் குறிப்பருக்குக் கட்டணம் செலுத்தல் வேண்டும். தொடக்கத்தில் இக்கட்டணத்தை மாற்றுச்சீட்டு வைத்திருப்பவர் செலுத்தினாலும், இச் செலவை ஏற்கவேண்டியவர் ஏற்குநரே.

'பொதுக் குறிப்பர்' என்பவர் அரசால் அமர்த்தப் படும் அலுவலராவார்.

குறிக்கைக் கட்டணம் தொடர்பாக, எழுதுநர் ஏடுகளில் செய்யவேண்டிய பதிவுகளாவன:

(அ) எழுதுநரே குறிக்கைக் கட்டணம் செலுத்தியிருப்பின்:

ஏற்குநர் க/கு பற்று ..
  ரொக்கக் க/கு ..
(குறிக்கைக் கட்டணம் செலுத்தியது குறித்த பதிவு)

(ஆ) மேலெழுதப் பெறுநர் குறிக்கைக் கட்டணம் செலுத்தியிருப்பின்:

ஏற்குநர் க/கு பற்று ..
  மேலெழுதப்பெறுநர் க/கு ..
(மேலெழுதப்பெறுநர் குறிக்கைக் கட்டணம் செலுத்தியது குறித்த பதிவு)

(இ) வட்டஞ்செய்த வங்கி குறிக்கைக் கட்டணம் செலுத்தியிருப்பின்:

ஏற்குநர் க/கு பற்று ..
  வங்கிக் க/கு ..
(வட்டஞ்செய்த வங்கி குறிக்கைக் கட்டணம் செலுத்தியது குறித்தபதிவு)

(ஈ) வசூலுக்காக வங்கியிடம் மாற்றுச்சீட்டு அனுப்பப்பட்டு, வங்கி அதைச் சமர்ப்பிக்கும் பொழுது அவமதிக்கப்படும் நிலையில், குறிக்கைக் கட்டணத்தை வங்கி செலுத்தாது; வங்கியின் அறிவிக்கை

யின் பேரில் எழுதுநர்தான் அக்கட்ட ணத்தைச் செலுத்த வேண்டும். அப் பொழுது அவரது ஏடுகளில் செய்ய வேண்டியது மேலே 'அ' இல் கண்டது போலவேதான்.

**குறிக்கைக் கட்டணம் பற்றி ஏற்குநர் ஏடுகளில் பதிவு**

குறிக்கைக் கட்டணத்தை எழுதுநர் - செலுத்தப் பெறுநர், மேலெழுதிப்பெறுநர், வட்டஞ்செய்த வங்கி ஆகிய இவர்களில் எவர் செலுத்தினாலும், **ஏற்குநர் ஏடுகளில்** இதற்குரிய பதிவு ஒன்றே.

அது பின்வருமாறு:

குறிக்கைக் கட்டணக் க/கு பற்று

எழுதுநர் க/கு

(குறிக்கைக் கட்டணம் செலுத்தப் பட்டது குறித்த பதிவு)

**குறிப்பு:** ஏற்குநரின் ஆண்டிறுதிக் கணக்குகளில் (Final Accounts) குறிக்கைக் கட்டணம் ஒரு செலவாக இலாப - நட்டக் கணக்கின் பற்றுப் பகுதியில் இடம்பெறும்.

**எடுத்துக்காட்டு 4**

கோபால் என்பவர் கணேஷ் என்பவர் மீது 1977 ஏப்ரல் 1 ஆம் நாளன்று ரூ. 1,000க்கு 2 மாதங்களுக்கு மாற்றுச் சீட்டு ஒன்று எழுதினார். கணேஷ் அதை ஏற்று, கோபாலுக்குத் திருப்பியனுப்புகிறார். கோபால் அதை ரூ. 990க்கு வட்டஞ்செய்கிறார். செலுத்தற்குரிய நாளன்று, அம்மாற்றுச் சீட்டு அவமதிக்கப்படுகிறது. முன்னிலைப் படுத்திய (சமர்ப்பித்த) வங்கி குறிக்கைக் கட்டணமாக (Noting Charges) ரூ. 5 செலுத்துகிறது.

குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

விடை

## கோபால் என்பவரின் ஏடுகள்
## குறிப்பேடு

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவு தொகை |
|---|---|---|---|---|
| 1977 | | | ரூ. | ரூ. |
| ஏப்ரல் 1 | பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு க/கு பற்று<br>கணேஷ் க/கு<br>(கணேஷ் மீது மாற்றுச்சீட்டு எழுதியது குறித்த பதிவு) | | 1,000 | 1,000 |
| ,, | வங்கிக் க/கு பற்று<br>வட்டக் க/கு பற்று<br>பெறுதற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு<br>(மாற்றுச்சீட்டை வட்டஞ்செய்வது குறித்த பதிவு) | | 990<br>10 | 1,000 |
| ஜூன் 4 | கணேஷ் க/கு பற்று<br>வங்கிக் க/கு<br>(மாற்றுச்சீட்டு அவமதிக்கப்பட்டது குறித்த பதிவு) | | 1,000 | 1,000 |
| ,, | கணேஷ் க/கு பற்று<br>வங்கிக் க/கு<br>(குறிக்கைக் கட்டணத்தை வங்கி செலுத்தியது குறித்த பதிவு) | | 5 | 5 |

**குறிப்பு:** கடைசி இரண்டு பதிவுகளையும் இணைத்து, ஒரு பதிவாக இவ்வாறு செய்யலாம்:

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| கணேஷ் க/கு | பற்று | 1,005 | |
| வங்கி க/கு | | | 1,005 |
| (மாற்றுச்சீட்டு அவமதிக்கப் பட்டதற்கும், குறிக்கைக் கட்டணம் செலுத்தப் பட்டதற்கும் உரிய பதிவு) | | | |

## கணேஷ் என்பவரின் ஏடுகள்
## குறிப்பேடு

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1977 ஏப்ரல் | | | ரூ. | ரூ. |
| 1 | கோபால் க/கு பற்று செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு (கோபால் எழுதிய மாற்றுச் சீட்டை ஏற்றது குறித்த பதிவு) | | 1,000 | 1,000 |
| ,, | கோபால் அந்த மாற்றுச் சீட்டை வட்டஞ் செய்த தற்கு, கணேஷ் ஏடுகளில் பதிவு தேவையில்லை | | | |
| ஜூன் 4 | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று கோபால் க/கு (மாற்றுச் சீட்டை அவமதித்தது குறித்த பதிவு) | | 1,000 | 1,000 |
| ,, | குறிக்கைக் கட்டணம் க/கு பற்று கோபால் க/கு (குறிக்கைக் கட்டணம் செலுத்தப் பட்டதை யடுத்து, கோபாலுக்கு அவர் அதைத் தர வேண்டியதற்குரிய பதிவு) | | 5 | 5 |

**குறிப்பு:** கடைசி இரண்டு பதிவுகளையும் ஒன்றாக இணைத்து இவ்வாறு பதியலாம்:

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு பற்று | 1,000 | |
| குறிக்கைக் கட்டணக் க/கு பற்று | 5 | |
| கோபால் க/கு | | 1,005 |

**மாற்றுச் சீட்டைப் புதுப்பித்தல்: (Renewal of a Bill)**

ஏற்குநர் தாம் முன்னர் ஏற்ற மாற்றுச் சீட்டை, செலுத்தற்குரிய நாளில் அவமதிக்குங்கால் அவரின் மதிப்பிற்கும், கடன்-தகைமைக்கும் (Credit worthiness) இழுக்கு நேரும். எனவே, தற்காலிகப் பண நெருக்கடி காரணமாக, உரிய நாளில் செலுத்த இயலாத நிலை ஏற்பட்டால், அவர் அந்த மாற்றுச் சீட்டின் எழுதுநரை அணுகி, அதை இரத்து செய்து விட்டு, சற்று கால நீட்டிப்பு தரும்வகையில் புதிய மாற்றுச் சீட்டு எழுதுமாறு வேண்டிக் கொள்வார்.

சில போழ்து, கொடுக்க வேண்டிய தொகையில் ஒரு பகுதியைச் செலுத்திவிட்டு, மீதத் தொகைக்குப் புதிய மாற்றுச் சீட்டு எழுதுமாறு கேட்டுக் கொள்வார்.

இவ்வாறு கால நீட்டிப்புப் பெறுவதற்குக் கைம்மாறாக, ஏற்குநர் எழுதுநருக்கு வட்டி செலுத்த வேண்டும்.

கால நீட்டிப்பின் அளவு, செலுத்த வேண்டிய தொகை (அதாவது பழைய மாற்றுச் சீட்டின் முழுத் தொகை அல்லது அதில் ஒரு பகுதி செலுத்தியிருப்பின் எஞ்சியுள்ள தொகை) இவற்றிற்கேற்ப வட்டி மாறுபடும். இந்த வட்டியை அவர் (ஏற்குநர்) உடனடியாக ரொக்கமாகச் செலுத்தலாம் அல்லது அது புதிய மாற்றுச் சீட்டின் தொகையோடு சேர்த்துக் கொள்ளப்படலாம்.

ஆக, ஏற்குநர், எழுதுநர் இவர்கள் இருவரின் ஒப்புதலோடு பழைய மாற்றுச்சீட்டு இரத்து செய்யப் பட்டு, கால நீட்டிப்பு தருமுகத்தான் ஏற்குநர் மீது புதிய மாற்றுச் சீட்டு வரையப்படுதலுக்கு மாற்றுச் சீட்டு புதுப்பிப்பு எனப்பெயர்.

## மாற்றுச்சீட்டைப் புதிப்பித்தலுக்குரிய பதிவுகள்

| நடவடிக்கை | எழுதுநர் ஏடுகளில் பதிவுகள் | ஏற்குநர் ஏடுகளில் பதிவுகள் |
|---|---|---|
| (1) பழைய மாற்றுச் சீட்டை இரத்து செய்தல் | ஏற்குநர் க/கு பற்று .. <br> பெறுதற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு .. <br> (பழைய மாற்றுச் சீட்டை இரத்து செய்தல்) <br><br> குறிப்பு : இருவர் ஏடுகளிலும் மாற்றுச் சீட்டை அவமதித்தால் என்ன பதிவோ அதே பதிவு தான் இரத்து செய்வதற்கும் என்பதைக் கவனிக்க) | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக்குக் க/கு பற்று .. <br> எழுதுநர் க/கு .. <br> (பழைய மாற்றுச்சீட்டை இரத்து செய்தல்) |
| (2) பழைய மாற்றுச்சீட்டின் தொகையில் ஒரு பகுதியைச் செலுத்துதல் | ரொக்கக் க/கு பற்று .. <br> ஏற்குநர் க/கு .. <br> (பழைய மாற்றுச்சீட்டின் தொகையில் ஒரு பகுதியைச் செலுத்தப் பெறுதல்) | எழுதுநர் க/கு பற்று <br> ரொக்கக் க/கு <br> (பழைய மாற்றுச்சீட்டின் தொகையில் ஒரு பகுதியைச் செலுத்தல்) |

| | | |
|---|---|---|
| (3) கால நீட்டிப்புக்குரிய வட்டிக்காகப் பதிவு | ஏற்குநர் க/கு பற்று .. <br> வட்டி க/கு .. <br> (பெறுதற்குரிய வட்டிக்கான பதிவு) | வட்டிக் க/கு பற்று .. <br> எழுதுநர் க/கு .. <br> (செலுத்தற்குரிய வட்டிக்கான பதிவு) |
| (4) வட்டியை ரொக்கமாகச் செலுத்தல் | ரொக்கக் க/கு பற்று .. <br> ஏற்குநர் க/கு .. <br> (வட்டியை ரொக்கமாகப் பெறுதல்) | எழுதுநர் க/கு பற்று .. <br> ரொக்கக் க/கு .. <br> (வட்டியை ரொக்கமாகச் செலுத்தல்) |
| (5) புதிய மாற்றுச் சீட்டு எழுதுதல் | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று .. <br> ஏற்குநர் க/கு .. <br> (புதிய மாற்றுச்சீட்டு எழுதுதல்) <br> **குறிப்பு :** பழைய மாற்றுச் சீட்டுத் தொகையில் செலுத்தாமலுள்ள எஞ்சிய பகுதியும், ரொக்கமாகச் செலுத்தாத வட்டியும் சேர்ந்த மொத்தத் தொகையே புதிய மாற்றுச் சீட்டின் தொகையாகும். | எழுதுநர் க/கு பற்று .. <br> செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு .. <br> (புதிய மாற்றுச்சீட்டு ஏற்றல்) |

**எடுத்துக்காட்டு 5**

*1970 ஆகஸ்டு 1ஆம் நாள் X என்பவர் Y என்பவருக்கு ரூ. 500 பெறுமானமுள்ள சரக்குகளைக் கடனாக விற்று, அத் தொகைக்கு அவர் மீது 3 மாத மாற்றுச்சீட்டு ஒன்று எழுதினார். Y அதை ஏற்றார். உரிய நாளில் Y என்பவருக்கு அந்த மாற்றுச் சீட்டைச் செலுத்த இயலாமல் போனதன் காரணமாக, அவர் X என்பவரை அணுகி, ஆண்டுக்கு 6% வீதம் வட்டியையும் சேர்த்து மேலும் 2 மாதத் தவணைக்கு அந்த மாற்றுச் சீட்டைப் புதிப்பிக்குமாறு கேட்டுக் கொண்டார். X என்பவர் இதற்கு உடன்பட்டார். உரிய நாளில் இந்த இரண்டாவது மாற்றுச் சீட்டு செலுத்தப்பட்டது. இவற்றிற்குரிய பதிவுகள் தருக.*

## X என்பவரின் ஏடுகள்
## குறிப்பேடு

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| 1970 ஆக 1 | Y க/கு பற்று<br>விற்பனைக் க/கு<br>(Y என்பவருக்குச் செய்த கடன் விற்பனை) | | 500 | 500 |
| ,, | பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு க/கு பற்று<br>Y க/கு<br>(Y மீது மாற்றுச் சீட்டு எழுதுதல்) | | 500 | 500 |
| நவ 4 | Y க/கு பற்று<br>பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு க/கு<br>(பழைய மாற்றுச் சீட்டை இரத்து செய்தல்) | | 500 | 500 |
| ,, | Y க/கு பற்று<br>வட்டிக் க/கு<br>(ரூ. 500க்கு 6% வீதம் இரு மாத வட்டி) | | 5 | 5 |
| ,, | பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு க/கு பற்று<br>Y க/கு<br>(பழைய நிலுவையும் வட்டியும் சேர்ந்த தொகைக்குப் புதிய மாற்றுச்சீட்டு எழுதுதல்) | | 505 | 505 |
| 1971 சன 7 | ரொக்கக் க/கு பற்று<br>பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு க/கு<br>(இரண்டாவது மாற்றுச்சீட்டுக்குப் பணம் பெறுதல்) | | 505 | 505 |

**Y என்பவரின் ஏடுகள்**
**குறிப்பேடு**

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1970 | | | ரூ. | ரூ. |
| ஆக 1 | கொள்முதல் க/கு பற்று<br>X க/கு<br>(X என்பவரிடமிருந்து கடன் கொள்முதல்) | | 500 | 500 |
| ,, | X க/கு பற்று<br>செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுக/கு<br>(X எழுதிய மாற்றுச் சீட்டை ஏற்றல்) | | 500 | 500 |
| வ 4 | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு க/கு பற்று<br>X க/கு<br>(மேற்கூறிய மாற்றுச் சீட்டை ரத்து செய்தல்) | | 500 | 500 |
| ,, | வட்டிக் க/கு பற்று<br>X க/கு<br>(ரூ. 500க்கு 6% வீதம் இரு மாத வட்டி) | | 5 | 5 |
| ,, | X க/கு பற்று<br>செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு க/கு<br>(பழைய நிலுவை, சேர்ந்த மொத்தத் தொகைக்கு எழுதப் பட்ட புதிய மாற்றுச் சீட்டை ஏற்றல்) | | 505 | 505 |
| 1971<br>சன 7 | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு பற்று<br>ரொக்கக் க/கு<br>(இரண்டாவது மாற்றுச்சீட்டிற்குப் பணம் செலுத்தல்) | | 505 | 505 |

**எடுத்துக்காட்டு 6**

ஐந்தாவது எடுத்துக்காட்டை எடுத்துக் கொண்டு அதில் வட்டி ரொக்கமாகப் பெறப்பட்டது என்று மட்டும் மாற்றிக் கொள்க.

**விடை:** X என்பவரின் ஏடுகள்

குறிப்பேடு

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1970 | | | ரூ. | ரூ. |
| ஆக 1 | Y க/கு பற்று<br>விற்பனைக் க/கு<br>(Y என்பவருக்குச் செய்த கடன் விற்பனை) | | 500 | 500 |
| ,, | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று<br>Y க/கு<br>(Y மீது மாற்றுச்சீட்டு எழுதுதல்) | | 500 | 500 |
| நவ 4 | Y க/கு பற்று<br>பெறுதற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு<br>(மாற்றுச் சீட்டை இரத்து செய்தல்) | | 500 | 500 |
| ,, | Y க/கு பற்று<br>வட்டிக் க/கு<br>(ரூ. 500க்கு 6% வீதம் இரு மாத வட்டி) | | 5 | 5 |
| ,, | ரொக்கக் க/கு பற்று<br>Y க/கு<br>(வட்டியை ரொக்கமாகப் பெறுதல்) | | 5 | 5 |
| ,, | பெறுதற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு பற்று<br>Y க/கு<br>(புதிய மாற்றுச்சீட்டு எழுதுதல்) | | 500 | 500 |
| 1971<br>சன 7 | ரொக்கக் க/கு பற்று<br>பெறுதற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு<br>(உரிய நாளில் புதிய மாற்றுச்சீட்டிற்குப் பணம்பெறுதல்) | | 500 | 500 |

**Y என்பவரின் ஏடுகள்**
**குறிப்பேடு**

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1970 | | | ரூ. | ரூ. |
| ஆக 1 | கொள்முதல் க/கு பற்று<br>X க/கு ..<br>(X இடமிருந்து கடன் கொள்முதல்) | | 500 | 500 |
| ,, | X க/கு பற்று<br>செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு<br>(X எழுதிய மாற்றுச் சீட்டை ஏற்றல்) | | 500 | 500 |
| நவ 4 | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று<br>X க/கு ..<br>(மாற்றுச்சீட்டை இரத்து செய்யப் பெறல்) | | 500 | 500 |
| ,, | வட்டி க/கு பற்று<br>X க/கு ..<br>(ரூ. 500க்கு 6% வீதம் 2 மாத வட்டி) | | 5 | 5 |
| ,, | X க/கு பற்று<br>ரொக்கக் க/கு<br>(வட்டியை ரொக்கமாகச் செலுத்தல்) | | 5 | 5 |
| ,, | X க/கு பற்று<br>செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு<br>(புதிய மாற்றுச் சீட்டை ஏற்றல்) | | 500 | 500 |
| 1971<br>சன 7 | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு பற்று<br>ரொக்கக் க/கு<br>(புதிய மாற்றுச் சீட்டிற்குப் பணம் செலுத்துதல்) | | 500 | 500 |

எடுத்துக்காட்டு 7

1970 சனவரி 1 ஆம் நாள் *A* என்பவர் *B* என்பவர்மீது ரூ. 1,000க்கு 2 மாத மாற்றுச்சீட்டு எழுதினார். *B* அதை ஏற்றார். செலுத்தற்குரிய நாளுக்குச் சற்று முன்னதாக, தன்னால் மாற்றுச் சீட்டைச் செலுத்த இயலாது என்பதை உணர்ந்தவுடன், *B* என்பவர் *A* என்பவரை அணுகி, அவருக்குப் பகுதிப் பணமாக ரூ. 600 ரொக்கம் கொடுப்பதாகவும், மீதித் தொகைக்கும், ஆண்டுக்கு 6% வீதம் வட்டிக்குமாக இரண்டு மாதங்கள் தவணை கொண்ட புதிய மாற்றுச்சீட்டு எழுதிக் கொள்ளுமாறும் கேட்டுக்கொண்டார். இதற்கு *A* என்பவர் உடன்பட்டார். அப் புதிய மாற்றுச் சீட்டு ரூ. 398க்கு வங்கியிடம் வட்டஞ் செய்யப்பட்டது. உரிய நாளில் அது செலுத்தப்பட்டது. இவை குறித்துக் குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

விடை.

**A என்பவரின் ஏடுகள்**
**குறிப்பேடு**

| தேதி. | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1970 | | | ரூ. | ரூ. |
| ஜன 1 | பெறுதற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு பற்று<br>B க/கு<br>(B மீது மாற்றுச் சீட்டு எழுதுதல்) | | 1,000 | 1,000 |
| மார் 1 | B க/கு பற்று<br>பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு க/கு<br>(மாற்றுச்சீட்டை இரத்து செய்தல்) | | 1,000 | 1,000 |
| ,, | ரொக்கக் க/கு பற்று<br>B க/கு<br>(Bஇடமிருந்து பகுதிப் பணம் பெறுதல்) | | 600 | 600 |
| ,, | B க/கு பற்று<br>வட்டி க/கு<br>(கால நீட்டிப்பான 2 மாதங்களுக்கு ரூ. 400 மீது 6% வீதம் உரிய வட்டி) | | 4 | 4 |
| ,, | பெறுதற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு பற்று<br>B க/கு<br>(Bமீது புதிய மாற்றுச் சீட்டு எழுதுதல்) | | 404 | 404 |
| ,, | வங்கிக் க/கு பற்று<br>வட்டக் க/கு பற்று<br>பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு க/கு<br>(புதிய மாற்றுச் சீட்டை வட்டஞ் செய்தல்) | | 398<br>6 | 404 |
| மே 7 | வட்டஞ் செய்யப் பட்ட மாற்றுச்சீட்டு செலுத்தப்படுவதற்கு இவரது ஏடுகளில் பதிவு ஏதுமில்லை. | | | |

**B என்பவரின் ஏடுகள்**

**குறிப்பேடு**

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1970 | | | ரூ. | ரூ. |
| சன 1 | A க/கு பற்று<br>செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு க/கு<br>(A எழுதிய மாற்றுச்சீட்டை ஏற்றல்) | | 1,000 | 1,000 |
| மார் 4 | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு க/கு பற்று<br>A க/கு<br>(அம் மாற்றுச்சீட்டை இரத்து செய்தல்) | | 1,000 | 1,000 |
| ,, | A க/கு பற்று<br>ரொக்கக் க/கு<br>(பகுதித் தொகையாக ரூ. 600 செலுத்தல்) | | 600 | 600 |
| ,, | வட்டிக் க/கு பற்று<br>A க/கு<br>(மீதித் தொகைக்கு 2 மாத கால நீட்டிப்பிற்கு 6% வீதம் உரிய வட்டி) | | 4 | 4 |
| ,, | A க/கு பற்று<br>செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு க/கு<br>(A எழுதிய புதிய மாற்றுச் சீட்டை ஏற்றல்) | | 404 | 404 |
| ,, | A என்பவர் புதிய சீட்டை வட்டஞ் செய்வதற்கு இவரது (B-யின்) ஏடுகளில் பதிவு ஏதுமில்லை. | | | |
| மே 7 | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று<br>ரொக்கக் க/கு<br>(உரிய நாளில் புதிய மாற்றுச்சீட்டைச் செலுத்துவதற்குரிய பதிவு) | | 404 | 404 |

**எடுத்துக்காட்டு 8**

1972 ஜூன் 1 ஆம் நாளன்று மோகன் என்பவர் மகேஷ் என்பவருக்கு ரூ. 2,000 பெறுமானமுள்ள சரக்குகளைக் கடன் விற்பனை செய்து, அத் தொகைக்கு அவர்மீது 2 மாத மாற்றுச்சீட்டு எழுதுகிறார். அவர் (மோகன்) அம் மாற்றுச்சீட்டில் மகேஷின் ஏற்பைப் பெற்று, ரூ. 1,960-க்கு அதை வட்டஞ் செய்கிறார். உரிய நாளில் அது அவமதிக்கப் படுவதன் காரணமாக, குறிக்கைக் கட்டணமாக ரூ. 10ஐ வங்கி செலுத்துகிறது. மகேஷ், மோகனுக்கு ரூ 800 செலுத்தி, மீதித் தொகைக்கும் ரூ 20 வட்டிக்குமாகப் புதிய மாற்றுச் சீட்டை இரண்டு மாதத் தவணைக்கு எழுதிக்கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறார். மோகன் இதற்கு உடன்படுகிறார். உரிய நாளில் இந்த இரண்டாவது மாற்றுச் சீட்டும் அவமதிக்கப்படுகிறது; மோகன் குறிக்கைக் கட்டணம் ரூ. 5 செலுத்தி அதன்மீது குறிக்கை பெறுகிறார். இவற்றிற்குக் குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

விடை

## மோகன் என்பவரின் ஏடுகள்
## குறிப்பேடு

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1972 | | | ரூ. | ரூ. |
| ஜூன் 1 | மகேஷ் க/கு பற்று<br>விற்பனைக் க/கு<br>(மகேஷுக்குச் செய்த கடன் விற்பனை) | | 2,000 | 2,000 |
| ,, | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று<br>மகேஷ் க/கு ..<br>(மகேஷ் மீது மாற்றுச் சீட்டு எழுதுதல்) | | 2,000 | 2,000 |
| ,, | வங்கிக் க/கு பற்று<br>வட்டக் க/கு பற்று<br>பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு க/கு<br>(மாற்றுச்சீட்டை வட்டஞ்செய்தல்) | | 1,960<br>40 | 2,000 |
| ஆக 4 | மகேஷ் க/கு பற்று<br>வங்கிக் க/கு<br>(வட்டஞ்செய்த மாற்றுச் சீட்டு அவமதிக்கப்பட்டதற்கும், குறிக்கைக் கட்டணத்தை வங்கி செலுத்தியதற்குமான பதிவு) | | 2,010 | 2,010 |
| ,, | ரொக்கக் க/கு பற்று<br>மகேஷ் க/கு<br>(பகுதி ரொக்கம் பெறுதல்) | | 800 | 800 |
| ,, | மகேஷ் க/கு பற்று<br>வட்டிக் க/கு<br>(கால நீட்டிப்புக்குரிய வட்டி) | | 20 | 20 |

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| ,, | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று மகேஷ் க/கு .. (பழைய நிலுவை, வட்டி இவற்றின் மொத்தத் தொகைக்குப் புதிய மாற்றுச்சீட்டு எழுதுதல்) 2010—800+20= 1230 | | 1,230 | 1,230 |
| அக் 7 | மகேஷ் க/கு பற்று பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு க/கு (இரண்டாவது மாற்றுச் சீட்டு அவமதிக்கப் படுதல்) | | 1,230 | 1,230 |
| ,, | மகேஷ் க/கு பற்று ரொக்கக் க/கு (குறிக்கைக் கட்டணம் செலுத்துதல்) | | 5 | 5 |

**குறிப்பு :** இரண்டாவது மாற்றுச்சீட்டு மறுக்கப்பட்ட நிலையில் மகேஷிடமிருந்து வரவேண்டிய தொகை ரூ. 1,235/- (இரண்டாவது மாற்றுச்சீட்டுத் தொகை ரூ. 1230 + குறிக்கைக் கட்டணம் ரூ. 5).

## மகேஷ் என்பவரின் ஏடுகள்

### குறிப்பேடு

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1972 | | | ரூ. | ரூ. |
| ஜூன் 1 | கொள்முதல் க/கு பற்று<br>மோகன் க/கு<br>(மோகனிடமிருந்து செய்த கடன் கொள்முதல்) | | 2,000 | 2,000 |
| | மோகன் க/கு பற்று<br>செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு க/கு<br>(மோகன் எழுதிய மாற்றுச்சீட்டை ஏற்றல்) | | 2,000 | 2,000 |
| | மோகன் அந்த மாற்றுச் சீட்டை வட்டஞ் செய்ததற்கு இவருடைய ஏடுகளில் பதிவு ஏதுமில்லை. | | | |
| ஆக 4 | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு க/கு பற்று<br>குறிக்கைக் கட்டணம் க/கு பற்று<br>மோகன் க/கு<br>(மாற்றுச்சீட்டை அவமதித்ததற்கும் குறிக்கைக் கட்டணம் செலுத்தப்பட்டதற்குமான பதிவு) | | 2,000<br>10 | 2,010 |
| | மோகன் க/கு பற்று<br>ரொக்கக் க/கு<br>(பகுதித் தொகைக்கு ரொக்கம் செலுத்தியது குறித்த பதிவு) | | 800 | 800 |

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்று தொகை | வரவு தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| ,, | வட்டிக் க/கு பற்று<br>மோகன் க/கு<br>(கால நீட்டிப்புக்காகக் கொடுக்க வேண்டிய வட்டிக்குரிய பதிவு) | | 20 | 20 |
| ,, | மோகன் க/கு பற்று<br>செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு க/கு<br>(பழைய மாற்றுச்சீட்டின் மீதித் தொகை, குறிக்கைக் கட்டணம், வட்டி இவற்றின் மொத்தத்திற்கு எழுதப் பட்ட புதிய மாற்றுச் சீட்டை ஏற்றல்) | | 1,230 | 1,230 |
| அக் 7 | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு க/கு பற்று<br>மோகன் க/கு<br>(புதிய மாற்றுச்சீட்டை அவமதித்தல்) | | 1,230 | 1,230 |
| ,, | குறிக்கைக் கட்டணம் பற்று<br>மோகன் க/கு<br>(மோகன் செலுத்திய குறிக்கைக் கட்டணத்திற்குரிய பதிவு) | | 5 | 5 |

**ஏற்குநர் நொடிப்புநிலை அடைதல் (Insolvency of the Acceptor)**

ஒருவரின் சொத்துகளைக் காட்டிலும் அவர் பிறருக்குச் செலுத்தவேண்டிய பொறுப்புகள் அதிகமாக இருந்து அவர் அப் பொறுப்புகளைத் தீர்க்க இயலா நிலையில் நீதிமன்றம் அவரை நொடிப்புநிலை அடைந்தவர் எனத் தீர்ப்பளிக்கும்.

ஏற்குநர் நொடிப்புநிலை எய்தினால், மாற்றுச்சீட்டின் முழுத் தொகையையும் அவரிடமிருந்து பெறுவது அரிது என்பது எழுதுநருக்குத் தெரியும். எனவே அவர் (எழுதுநர்) மாற்றுச்சீட்டை அவமதிக்கப்பட்டதாகப் பாவித்து, அவமதிப்புக்குரிய பதிவை அவரது ஏடுகளில் செய்ய வேண்டும். பிறகு அவர் ஏற்குநரிடமிருந்து வரவேண்டிய தொகையில் ஒரு பகுதியைப் பெறுவாராயின் அதற்குரிய பதிவைச் செய்து, வராத எஞ்சிய பகுதியை **வாராக் கடனாகப்** போக்கெழுத வேண்டும். இவ்வாறு எழுதுநர் ஏடுகளில் உள்ள ஏற்குநர் கணக்கு முடிக்கப்பெறும்.

அதுபோலவே ஏற்குநர் ஏடுகளிலும் முதலாவதாக, அவமதிப்புக்குரிய பதிவைச் செய்ய வேண்டும். பிறகு அவர், செலுத்தவேண்டிய தொகையில் ஒரு பகுதியைச் செலுத்துங்கால் அதற்குரிய பதிவைச் செய்து, செலுத்தவியலாத எஞ்சிய பகுதியைப் **பற்றாக்குறைக் கணக்கிற்கு** (Deficiency Account) மாற்றவேண்டும். இவ்வாறு ஏற்குநர் ஏடுகளிலுள்ள 'எழுதுநர் கணக்கு' முடிக்கப்பெறும்.

மேற்கூறியவற்றை இப்பொழுது குறிப்பேட்டுப் பதிவுகளாக இரு தரப்பார் ஏடுகளிலும் காணுவோம் :

**ஏற்குநர் நொடிப்புநிலை அடைவதை ஒட்டிய குறிப்பேட்டுப் பதிவுகள் :**

**எழுதுநர் ஏடுகளில்**

---

**(1) மாற்றுச்சீட்டை அவமதிக்கப்பட்டதாகப் பாவித்தல்**

ஏற்குநர் க/கு பற்று
பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு க/கு
(மாற்றுச்சீட்டு அவமதிக்கப்பட்டதாகப் பாவிப்பதற்குரிய பதிவு)

**(2) வரவேண்டிய தொகையில் ஒரு பகுதியைப் பெறுவதும், எஞ்சிய பகுதியைப் போக்கெழுதுவதும்**

*ரொக்கக் க/கு பற்று ...*
*வாராக் கடன் க/கு பற்று ...*
*ஏற்குநர் க/கு*
*(பெற்ற ரொக்கத்திற்கும், எஞ்சிய கடனை வாராக் கடனாகப் போக்கெழுது வதற்கும் உரிய பதிவு)*

**குறிப்பு :** இந் நிலையில் எழுதுநர் ஏடுகளிலுள்ள 'ஏற்குநர் கணக்கு' முடிக்கப்பெறும் (Closed).

---

**ஏற்குநர் ஏடுகளில்**

---

**(அ) மாற்றுச்சீட்டை அவமதித்ததாகப் பாவித்தல்**

*செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று ...*
*எழுதுநர் க/கு ...*
*(மாற்றுச்சீட்டை அவமதிப்பதாகப் பாவிப் பதற்குரிய பதிவு)*

**(ஆ) செலுத்த வேண்டிய தொகையில் ஒரு பகுதியைச் செலுத்துவதற்கும், செலுத்த வியலாத எஞ்சிய பகுதியைப் பற்றாக் குறைக் கணக்கிற்கு மாற்றுவதற்கும்**

*எழுதுநர் க/கு பற்று ...*
*ரொக்கக் க/கு ...*
*பற்றாக்குறைக் க/கு ...*
*(செலுத்திய ரொக்கத் திற்கும், செலுத்த வியலாத கடனைப் பற்றாக்குறைக் கணக் கிற்கு மாற்றுவதற்கு முரிய பதிவு)*

---

**எடுத்துக்காட்டு 9**

திலீப் என்பவரிடமிருந்து வரவேண்டிய கடனைத் தீர்க்கப்பெறும் முகத்தான் அவர் மீது டேவிட் என்பவர் 1977 சனவரி 1 ஆம் நாளன்று ரூ. 1,000-க்கு 3 மாத மாற்றுச் சீட்டு எழுதினார். அவர் திலீப்பின் ஏற்பைப் பெற்று அம் மாற்றுச் சீட்டை ரூ. 985-க்கு வட்டஞ்செய்தார். உரிய நாளில் அது அவமதிக்கப்பட்டது. அப்பொழுது திலீப் என்பவர் ரூ. 400 செலுத்தி, மீதித் தொகைக்கும் ரூ. 20 வட்டிக்குமாக மொத்தத்திற்கு 2 மாத மாற்றுச்சீட்டு எழுதிக்கொள்ளுமாறு டேவிட்டைக் கேட்டுக் கொண்டார். டேவிட் இதற்கு உடன்பட்டார். 1977 சூன் 1ஆம் நாளன்று திலீப் நொடிப்புநிலை அடைந்தார். 1977 சூன் 10ஆம் நாளன்று திலீப்பின் சொத்திலிருந்து (Estate) ரூபாய்க்கு 75 காசுகள் வீதம் டேவிட் பெற்றார்.

இரு தரப்பார் ஏடுகளிலும் செய்யவேண்டிய குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருவதோடு, டேவிட்டின் ஏடுகளில் தோன்றும் திலீப்பின் கணக்கைக் காட்டுக.

**விடை**

**டேவிட் என்பவரின் ஏடுகள்**

**குறிப்பேடு**

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1977 | | | ரூ. | ரூ. |
| சன 1 | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று | | 1,000 | |
| | திலீப் க/கு .. .. | | | 1,000 |
| | (திலீப் மீது மாற்றுச் சீட்டு எழுதுதல்) | | | |
| ,, | வங்கிக் க/கு பற்று | | 985 | |
| | வட்டக் க/கு பற்று | | 15 | |
| | பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு க/கு | | | 1,000 |
| | (மாற்றுச்சீட்டை வட்டஞ்செய்தல்) | | | |
| ஏப் 4 | திலீப் க/கு பற்று | | 1,000 | |
| | வங்கிக் க/கு | | | 1,000 |
| | (வட்டஞ்செய்த மாற்றுச்சீட்டு அவமதிக்கப் படுதல்) | | | |

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| ஏப் 4 | ரொக்கக் க/கு பற்று<br>திலீப் க/கு ..<br>(திலீப்பிடமிருந்து பெற்ற ரொக்கம்) | | 400 | 400 |
| ,, | திலீப் க/கு பற்று<br>வட்டிக் க/கு<br>(கால நீட்டிப்புக்குரிய வட்டி குறித்த பதிவு) | | 20 | 20 |
| ,, | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று<br>திலீப் க/கு<br>(திலீப் மீது புதிய மாற்றுச்சீட்டு எழுதுதல்) | | 620 | 620 |
| ஜுன் 1 | திலீப் க/கு பற்று<br>பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு க/கு<br>(புதிய மாற்றுச்சீட்டு அவமதிக்கப்பட்டதாகப் பாவிப்பது குறித்த பதிவு)<br>**குறிப்பு:** புதிய மாற்றுச் சீட்டின் செலுத்தற் குரிய நாள் ஜுன் 7-ந் தேதி ஆயினும் ஏற்குநர் ஜுன் 1 ஆம் தேதியே நொடித்து விட்டதால், அன்றே இப் பதிவு செய் யப்படுகிறது. | | 620 | 620 |
| ஜுன் 10 | ரொக்கக் க/கு பற்று<br>வாராக்கடன் க/கு பற்று<br>திலீப் க/கு<br>(திலீப் சொத்திலிருந்து ரூபாய்க்கு 75 காசுகள் வீதம் பெற்ற ரொக்கம்)<br>**குறிப்பு:** பெற இயலாத தொகையை வாராக் கடன் எனப் போக்கெழுதுவதைக் கவனி. | | 465<br>155 | 620 |

# பேரேடு
## திலீப் கணக்கு

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| 1977 | | ரூ. | 1977 | | ரூ. |
| சன 1 | இருப்பு கீ/கொ | 1,000 | சன 1 | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு | 1,000 |
| ஏப் 4 | வங்கிக் க/கு | 1,000 | ஏப் 4 | ரொக்கக் க/கு | 400 |
| ,, | வட்டி க/கு | 20 | ,, | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டு க/கு | 620 |
| ஜூன் 1 | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு | 620 | ஜூன் 10 | ரொக்கக் க/கு | 465 |
| | | | | வாராக் கடன் க/கு | 155 |
| | | 2,640 | | | 2,640 |

## திலீப் என்பவரின் ஏடுகள்
## குறிப்பேடு

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| 1977 ஜன 1 | டேவிட் க/கு பற்று | | 1,000 | |
| | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு க/கு | | | 1,000 |
| | (டேவிட் எழுதிய மாற்றுச்சீட்டை ஏற்றல்) | | | |
| ,, | டேவிட் அம் மாற்றுச் சீட்டை வட்டஞ்செய்த தற்கு இவருடைய ஏடு களில் பதிவு ஏதுமில்லை. | | | |
| ஏப் 4 | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு க/கு பற்று | | 1,000 | |
| | டேவிட் க/கு | | | 1,000 |
| | (மாற்றுச்சீட்டை அவமதித்தல்) | | | |
| ,, | டேவிட் க/கு பற்று | | 400 | |
| | ரொக்கக் க/கு | | | 400 |
| | (ரொக்கம் செலுத்தியது குறித்த பதிவு) | | | |
| ,, | வட்டிக் க/கு பற்று | | 20 | |
| | டேவிட் க/கு | | | 20 |
| | (கால நீட்டிப்புக்குரிய வட்டி குறித்த பதிவு) | | | |
| ,, | டேவிட் க/கு பற்று | | 620 | |
| | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு க/கு | | | 620 |
| | (டேவிட் எழுதிய புதிய மாற்றுச்சீட்டை ஏற்றல்) | | | |

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| ஜூன் 1 | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு பற்று | | 620 | |
| | டேவிட் க/கு | | | 620 |
| | (புதிய மாற்றுச்சீட்டை அவமதித்ததாகப் பாவித்தல்) | | | |
| ஜூன் 10 | டேவிட் க/கு பற்று | | 620 | |
| | ரொக்கக் க/கு | | | 465 |
| | பற்றாக்குறைக் க/கு | | | 155 |
| | (நொடிப்புநிலைச் சொத்திலிருந்து ரூபாய்க்கு 75 காசுகள் வீதம் செலுத்தப் பட்டதற்கும், செலுத்தாத தொகையைப் பற்றாக்குறைக் கணக்கிற்கு மாற்றுவதற்கும் உரிய பதிவு) | | | |

**பணவசதி மாற்றுச்சீட்டுகள் (Accommodation Bills)**

தொழில் நடவடிக்கைகள் காரணமாக எழும் குறுந்தவணைக் கடன் பொறுப்புகளைத் தீர்ப்பதற்காக மாற்றுச்சீட்டுகள் எழுதப்படுகின்றன, ஏற்கப்படுகின்றன என்பதை நாம் அறிவோம். ஆனால், பணவசதி மாற்றுச் சீட்டுகள் அவ்வாறில்லை; அவை தொழில் நடவடிக்கைகள் காரணமாக எழுதப்படுபவை அல்ல; அவற்றின் எழுதுநருக்கோ ஏற்குநருக்கோ அல்லது அந்த இரு சாராருக்குமோ பணம் தேவைப்படும் பொழுது அவர்தம் புகழ், நாணயம், கடன்தகைமை (Credit worthiness) இவற்றின் அடிப்படையில் வங்கிகளிடமிருந்து பணம் புரட்டுவதற்காக இத்தகைய மாற்றுச்சீட்டுகள் எழுதப்படுகின்றன, ஏற்கப்படுகின்றன. இந்த மாற்றுச்சீட்டுகளை எழுதி, ஏற்கப்பெற்று, வங்கிகளிடம் வட்டஞ்செய்து தற்காலிக நிதி வசதி பெறலாம். இவ்வாறு எழுப்பப்படும் நிதி வசதி, எழுதுநர், ஏற்குநர் அல்லது அந்த இரு சாராரின் தற்காலிக நிதித் தட்டுப்பாட்டைப் போக்கிக்கொள்ள உதவுகிறது.

எழுதுநரின் முழுப் பயனுக்காக அம் மாற்றுச்சீட்டு எழுதப்பட்டு ஏற்கப்பட்டிருப்பின் அது செலுத்தற்குரிய தாவதற்குச் சில நாள்களுக்கு முன் அவர் அதன் தொகையை ஏற்குநருக்குச் செலுத்துவார்; உரிய நாளில் ஏற்குநர் அதன் தொகையைச் செலுத்துவதற்கு இது வசதி செய்கிறது. அந்த இரு சாராரின் பயனுக்காக அம்மாற்றுச்சீட்டு எழுதப்பட்டு ஏற்கப்பட்டிருப்பின், அவரவர் பயன்படுத்திய தொகைகளை அவர்கள் செலுத்தி மாற்றுச் சீட்டுக்குரிய தொகை முறையாகச் செலுத்தப்படுவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். எனவே, பணவசதி மாற்றுச்சீட்டுகள் எழுதுநர் அல்லது ஏற்குநருக்கு நிதி வசதி செய்து தருவதற்கோ அல்லது அந்த இரு சாராருக்கும் பணவசதி செய்து தருவதற்கோ எழுதப்படுகின்றன.

சிலபோழ்து, ஒரு தரப்பார் மற்றொரு தரப்பார் மீது மாற்றுச்சீட்டு எழுதுவதற்கு மாறாக, இவர் அவர் மீதும், அவர் இவர் மீதும் என ஒரே நேரத்தில் இரு மாற்றுச் சீட்டுகள் எழுதப்பட்டு, ஏற்கப்படுகின்றன. அதனதன் எழுது நர் அவற்றை வட்டஞ்செய்து பணம் பெறுவர்; அதனதன் ஏற்குநர் உரிய நேரத்தில் அவற்றிற்குப் பணம் செலுத்துவ தோடு, இது சம்பந்தமாக ஒருவர் மற்றவருக்குத் தரவேண்டி யதையும் நேர் செய்துகொள்வர்.

பண வசதி மாற்றுச்சீட்டுகளின் ஏற்குநர் அவற்றிற்குரிய முழுப் பயனும் பெறாது அவற்றை ஏற்பதால், அவர்கள் எழுதுநர்பால் பொறுப்புக்கு ஆளாவதில்லை; ஆயினும் அவற்றை வட்டஞ்செய்யும் வங்கியர் மதிப்பீந்து (பணம் கொடுத்து) அவற்றைப் பெறுவதால் அவர்களுக்கு ஏற்குநர் பொறுப்பாவார். பண வசதி மாற்றுச்சீட்டுகள் **பட்டம்** (Kite) என்றும் அழைக்கப்படுகின்றன.

வாணிக மாற்றுச்சீட்டுகளைக் கணக்கேடுகளில் (அதாவது குறிப்பேடு, பேரேடுகளில்) எவ்வாறு பதிகிறோமோ அவ் வாறே பண வசதி மாற்றுச்சீட்டுகளையும் பதிய வேண்டும். அதாவது, இந்த இரு வகை மாற்றுச்சீட்டுகளுக்கும் பதிவுகள் ஒரே மாதிரியாகத்தான் செய்ய வேண்டும். எனினும் 'வட்டம்' (Discount) பற்றிய பதிவில் சற்று விழிப்பாக இருக்க வேண்டும். பண வசதி மாற்றுச்சீட்டை வட்டஞ் செய்து அதனால் கிடைக்கும் பணத்தை எழுதுநர் மட்டுமே பயன்படுத்துவாராயின், அந்த வட்டம் என்னும் செலவை (அல்லது இழப்பை) அவர் மட்டுமே ஏற்கவேண்டும்; மாறாக, வட்டஞ்செய்து பெறும் பணத்தை அவரும் ஏற்குநரும் பகிர்ந்து கொள்வராயின் அதே விகிதத்தில் அவர்கள் 'வட்டம்' என்னும் செலவையும் பகிர்ந்து கொள்ள வேண்டும்.

**எடுத்துக்காட்டு 10**

எழுதுநராகிய இரகு என்பவரின் பண வசதித் தேவைக்காக மே மாதம் 15 ஆம் நாளன்று இராமு என்பவர் தன்மீது எழுதப்பட்ட ரூ. 2,000-க்குரிய இரு மாத மாற்றுச்சீட்டை ஏற்றார். இரகு அதை ரூ. 1,980-க்கு வட்டஞ்செய்தார். உரிய நாளில், இரகு இராமுவுக்குப் போதுமான பணஞ் செலுத்த, இராமு அம் மாற்றுச் சீட்டை மதித்துப் பணஞ் செலுத்தினார். குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

**விடை**

**இரகு என்பவரின் ஏடுகள்**

**குறிப்பேடு**

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| மே 15 | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று | | 2,000 | |
| | இராமு க/கு | | | 2,000 |
| | (இராமு மீது மாற்றுச் சீட்டு எழுதுதல்) | | | |
| ,, | வங்கிக் க/கு பற்று | | 1,980 | |
| | வட்டக் க/கு பற்று | | 20 | |
| | பெறுதற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு | | | 2,000 |
| | (மாற்றுச்சீட்டை வட்டஞ்செய்தல்) | | | |
| ஜூலை 18 | இராமு க/கு பற்று | | 2,000 | |
| | ரொக்கக் க/கு | | | 2,000 |
| | (இராமு அந்த மாற்றுச் சீட்டிற்குப் பணம் செலுத்தும் வண்ணம் அவருக்குப் பணம் செலுத்தல்) | | | |
| | **குறிப்பு :** மாற்றுச் சீட்டின் முழுப் பயனையும் எழுதுநராகிய இரகுவே பெறுவதால், வட்டம் என்னும் செலவு முழுவதையும் அவரே ஏற்பதைக் கவனி. | | | |

## இராமு என்பவரின் ஏடுகள்

### குறிப்பேடு

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| மே 15 | இரகு க/கு பற்று செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு (இரகு எழுதிய 2 மாத மாற்றுச் சீட்டை ஏற்றல்) | | 2,000 | 2,000 |
| ,, | இரகு அந்த மாற்றுச் சீட்டை வட்டஞ் செய்வதற்கு இவருடைய ஏடுகளில் பதிவு ஏதுமில்லை. | | | |
| ஜுலை 18 | ரொக்கக் க/கு பற்று இரகு க/கு (உரிய காலத்தில் அந்த மாற்றுச்சீட்டை செலுத்தும் பொருட்டு இரகுவிடமிருந்து பணம் பெறுதல்) | | 2,000 | 2,000 |
| ,, | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு பற்று ரொக்கக் க/கு (உரிய காலத்தில் மாற்றுச்சீட்டிற்குப் பணஞ்செலுத்தல்) | | 2,000 | 2,000 |

**எடுத்துக்காட்டு 11**

1976 அக்டோபர் 3 ஆம் நாளன்று X என்பவர் Y என்பவர் மீது ஒரு மாத மாற்றுச்சீட்டு எழுதுகிறார். Y என்பவரின் ஏற்பைப்பெற்று அவர் (X) அதை ரூ. 990-க்கு வட்டஞ்செய்கிறார். உடன் அவர் அதில் பாதித் தொகையை Y என்பவருக்கு அனுப்புகிறார். உரிய நாளில் அவர் மீதித் தொகையை Y என்பவருக்குச் செலுத்த, பின்னவர் அந்த மாற்றுச்சீட்டிற்குப் பணஞ்செலுத்துகிறார். குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

**விடை:**

**X என்பவரின் ஏடுகள்**
**குறிப்பேடு**

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1976 | | | ரூ. | ரூ. |
| அக் 3 | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று | | 1,000 | |
| | Y க/கு | | | 1,000 |
| | (Y மீது எழுதிய மாற்றுச்சீட்டு) | | | |
| ,, | வங்கிக் க/கு பற்று | | 990 | |
| | வட்டக் க/கு பற்று | | 10 | |
| | பெறுதற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு | | | 1,000 |
| | (மாற்றுச்சீட்டை வட்டஞ்செய்தல்) | | | |
| ,, | Y க/கு பற்று | | 500 | |
| | ரொக்கக் க/கு | | | 495 |
| | வட்டக் க/கு | | | 5 |
| | (வட்டஞ்செய்து பெற்ற பணத்தில் பாதியை Y-க்கு அனுப்புவதும், வட்டத்தில் பாதியை Y ஏற்குமாறு செய்வதும்) | | | |
| நவ 6 | Y க/கு பற்று | | 500 | |
| | ரொக்கக் க/கு | | | 500 |
| | (உரிய நாளில் மாற்றுச் சீட்டைச் செலுத்தும் பொருட்டு மீதித் தொகையை அவருக்குச் செலுத்துதல் | | | |

## Y என்பவரின் ஏடுகள்

### குறிப்பேடு

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| 1976 அக் 3 | X க/கு பற்று | | 1,000 | |
| | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு | | | 1,000 |
| | (X எழுதிய மாற்றுச் சீட்டை ஏற்றல்) | | | |
| ,, | மாற்றுச்சீட்டை X என்பவர் வட்டஞ் செய்வதற்கு இவருடைய ஏடுகளில் பதிவு ஏதுமில்லை. | | | |
| ,, | ரொக்கக் க/கு பற்று | | 495 | |
| | வட்டக் க/கு பற்று | | 5 | |
| | X .. க/கு | | | 500 |
| | (மாற்றுச்சீட்டை வட்டஞ்செய்து பெறப் பட்டதில் பாதியை X என்பவரிடமிருந்து பெறுதல்) | | | |
| நவ 6 | ரொக்கக் க/கு பற்று | | 500 | |
| | X க/கு | | | 500 |
| | (மாற்றுச்சீட்டின் தொகையில் மீதிப் பாதி தொகையை X இட மிருந்து பெறுதல்) | | | |
| ,, | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு பற்று | | 1,000 | |
| | ரொக்கக் க/கு | | | 1,000 |
| | (உரிய காலத்தில் மாற்றுச்சீட்டிற்குப பணஞ் செலுத்துதல்) | | | |

**குறிப்பு:** இப் பணவசதி மாற்றுச்சீட்டின் பயனை X, Y ஆகிய இருபாலரும் சமமாகத் துய்ப்பதால், அதைச்சார்ந்த செலவாகிய வட்டத்தை இரு வரும் சமமாக ஏற்பதைக் கவனி.

**எடுத்துக்காட்டு 12**

இரு தரப்பாரின் பணவசதியைக் கருதியும், A என்பவர் B என்பவர் மீது 1977 பிப்ரவரி 1 ஆம் நாளன்று ரூ. 1,000-க்கு 3 மாத மாற்றுச்சீட்டு எழுதுகிறார். B அதை ஏற்று A என்பவருக்கு அனுப்புகிறார். A அதை ரூ. 950-க்கு வட்டஞ்செய்து, பெற்ற பணத்தில் பாதியை B-க்கு அனுப்புவதோடு, மீதிப் பாதியை உரிய நாளுக்கும் முன்னதாக அனுப்புவதாக ஒப்புக்கொள்கிறார். ஒப்புக் கொண்டவாறு உரிய நாளில் A என்பவர் பணம் அனுப்பத் தவறுகிறார். B என்பவர் வங்கியருக்குப் பணம் செலுத்தி விட்டு, உரிய தொகை, வட்டிக்காக ரூ. 5 ஆகிய மொத்தத் திற்கு A மீது புதிய இரு மாத மாற்றுச்சீட்டு எழுதுகிறார். இப் புதிய மாற்றுச்சீட்டு உரிய நாளில் செலுத்தப்படுகிறது. இருவர் ஏடுகளிலும் செய்த குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருவதோடு, B என்பவரின் ஏடுகளில் A என்பவரின் கணக்கைத் தயாரிக்க.

**A என்பவரின் ஏடுகள்**
**குறிப்பேடு**

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1977 | | | ரூ. | ரூ. |
| பிப் 1 | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று | | 1,000 | |
| | B க/கு | | | 1,000 |
| | (B மீது மாற்றுச்சீட்டு எழுதுதல்) | | | |
| | வங்கிக் க/கு பற்று | | 950 | |
| | வட்டக் க/கு பற்று | | 50 | |
| | பெறுதற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு | | | 1,000 |
| | (மாற்றுச்சீட்டை வட்டஞ்செய்தல்) | | | |
| ,, | B க/கு பற்று | | 500 | |
| | ரொக்கக் க/கு | | | 475 |
| | வட்டக் க/கு | | | 25 |
| | (வட்டஞ்செய்து பெற்ற பணத்தில் பாதியை B-க்கு அனுப்புதலும், வட்டத்தில் பாதியை அவர் ஏற்குமாறு செய்தலும்) | | | |

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| மே 4 | மாற்றுச்சீட்டிற்கு உரிய நாளில் B பணம் செலுத்துவதற்கு இவர் ஏடுகளில் பதிவு ஏதுமில்லை. | | | |
| .. | வட்டிக் க/கு பற்று | | 5 | |
| | B க/கு | | | 5 |
| | (கால நீட்டிப்பிற்காகக் கொடுக்க வேண்டிய வட்டி) | | | |
| .. | B க/கு பற்று | | 505 | |
| | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு | | | 505 |
| | (B-க்கு செலுத்தற்குரிய தொகையாகிய ரூ. 500-க்கும், வட்டிக்குமாக எழுதப்பட்ட மாற்றுச்சீட்டை ஏற்றல்) | | | |
| ஜூலை 7 | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு பற்று | | 505 | |
| | ரொக்கக் க/கு | | | 505 |
| | (உரிய நாளில் புதிய மாற்றுச்சீட்டிற்குப் பணம் செலுத்தல்) | | | |

## *B* என்பவரின் ஏடுகள்
## குறிப்பேடு

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1977 | | | ரூ. | ரூ. |
| ஏப் 1 | *A* க/கு பற்று<br>செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு க/கு<br>(*A* எழுதிய மாற்றுச் சீட்டை ஏற்றல்) | | 1,000 | 1,000 |
| ,, | *A* அதை வட்டஞ் செய்ததற்கு இவருடைய ஏடுகளில் பதிவு ஏதுமில்லை. | | | |
| ,, | ரொக்கக் க/கு பற்று<br>வட்டக் க/கு பற்று<br>*A* க/கு<br>(வட்டஞ்செய்து பெறப்பட்ட பணத்தில் பாதியைப் பெறுவதோடு வட்டச் செலவில் பாதியை ஏற்றல்) | | 475<br>25 | 500 |
| மே 4 | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு பற்று<br>ரொக்கக் க/கு<br>(மாற்றுச்சீட்டை உரிய நாளில் செலுத்துதல்) | | 1,000 | 1,000 |
| ,, | *A* க/கு பற்று<br>வட்டிக் க/கு<br>(கால நீட்டிப்புக்காகப் பெறுதற்குரிய வட்டி) | | 5 | 5 |

| தேதி | விவரம் | பே. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| .. | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று A க/கு (A என்பவர் மீது அவரிடமிருந்து பெற வேண்டிய தொகை ரூ. 500, வட்டி ரூ. 5 ஆகியவற்றிற்குப் புதிய மாற்றுச்சீட்டு எழுதுதல்) | | 505 | 505 |
| ஜுலை 7 | ரொக்கக் க/கு பற்று பெறுதற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு (புதிய மாற்றுச்சீட்டுக் குரிய தொகையை உரிய நாளில் பெறுதல்) | | 505 | 505 |

**A என்பவரின் கணக்கு**

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ. |
| 1977 பிப் 1 | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு | 1,000 | 1977 பிப் 1 | ரொக்கக் க/கு | 475 |
| | | | .. | வட்டக் க/கு | 25 |
| மே 4 | வட்டிக் க/கு | 5 | மே 4 | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுக்க/கு | 505 |
| | | 1,005 | | | 1,005 |

**எடுத்துக்காட்டு 13**

*1976 அக்டோபர் 1 ஆம் நாளன்று A என்பவர் B என்பவர் மீது ரூ. 800-க்கு ஒரு மாத மாற்றுச்சீட்டு எழுதினார்; அவ்வாறே அதே நாளில் அதே தொகைக்கு B என்பவரும் A மீது ஒரு மாத மாற்றுச்சீட்டு எழுதினார். இந்த இரு மாற்றுச் சீட்டுகளும் வட்டஞ் செய்யப்பட்டன. இவற்றை வட்டஞ்செய்த வங்கியர் ஒவ்வொன்றுக்கும் விதித்த வட்டம் ரூபாய் பத்து ஆகும். உரிய நாளன்று இவற்றின் ஏற்குநர் அவரவர் ஏற்ற மாற்றுச்சீட்டைச் செலுத்தினர். குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.*

**விடை :**

**A என்பவரின் ஏடுகள்**
**குறிப்பேடு**

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| *1976* | | | ரூ. | ரூ. |
| *அக் 1* | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று | | 800 | |
| | B க/கு | | | 800 |
| | (B மீது மாற்றுச் சீட்டு எழுதுதல்) | | | |
| ,, | வங்கிக் க/கு பற்று | | 790 | |
| | வட்டக் க/கு பற்று | | 10 | |
| | பெறுதற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு | | | 800 |
| | (B ஏற்ற மாற்றுச் சீட்டை வட்டஞ் செய்தல்) | | | |
| ,, | B க/கு பற்று | | 800 | |
| | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு | | | 800 |
| | (B எழுதிய மாற்றுச் சீட்டை ஏற்றல்) | | | |
| ,, | B எழுதி, A ஏற்ற மாற்றுச்சீட்டை B வட்டஞ் செய்ததற்கு இவருடைய (A இன்) ஏடுகளில் பதிவு ஏதுமில்லை) | | | |
| *நவ 4* | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு பற்று | | 800 | |
| | ரொக்கக் க/கு | | | 800 |
| | (A ஏற்ற மாற்றுச் சீட்டை அவர் செலுத்துதல்) | | | |

*B* என்பவரின் ஏடுகள்
குறிப்பேடு

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| 1976 அக் 1 | *A* க/கு பற்று<br>செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு<br>(*A* எழுதிய மாற்றுச் சீட்டை ஏற்றல்) | | 800 | 800 |
| ,, | *A* அந்த மாற்றுச் சீட்டை வட்டஞ்செய்வதற்கு இவருடைய ஏடுகளில் பதிவு ஏதுமில்லை. | | | |
| ,, | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று<br>*A* க/கு<br>(*A* மீது மாற்றுச்சீட்டு எழுதுதல்) | | 800 | 800 |
| ,, | வங்கிக் க/கு பற்று<br>வட்டக் க/கு பற்று<br>பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு க/கு<br>(*A* ஏற்ற மாற்றுச் சீட்டை வட்டஞ் செய்தல்) | | 790<br>10 | 800 |
| தவ 4 | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு பற்று<br>ரொக்கக் க/கு<br>(*A* எழுதி இவர் ஏற்ற மாற்றுச் சீட்டிற்குப் பணம் செலுத்துதல்) | | 800 | 800 |

**எடுத்துக்காட்டு 14**

இரு சாராரின் பணவசதி கருதி ஆனந்த் என்பவர் அனில் மீது சனவரி 1 ஆம் நாளன்று எழுதிய தேதியிலிருந்து 2 மாத காலத்தில் செலுத்தத்தக்க மாற்றுச்சீட்டை ரூ. 1,000-க்கு எழுதினார். ஆனந்த் அந்த மாற்றுச்சீட்டை ஆண்டுக்கு 6% வீதம் வட்டஞ்செய்து, அவ்வாறு பெற்ற பணத்தில் பாதியை அனில் என்பவருக்கு அனுப்புகிறார்.

அதே நாளில் அனில் என்பவர் ஆனந்த் மீது ரூ. 600-க்கு 2 மாத மாற்றுச்சீட்டு எழுதுகிறார். அதில் ஆனந்தின் ஏற்பைப் பெற்று, அதை ஆண்டுக்கு 6% வீதம் வட்டஞ் செய்து, அதன் மூலம் பெற்ற தொகையில் பாதியை ஆனந்துக்கு அனுப்புகிறார். மார்ச் 1 ஆம் நாளன்று அனில் நொடித்துப் போகவே, அவருடைய சொத்திலிருந்து ருபாய்க்கு 50 காசுகள் வீதம் ஏப்ரல் 15 ஆம் நாளன்று முதலாவதும் இறுதியாவதுமான பங்காதாயம் (Dividend) செலுத்தப் படுகிறது.

இரு தரப்பார் ஏடுகளிலும் குறிப்பேட்டுப் பதிவுகள் தருவதோடு, அவற்றில் தோன்றத்தக்க ஆள்சார் கணக்குகளையும் (Personal Accounts) காட்டிடுக.

**ஆனந்த் என்பவரின் ஏடுகள்**

**குறிப்பேடு**

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| சன 1 | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுக் க/கு பற்று | | 1,000 | |
| | அனில் க/கு .. | | | 1,000 |
| | (அனில் மீது மாற்றுச் சீட்டு எழுதுதல்) | | | |
| ,, | வங்கிக் க/கு பற்று | | 990 | |
| | வட்டக் க/கு பற்று | | 10 | |
| | பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு க/கு | | | 1,000 |
| | (அனில் ஏற்ற மாற்றுச் சீட்டை வட்டஞ் செய்தல்) | | | |
| ,, | அனில் க/கு பற்று | | 500 | |
| | ரொக்கக் க/கு | | | 495 |
| | வட்டக் க/கு | | | 5 |
| | (வட்டஞ்செய்து பெற்ற தொகையில் பாதியை அனிலுக்கு அனுப்புதல், வட்டத்தில் பாதியை அவர் ஏற்குமாறு செய்தல்) | | | |
| ,, | அனில் க/கு பற்று | | 600 | |
| | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு க/கு | | | 600 |
| | (அனில் எழுதிய மாற்றுச்சீட்டை ஏற்றல்) | | | |
| ,, | ரொக்கக் க/கு பற்று | | 297 | |
| | வட்டக் க/கு பற்று | | 3 | |
| | அனில் க/கு | | | 300 |
| | (அனில் வட்டஞ் செய்து பெற்ற தொகையில் பாதியை அவரிடமிருந்து பெறுதலும், வட்டத்தில் பாதியை ஏற்றலும்) | | | |

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| மார்ச் 1 | அனில் க/கு பற்று<br>வங்கி க/கு<br>(அனில் ஏற்ற மாற்றுச் சீட்டை அவர் அவமதித்ததாகப் பாவித்துச் செய்யப் படும் பதிவு) | | 1,000 | 1,000 |
| மார்ச் 4 | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு பற்று<br>ரொக்கக் க/கு<br>(இவர் ஏற்ற மாற்றுச் சீட்டிற்குப் பணம் செலுத்தல்) | | 600 | 600 |
| ஏப் 15 | ரொக்கக் க/கு பற்று<br>வாராக் கடன் க/கு பற்று<br>அனில் க/கு<br>(அனில் என்பவரிடமிருந்து வரவேண்டிய ரூ. 800ல் ரூபாய்க்கு 50 காசுகள் வீதம் பெற்றுக்கொண்டு, மீதியைப் போக்கெழுதுதல்)<br>குறிப்பைக் காண்க. | | 400<br>400 | 800 |

குறிப்பு : அனிலிடமிருந்து வரவேண்டிய தொகையைக் கணக்கிடல்

| | ரூ. |
|---|---|
| அனில் ஏற்ற மாற்றுச்சீட்டு குறித்து அவரிடமிருந்து வரவேண்டிய தொகை | 500 |
| அனில் எழுதிய மாற்றுச்சீட்டு குறித்து அவரிடமிருந்து வரவேண்டிய தொகை | 300 |
| | 800 |

இதை அனில் என்பவரின் பேரேட்டுக் கணக்கைத் தயாரித்தும் கண்டுபிடிக்கலாம் (பின்வருவதைக் காண்க).

**அனில் கணக்கு**

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ. |
| சன 1 | ரொக்கக் க/கு | 495 | சன 1 | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுக/கு | 1,000 |
| .. | வட்டக் க/கு | 5 | .. | ரொக்கக் க/கு | 297 |
| .. | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுக/கு | 600 | .. | வட்டக்க/கு | 3 |
| மார்ச் 1 | வங்கிக் க/கு | 1,000 | ஏப் 15 | ரொக்கக் க/கு | 400 |
| | | | .. | வாராக் கடன் க/கு | 400 |
| | | 2,100 | | | 2,100 |

### அனில் என்பவரின் ஏடுகள்

### குறிப்பேடு

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| சன 1 | ஆனந்த் க/கு பற்று | | 1,000 | |
| | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு | | | 1,000 |
| | (ஆனந்த் எழுதிய மாற்றுச்சீட்டை ஏற்றல்) | | | |
| ,, | ரொக்கக் க/கு பற்று | | 495 | |
| | வட்டக் க/கு பற்று | | 5 | |
| | ஆனந்த் க/கு | | | 500 |
| | (ஆனந்த் வட்டஞ் செய்து பெற்ற தொகையில் பாதியை அவரிடமிருந்து பெறுதல்) | | | |
| ,, | பெறுதற்குரிய மாற்றுச்சீட்டுக்குக் க/கு பற்று | | 600 | |
| | ஆனந்த் க/கு | | | 600 |
| | (ஆனந்த் மீது மாற்றுச் சீட்டு எழுதுதல்) | | | |
| ,, | வங்கிக் க/கு பற்று | | 594 | |
| | வட்டக் க/கு பற்று | | 6 | |
| | பெறுதற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு | | | 600 |
| | (ஆனந்த் ஏற்ற மாற்றுச்சீட்டை வட்டஞ் செய்தல்) | | | |
| ,, | ஆனந்த் க/கு பற்று | | 300 | |
| | ரொக்கக் க/கு | | | 297 |
| | வட்டக் க/கு | | | 3 |
| | (வட்டஞ் செய்து பெற்ற தொகையில் பாதியை ஆனந்துக்கு அனுப்புதல்) | | | |

| தேதி | விவரம் | பே. ப.எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| மார்ச் 1 | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு பற்று | | ரூ. 1,000 | ரூ. |
| | ஆனந்த் க/கு | | | 1,000 |
| | (ஆனந்த் எழுதி இவர் ஏற்ற மாற்றுச்சீட்டை இவரது நொடிப்பு நிலை காரணமாக அவமதித்ததாகப் பாவித்தல்) | | | |
| ஏப் 15 | ஆனந்த் க/கு பற்று | | 800 | |
| | ரொக்கக் க/கு | | | 400 |
| | பற்றாக்குறைக் க/கு | | | 400 |
| | (ஆனந்துக்குத் தர வேண்டிய ரூ.800-ல் ரூபாய்க்கு 50 காசுகள் தந்தது போக, வரவியலாத எஞ்சிய பகுதியைப் பற்றாக்குறைக் கணக்கிற்கு மாற்றல்) | | | |

**ஆனந்த் க/கு**

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ. |
| சன 1 | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக்க/கு | 1,000 | சன 1 | ரொக்கக் க/கு | 495 |
| ,, | ரொக்கக் க/கு | 297 | ,, | வட்டக் க/கு | 5 |
| ,, | வட்டக் க/கு | 3 | ,, | பெறுதற்குரிய மாற்றுச்சீட்டுக்க/கு | 600 |
| ஏப் 15 | ரொக்கக் க/கு | 400 | மார்ச் 1 | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக்க/கு | 1,000 |
| | பற்றாக்குறைக் க/கு | 400 | | | |
| | | 2,100 | | | 2,100 |

**வினாக்கள்**

(1) (i) கோடிட்ட இடத்தை நிரப்புக :

(அ) மாற்றுச் சீட்டைச் சார்ந்த தரப்பார்———— ஆவர்.

(ஆ) ஏற்புக்குப் பிறகு மாற்றுச் சீட்டின் எழுதப் பெறுநர் அதன்————என அழைக்கப் படுகிறார்.

(இ) தவணை மாற்றுச்சீட்டுகளுக்கு அனுமதிக்கப் படும் கருணை நாள்கள்————ஆகும்.

(ii) பின்வருவன ஒவ்வொன்றிற்கும் அ, ஆ, அல்லது இ எனக் குறிப்பிடுவதன் மூலம் அதன் சரியான விடையைச் சுட்டிக்காட்டுக:

(1) ஜவஹர் ஏற்ற மாற்றுச்சீட்டை இரமேஷ் என்பவர் நமக்கு மேலெழுதிக் கொடுத்துள்ள நிலையில் அது அவமதிக்கப்பட்டால், நாம் பற்று வைக்க வேண்டிய கணக்கு

(அ) ஜவஹர் க/கு (ஆ) இரமேஷ் க/கு (இ) பெறுதற்குரிய மாற்றுச்சீட்டுக் க/கு. ( )

(2) 1977 சனவரி 1 ஆம் நாள் எழுதப்பட்ட மூன்று மாத மாற்றுச்சீட்டு செலுத்தற் குரியதாகும் நாள்

(அ) 1977 ஏப்ரல் 3 (ஆ) 1977 ஏப்ரல் 4

(இ) 1977 ஏப்ரல் 5 ( )

(2) நாதன் என்பவர் மணி மீது ரூ. 2,500க்கு மாற்றுச் சீட்டு எழுத, அதை மணி ஏற்கிறார். பின்வரும் ஒவ்வொரு சூழ்நிலையிலும் இந்த இருவரது ஏடுகளில் செய்ய வேண்டிய பதிவுகளைக் காட்டுக.

(அ) நாதன் அந்த மாற்றுச்சீட்டை அதன் செலுத் தற்குரிய நாள்வரை வைத்திருந்து அதற்குப் பணம் பெறுகிறார்.

(ஆ) நாதன் அந்த மாற்றுச் சீட்டை அவரது வங்கி யரிடம் ரூ. 2,400க்கு வட்டஞ் செய்கிறார்; செலுத்தற்குரிய நாளன்று அது அவமதிக்கப் படுகிறது.

(இ) மகேஷ் என்பவருக்குத் தரவேண்டிய கடனைத் தீர்க்கும் வகையில் நாதன் அந்த மாற்றுச் சீட்டை மகேஷுக்கு மேலெழுதிக் கொடுக்க. அது செலுத்தற்குரிய (முதிர்வு பெற்ற) நாளன்று செலுத்தப் படுகிறது.

(ஈ) நாதன் அந்த மாற்றுச்சீட்டை, அவரது வங்கியரிடம் வசூலிக்கும்பொருட்டு அனுப்ப, வங்கி அதை உரிய நாளன்று வசூலிக்கிறது.

(3) ரூ. 800க்கு லால் என்பவர் எழுதிய மாற்றுச்சீட்டை கிஷோர் என்பவர் ஏற்றுவிட்டு, உரிய நாளன்று அதற்குப் பணம் செலுத்தவியலாத நிலையில் இருக்கிறார். அப்பொழுது அவர் லால் என்பவரை ரொக்கமாக ரூ. 400ஐப் பெற்றுக் கொண்டு அந்த மாற்றுச் சீட்டை இரத்து செய்யுமாறும், மீதித் தொகைக்கும் ரூ. 10 வட்டிக்குமாகப் புதிய மாற்றுச் சீட்டு ஒன்றை எழுதிக் கொள்ளுமாறும் கேட்டுக் கொள்கிறார். லால் அதற்கு உடன்படுகிறார். உரிய நாளன்று இப் புதிய மாற்றுச் சீட்டுச் செலுத்தப்படுகிறது.

கிஷோர், லால் என்பவர்களது ஏடுகளில் இவற்றிற்குரிய பதிவுகளைச் செய்க.

(4) 1975 செப்டம்பர 1ஆம் நாளன்று பிரகாஷ் என்பவர் பிரதாப் என்பவருக்கு ரூ. 8,000க்குச் சரக்கு விற்றார். அதற்காக அவர் அத் தொகைக்கு பிரதாப் மீது, எழுதிய தேதியிலிருந்து 3 மாதத்தில் செலுத்தத் தக்க மாற்றுச்சீட்டு எழுதினார். பிரதாப்பின் ஏற்பைப் பெற்று, பிரகாஷ் அதை ஆண்டுக்கு 5% வீதம் வட்டஞ் செய்தார். செலுத்தற்குரிய நாளில் அது (மாற்றுச்சீட்டு) அவமதிக்கப்பட்டதன் காரணமாக அதைச் சமர்ப்பித்த வங்கியர் குறிக்கைக் கட்டணமாக ரூ. 50 செலுத்தினார். பிரதாப் என்பவர் குறிக்கைக்கட்டணம், வட்டி ஆகியவையும் சேர்ந்த மொத்தத் தொகையான ரூ. 8,150க்கு (பிரகாஷ் என்பவரால்) எழுதப்பட்ட புதிய 2 மாத மாற்றுச் சீட்டை 1975 திசம்பர் 5 ஆம் நாளன்று ஏற்றார். இந்த மாற்றுச் சீட்டு உரிய நாளில் செலுத்தப்பட்டது.

பிரகாஷ், பிரதாப் என்பவர்களது ஏடுகளில் இவற்றிற்குரிய பதிவுகளைச் செய்க.

(5) A என்பவர் B என்பவருக்கு ரூ. 500க்குச் சரக்கு விற்று, அத்தொகைக்கு B மீது மாற்றுச்சீட்டு எழுதினார். B அதை ஏற்று A என்பவருக்குத் திருப்பியனுப்பினார். A என்பவர் அதை அவர் C என்பவருக்குத் தரவேண்டிய கடனைத் தீர்க்கும் பொருட்டு C என்பவருக்கு மேலெழுதிக் கொடுத்தார். C என்பவர் அதை அவரது வங்கியரிடம் ரூ. 490க்கு வட்டஞ் செய்தார்.

பின்வரும் சூழ்நிலைகளில் இவற்றிற்கு A, B, C என்போரது ஏடுகளில் செய்யத் தக்க பதிவுகளைக் காண்பிக்க :

(அ) அந்த மாற்றுச்சீட்டு உரிய நாளில் செலுத்தப் படுகிறது.

(ஆ) அந்த மாற்றுச்சீட்டு உரிய நாளில் அவமதிக்கப் படுவதன் காரணமாக A என்பவர் அதற்குப் பணம் செலுத்துகிறார்.

(6) 1977 மார்ச் 1ஆம் நாளன்று குமார் என்பவர், அப்துல் என்பவருக்கு ரூ. 2,000க்குச் சரக்கு விற்று, அவர் மீது அத் தொகைக்கு 2 மாதத்திற்கு மாற்றுச் சீட்டு எழுதுகிறார். அப்துல் அதை ஏற்று, குமாருக்குத் திருப்பியனுப்புகிறார். குமார் அதை வங்கியிடம் ஆண்டுக்கு 6% வீதம் வட்டஞ் செய்கிறார். அப்துல் நொடித்துப்போவதன் காரணமாக, உரிய நாளன்று அம் மாற்றுச்சீட்டு அவமதிக்கப்படுகிறது. வங்கி அப்பொழுது குறிக்கைக் கட்டணமாக ரூ. 10 செலுத்துகிறது. 1977 மே 15 ஆம் நாளன்று குமார் என்பவர் முதலாவதும் இறுதியானதுமாக ரூபாய்க்கு 10 காசுகள் வீதம் பங்காதாயம் பெறுகிறார்.

குமார், அப்துல் என்போரின் ஏடுகளில் தோன்றத் தக்க குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

(7) 1976 செப்டம்பர் 15 ஆம் நாளன்று X என்பவர் Y என்பவருக்கு ரூ. 1,000க்குச் சரக்குகளை 5% வியாபார (வாணிக) வட்டத்திற்கு விற்றார். உரிய தொகைக்கு அவர் Y மீது மாற்றுச் சீட்டு எழுதி, அதை வங்கியிடம் ரூ. 925க்கு வட்டஞ்செய்தார். உரிய நாளன்று அந்த மாற்றுச்சீட்டு அவமதிக்கப் பட்டது. X என்பவர் வட்டஞ் செய்த வங்கிக்குப்

பணம் செலுத்தி விட்டு, ஒரு மாத வட்டிக்குமாகச் சேர்த்து மொத்தம் ரூ. 975க்கு Y மீது புதிய மாற்றுச் சீட்டு எழுதினார். உரிய நாளுக்கு முன்னதாக இப்புதிய மாற்றுச்சீட்டு ஐந்து ரூபாய் தள்ளுபடிக்கு (Rebate) ஒய்வுபடுத்தப் பட்டது.

X, Y என்போரது ஏடுகளில் குறிப்பேட்டுப் பதிவுகள் செய்து, X என்பவரின் ஏடுகளில் தோன்றும் Y என்பவரின் கணக்கைக் காட்டுக.

(8) சனவரி 1 ஆம் நாளன்று இரகு என்பவர் அசோக் என்பவருக்கு ரூ. 9,000க்குச் சரக்கு விற்று, அந்தக் கணக்கைத் தீர்க்கப்பெறும் முகத்தான் ஒவ்வொன்றும் ரூ. 3,000 என மூன்று மாற்றுச்சீட்டுகளை அசோக் மீது எழுதினார். அந்த மாற்றுச் சீட்டுகள் முறையே 2 மாதம், 3 மாதம், 4 மாதம், கழித்துச் செலுத்தத் தக்கவை. முதலாவது மாற்றுச்சீட்டை அவர் (இரகு) 60 ரூபாய் வட்டத்திற்கு வட்டஞ்செய்தார்.

ஏனைய மாற்றுச் சீட்டுகளை அவரிடமே வைத்திருந்தார். முதிர்வு நாளில் (உரிய நாளில்) முதலிரண்டு மாற்றுச் சீட்டுகள் செலுத்தப்பட்டன. மூன்றாவது மாற்றுச்சீட்டு செலுத்த உரியதான பொழுது, தன்னால் செலுத்த வியலாத நிலையில் அசோக் என்பவர் இரகுவை அணுகி அந்த மாற்றுச்சீட்டை இரத்து செய்து விட்டு, வட்டியாக, ரூபாய் 40 ரொக்கம் பெற்றுக் கொண்டு, உரிய தொகைக்குப் புதியதாக ஒரு மாத மாற்றுச்சீட்டு வரையுமாறு கேட்டுக் கொண்டார். இரகு இதற்கு உடன்பட்டுப் புதிய மாற்றுச்சீட்டு எழுதினார்.

இரகு, அசோக் என்போரது ஏடுகளில் செய்ய வேண்டிய குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

(9) இரு சாராரது பணவசதி கருதி, A என்பவர் B என்பவர் மீது ரூ. 1,000க்கு மூன்று மாத மாற்றுச் சீட்டு எழுதுகிறார். அதில் B என்பவரது ஏற்பைப் பெற்று A அதை ஆண்டுக்கு 4% வீதம் அவரது வங்கியரிடம் வட்டஞ்செய்து பெற்ற பணத்தில் பாதியை B என்பவருக்கு அனுப்புகிறார். மாற்றுச்சீட்டின் உரிய நாளுக்கும் முன்னதாக A என்பவர் Bக்கு ரூ. 500 அனுப்புகிறார். உரிய நாளில் B அந்த மாற்றுச்சீட்டுக்குப் பணம் செலுத்துகிறார்.

இரு தரப்பார் ஏடுகளிலும் குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

(10) 1969 அக்டோபர் 1ஆம் நாள் *A* என்பவர் *B* மீது ரூ. 700க்கு இரண்டு மாத மாற்றுச்சீட்டு எழுதினார். அவ்வாறே அதே தேதியில் *B* என்பவரும் *A* மீது அதே தொகைக்கு 2 மாத மாற்றுச் சீட்டு எழுதினார். இந்த இரு மாற்றுச் சீட்டுகளும் வட்டஞ் செய்யப்பட்டன. ஒவ்வொன்றிற்கும் அந்தந்த வங்கி விதித்த வட்டம் ரூ. 8 ஆகும். உரிய நாளில் அவற்றின் ஏற்குநர், அவரவர் ஏற்ற மாற்றுச் சீட்டுக்குப் பணம் செலுத்தினர்.

இரு தரப்பார் ஏடுகளிலும் குறிப்பேட்டுப் பதிவுகள் தருக.

(11) 1963 மார்ச் 1 ஆம் நாளன்று, ஜேம்ஸ் என்பவர் ஜான் என்பவர்மீது ரூ. 3,000க்கு மூன்று மாத மாற்றுச்சீட்டு எழுதி, அதை ரூ. 2,950க்கு வட்டஞ்செய்து பெற்ற பணத்தில் பாதியை ஜானுக்கு அனுப்பினார். அதே நாளில் ஜான் என்பவரும் ஜேம்ஸ் மீது ரூ. 2,000க்கு மூன்று மாத மாற்றுச்சீட்டு எழுதி, அதை ரூ 1,970க்கு வட்டஞ் செய்து, பெற்ற பணத்தில் பாதியை ஜேம்ஸ்க்கு அனுப்பினார். உரிய நாளில் ஜேம்ஸ் அவர் ஏற்ற மாற்றுச்சீட்டுக்குப் பணம் செலுத்திவிட்டார். ஆனால் நொடித்துப்போனதன் காரணமாக ஜான் அவர் ஏற்ற மாற்றுச் சீட்டுக்குப் பணம் செலுத்த இயலவில்லை. ஜான் என்பவரின் சொத்திலிருந்து முதலாவதும் இறுதியானதுமான பங்காதாயமாக ரூபாய்க்கு 50 காசுகள் வீதம் ஜேம்ஸ் பெற்றார்.

இரு தரப்பார் ஏடுகளிலும் குறிப்பேட்டுப் பதிவுகள் தந்து, ஜேம்ஸ் என்பவரின் ஏடுகளில் தோன்றத்தக்க ஜான் என்பவரின் கணக்கைக் காட்டுக.

அத்தியாயம் 17

# பிழை திருத்தம்

இந்த அத்தியாயத்தில் 'பிழை' என்னும் சொல் கணக்கு ஏடுகளை எழுதும்பொழுது ஏற்படத்தக்க பிழைகளைக் குறிக்கும். எவ்வளவு கவனமாக நாம் வாணிக நடவடிக்கைகளைக் கணக்கு ஏடுகளில் பதிவு செய்தாலும், பிழைகள் ஏற்படுவதை நாம் முற்றும் தவிர்க்க வியலாது—காரணம் மனிதன் செய்யும் செயலிலே, பிழைகள் புகுவது இயல்பு. மூலப் பதிவேடுகள் (Books of Original Entry) எனச் சொல்லப் படும் துணைப் பதிவேடுகளில் (Subsidiary Books) பதிவு செய்யும் தொடக்க நிலையிலேயே பிழைகள் ஏற்படலாம் அல்லது அவற்றிலிருந்து பேரேடுகளுக்கு எடுத்தெழுதும் நிலையிலும் பிழைகள் புகலாம், அல்லது இருப்பாய்வைத் தயாரிக்கும் நிலையிலும் பிழைகள் செய்யப்படலாம். பிழைகளின் தன்மைக்கேற்ப அவை இருப்பாய்வின் சமன்பாட்டைப் பாதிக்கலாம், சில பிழைகள் கணக்குப் பதிவியலைச் சார்ந்த அடிப்படைத் தத்துவங்களை மீறுவதாக அமையலாம். எல்லாப் பிழைகளுமே பேரேட்டுக் கணக்குகளைப் பிழை படச் செய்யும் இயல்புடையவை.

### பிழை வகைகள்

கணக்குப் பதிவேடுகளில் ஏற்படும் பிழைகளை இரு வேறு அடிப்படைகளில் பாகுபாடு செய்யலாம். ஓர் அடிப் படை, பிழைகளின் **இயல்பைக்** கொண்டு அவற்றைப் பாகுபாடு செய்தல், மற்றோர் அடிப்படை, பிழைகளின் **விளைவைக்** கொண்டு அவற்றைப் பாகுபாடு செய்யலாம்.

### இயல்பு அடிப்படையில் பிழைகளைப் பாகுபடுத்தல்

பிழைகளின் இயல்பு அடிப்படையில் அவற்றை இவ்வாறு பாகுப்படுத்தலாம்.

**(அ) விடு பிழைகள்** (Errors of Omission)

வாணிக நடவடிக்கைகளைப் பதிவு செய்யாமல் அறவே விட்டுவிடுவது அதாவது முழுவிடு பிழை— (Complete Omission) அவற்றின் ஓர் அம்சத்தைப் பதிவு செய்துவிட்டு மறு அம்சத்தைப் பதிவு செய்யாமல் விட்டு விடுவது (பகுதி-விடு பிழை—Partial Omission); ஒரு கணக்கின் இருப்பை

இருப்பாய்வில் சேர்க்காமல் விட்டுவிடுவது (பகுதி-விடு பிழை) ஆகியவை இந்த வகையைச் சாரும்.

'அழகு என்பவருக்கு ரூ. 5,000க்குச் சரக்கு விற்கப் பட்டது' என்னும் நடவடிக்கையை விற்பனை ஏட்டில் (Sales Book) பதிவு செய்யாமல் அறவே விடுபடுவதை **முழு-விடு பிழைக்கு** எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

மாறாக, அந்த நடவடிக்கையை விற்பனை ஏட்டில் பதிவு செய்து விட்டு அழகு என்பவரின் பேரேட்டுக் கணக்கில் பற்று வைக்காமல் விட்டுவிடுவது **பகுதி-விடு பிழை**யாகும்.

முழு-விடு பிழைகள் இருப்பாய்வைப் பாதிக்கமாட்டா. எனவே இருப்பாய்வு இப் பிழைகளை வெளிப்படுத்தாது. பகுதி-விடு பிழைகள் இருப்பாய்வைப் பாதிப்பவை; எனவே இருப்பாய்வு இவற்றை வெளிப்படுத்தும் (Disclose).

(ஆ) **செய் பிழைகள்:** (Errors of Commission): கணக்கு ஏடுகளில் நடவடிக்கைகளைப் பதியும் பொழுதோ, எடுத்தெழுதும் பொழுதோ, கணக்குகளை இருப்புக் கட்டும் பொழுதோ செய்யப்படும் பிழைகளைச் **செய் பிழை** எனக் கூறுகிறோம். பின்வருவன செய் பிழைகளாம்:

(i) **தவறான துணைப் பதிவேட்டில் பதிதல்:** விற்பனை ஏட்டில் பதிய வேண்டியதைக் கொள்முதல் திருப்ப ஏட்டில் (Purchase Returns Book) பதிவதை ஈண்டு எடுத்துக் காட்டாகக் கூறலாம். இப் பிழைகள் இருப்பாய்வைப் பாதிக்கமாட்டா. எனவே இருப்பாய்வு இவற்றை வெளிப்படுத்தாது.

(ii) **தக்க துணைப் பதிவேட்டில் தவறாகப் பதிதல்:** 'அன்பு' என்பவருக்கு ரூ. 1,000க்குச் சரக்கு விற்றதை விற்பனை ஏட்டில் 'பண்பு' என்பவருக்கு விற்கப்பட்டதாகப் பதிதல். அதே நடவடிக்கையை அன்பு பெயரிலேயே ரூ. 100க்கு விற்றதாக அந்த ஏட்டில் பதிதலும் இத்தகைய பிழைக்கு மற்றொரு எடுத்துக்காட்டாகும். இவை இருப்பாய்வைப் பாதிக்கமாட்டா. எனவே இருப்பாய்வு இவற்றை வெளிப் படுத்தாது.

(iii) **தவறான கணக்கில் எடுத்தெழுதுதல்: (Posting to a Wrong Account)** துணைப் பதிவேடுகளிலிருந்து நடவடிக்கை களுக்குரிய பதிவை எடுத்தெழுதும் பொழுது ஒரு கணக்கிற்கு உடனடியாக எடுத்தெழுதவேண்டும்; மறு கணக்கிற்கு ஒவ் வொரு மாத இறுதியிலும் அந்த மாத மொத்தத் தொகையைக் கொண்டு எடுத்தெழுத வேண்டும் எனத் தொடக்க அத்தியா

யங்களில் கண்டோம். இவ்வாறு எடுத்தெழுதும் பொழுது தவறான கணக்கில் எடுத்தெழுதி விடுதல் செய் பிழையாகும்.

எடுத்துக்காட்டாக 'அறிவு' என்பவரிடமிருந்து ரூ. 6,000க்குச் சரக்கு கொள்முதல் செய்த நடவடிக்கை குறித்து, கொள்முதல் ஏட்டிலிருந்து அறிவு என்பவரின் கணக்கில் எடுத்தெழுதுவதற்கு (வரவுவைப்பதற்கு) மாறாக, 'அமுதம்' என்பவரின் கணக்கில் எடுத்தெழுதுதல் (வரவு வைத்தல்) இந்த வகையைச் சார்ந்த பிழையாகும்.

தவறான கணக்கிற்கு எடுத்தெழுதப்பட்ட பிழை எனச் சொல்லும்பொழுது எடுத்தெழுதப்பட்ட கணக்குதான் தவறானதேயொழிய மற்றவையெல்லாம் (அதாவது கணக்கின் மருங்கு—Side—, தொகை ஏனையவை) சரியாகச் செய்யப்பட்டன எனக்கொள்ள வேண்டும். இப் பிழைகளும் இருப்பாய்வைப் பாதிக்கமாட்டா. எனவே இருப்பாய்வு இவற்றை வெளிப்படுத்தாது

(iv) (சரியான) **கணக்கின் தவறான பகுதியில் (மருங்கில்) எடுத்தெழுதுதல்: (Posting to the Wrong Side of an account):** துணைப் பதிவேடுகளிலிருந்து பேரேட்டுக் கணக்குகளில் எடுத்தெழுதும்பொழுது அக்கணக்குகளின் சரியான மருங்குகளில் (பகுதிகளில்) (Side i.e., Debit side, Credit side) எழுதாமல், தவறான மருங்குகளில் (பகுதிகளில்) எடுத்தெழுதுவதால் எழும் பிழைகளாகும் இவை.

எடுத்துக்காட்டாக, நாம் இராம் என்பவரிடமிருந்து கொள்முதல செய்த சரக்குகளில் ரூ. 500 பெறுமானமுள்ள ஒரு பகுதியைத் திருப்பியனுப்புங்கால், அதைக் கொள்முதல் திருப்ப ஏடு (Purchase Returns Book) என்னும் துணையேட்டில் பதிகிறோம். அங்கிருந்து ஆள்சார் பேரேட்டிலுள்ள இராம் கணக்கின் பற்றுப் பகுதியில் (மருங்கில்) எடுத்தெழுத வேண்டும் (அதாவது அக்கணக்கில் பற்று வைக்க வேண்டும்; மாறாக அக் கணக்கின் வரவு மருங்கில் (பகுதியில்) எடுத்தெழுதும் பொழுது இப் பிழை எற்படுகிறது. இத்தகைய பிழைகள் இருப்பாய்வைப் பாதிப்பவை. எனவே இருப்பாய்வு இவற்றை வெளிப்படுத்தும்.

(v) **தவறான தொகையை எடுத்தெழுதுதல்: (Posting of a Wrong Amount):** சரியான கணக்கின் சரியான மருங்கில் (பகுதியில்) எடுத்தெழுதும் பொழுது தொகையைத் தவறாக எழுதி விடுவதை இப் பிழை குறிக்கிறது. நமது வாடிக்கையரான இராவணன் என்பவரிடமிருந்து விற்பனைத் திருப்ப

மாக ரூ. 300 மதிப்புள்ள சரக்குகளைப் பெறும் பொழுது, அதை விற்பனைத் திருப்ப ஏட்டில் பதிந்து விட்டு அங்கிருந்து ஆள்சார் பேரேட்டிலுள்ள இராவணன் கணக்கில் ரூ. 300ஐ வரவுவைக்க வேண்டும். ரூ. 300 என எழுதாமல் ரூ. 30 என அங்கு எழுதுவதால் ஏற்படும் பிழையை இங்கு எடுத்துக் காட்டாகக் கூறலாம். இத்தகைய பிழைகள் இருப்பாய்வைப் பாதிப்பவை. எனவே இருப்பாய்வு இப் பிழைகளை வெளிப் படுத்தும்.

(vi) **தவறான கூட்டுப்புள்ளி (Wrong Casting) :** மாதந் தோறும் துணை ஏடுகளிலிருந்து அவ்வவற்றின் மொத்தத் தொகைகள் உரிய பேரேட்டுக் கணக்குகளில் எடுத்தெழுதப் படுவது நாம் அறிந்ததே. அதுபோலவே பேரேட்டுக் கணக்கு களை இருப்புக் கட்டும் பொழுது (Balancing), அவற்றின் பற்று, வரவு மருங்குகளின் (பகுதிகளின்) மொத்தங்களைக் கண்டு பிடிக்க வேண்டியதாக இருக்கிறது; இந்த மொத் தங்கள் தவறானவையாக இருப்பின், அக் கணக்குகளின் இருப்புகளும் தவறானவையாக ஆகிவிடுகின்றன. ஆக கூட்டுப் புள்ளிகளில் ஏற்படும் தவறுகள், உரிய கணக்குகளைப் பிழை படச்செய்து விடுகின்றன. இப்பிழைகள் இருப்பாய்வைப் பாதிப்பவை. எனவே இருப்பாய்வு இவற்றை வெளிப் படுத்தும்.

(vii) **மொத்தங்களைத் தூக்கி யெழுதும் பொழுது தவறுகள் ஏற்படுதல் (Wrong Carry-forward) :** கணக்கு ஏடுகளில் ஒரு பக்கத்தின் மொத்தத்தை அடுத்த பக்கத்திற்குத் தூக்கி யெழுதும் பொழுது ஏற்படும் தவறுகளை இது குறிக்கிறது. இப் பிழைகளும் இருப்பாய்வைப் பாதிப்பவை. எனவே இவற்றை இருப்பாய்வு வெளிப்படுத்தும்.

(இ) **விதிப்பிழைகள் (Errors of Principle) :** வருவாயினச் செலவுகளை (Revenue Expenditure) முதலினச் செலவுகளாகப் (Capital Expenditure) பதிவு செய்வது, முதலினச் செலவுகளை வருவாயினச் செலவுகளாகப் பதிவு செய்வது, முதலின வரவு களை (Capital Receipts) வருவாயின வரவுகளாகப் பதிவு செய்வது, வருவாயின வரவுகளை முதலின வரவுகளாகப் பதிவு செய்வது ஆகியவை **விதிப் பிழை**களாம்.

வாங்கிய அறைகலனைக் கொள்முதல் கணக்கில் பற்று வைப்பது, இயந்திரங்களை விற்கும் பொழுது விற்பனைக் கணக்கில் வரவு வைப்பது போன்றவை விதிப் பிழைகளுக்கு எடுத்துக் காட்டுகள் ஆகும்.

விதிப் பிழைகள் இருப்பாய்வைப் பாதிக்கமாட்டா. எனவே இருப்பாய்வு இவற்றை வெளிப்படுத்தாது. ஆயினும் அவை இலாப நட்டக் கணக்கையும் இருப்புநிலைக் குறிப்பையும் பழுதுபடச் செய்யும்.

நமது பணியாளருக்குச் செலுத்திய சம்பளத்தை அவருடைய கணக்கில் பற்று வைப்பது, உரிமையரின் எடுப்புகளைச் (Drawing) செலவுகளாகக் காண்பிப்பது, இயந்திரங்களை நிறுவுவதற்குச் (Installation) செலுத்திய கூலியைக் கூலிக் கணக்கில் பற்றுவைப்பது ஆகியவும் விதிப் பிழைகளாம்.

(ஈ) **ஈடுசெய் பிழைகள் (Compensating Errors):** சில பிழைகள் ஒன்றுக்கொன்று ஈடு செய்வனவாக அமையும் நிலையில் அவற்றை **ஈடுசெய் பிழைகள்** என அழைக்கிறோம்.

எடுத்துக்காட்டாக, எடுத்தெழுதுதலில் நேர்ந்த தவறுகள் காரணமாக, விற்பனைக் கணக்கில் ரூ. 500 மிகு-வரவாகவும் (Excess Credit), அன்பு, அருள் என்போரது கணக்குகளில் முறையே ரூ. 350, ரூ. 150 மிகு-பற்றாகவும் ஏற்பட்டுள்ள நிலையில், ஒரு மிகு-வரவை இரு மிகு-பற்றுகள் ஈடு செய்கின்றன. இந்த மூன்று பிழைகளையும் மொத்தமாகச் சொல்லும்பொழுது **ஈடுசெய் பிழைகள்** என்கிறோம்.

இவைபோலவே, ஒரு மிகு-வரவுப் பிழையை ஒரு அல்லது இரு குறை-வரவு (Short Credit) பிழைகள் ஈடு செய்யலாம். அவ்வாறே ஒரு மிகு-பற்றுப் பிழையை, ஒரு அல்லது இரு குறை-பற்றுப் பிழைகள் ஈடு செய்வனவாக அமையலாம். ஈடு செய் பிழைகள் இருப்பாய்வைப் பாதிப்பதில்லை. எனவே இருப்பாய்வு இப் பிழைகளை வெளிப்படுத்துவதில்லை.

> **குறிப்பு:** விதிப் பிழைகளும் ஈடு செய் பிழைகளும் 'செய் பிழைகள்' எனும் பெரும் பிரிவைச் சார்ந்தனவையே.

### விளைவு அடிப்படையில் பிழைகளைப் பாகுபடுத்தல்

பிழைகளினால் ஏற்படும் விளைவுகளைத் கொண்டு பார்த்தால் அவற்றை மேலும் இரு வேறு விதமாகப் பாகுபாடு செய்யலாம்.

### விளைவு அடிப்படையில் முதலாவது பாகுபாடு

விளைவுகளை அடிப்படையாகக் கொண்டு, (i) இருப்பாய்வைப் பாதிக்கும் பிழைகள் (ii) இருப்பாய்வைப் பாதிக்காப் பிழைகள் எனப் பாகுபாடு செய்யலாம்.

இயல்பு அடிப்படையில் முன்னர் பிழைகளைப் பாகு படுத்தும் பொழுதே, ஒவ்வொரு வகைப் பிழையைப் பற்றிக் கூறும் பொழுதும் அது இருப்பாய்வைப் பாதிக்குமா, பாதிக்காதா எனச் சொல்லப்பட்டிருக்கிறது. அவற்றைத் தொகுத்தால், இருப்பாய்வைப் பாதிக்கும் பிழைகள், இருப்பாய்வைப் பாதிக்காத பிழைகள் இவற்றைத் தனித்தனியே பெறலாம்.

## விளைவு அடிப்படையின் இரண்டாவது பாகுபாடு

விளைவு அடிப்படையில் பிழைகளை வேறு விதமாகவும் பாகுபாடு செய்யலாம். ஒரு கணக்கைப் பாதிக்கும் பிழைகள், இரு கணக்குகளைப் பாதிக்கும் பிழைகள் என்பதே அப்பாகுபாடு. சில பிழைகள் ஒவ்வொன்றும் ஒரு கணக்கையே பாதிப்பவையாக இருக்கும். மாறாக, வேறு சில பிழைகள் ஒவ்வொன்றும் இரு கணக்குகளைப் பாதிப்பவையாக அமைந்திருக்கும்.

**ஒரு கணக்கைப் பாதிக்கும் பிழைகளாவன:**

(அ) **பகுதி–விடு பிழை** ஒரு நடவடிக்கையின் ஓர் அம்சத்தை ஒரு கணக்கில் எடுத்தெழுதிவிட்டு, மறு அம்சத்தை மற்றோர் கணக்கில் எடுத்தெழுதாமல் விட்டுவிடுதல், அதுபோலவே பேரேடுகளிலிருந்து ஒரு கணக்கின் இருப்பை இருப்பாய்வில் சேர்க்காமல் விட்டுவிடுதலும் பகுதி-விடு பிழையாகும்.

(ஆ) கணக்கின் தவறான மருங்கில் (பகுதியில்) எடுத்தெழுதுதல்.

(இ) தவறான தொகையை எடுத்தெழுதுதல்.

(ஈ) தவறான தொகையைத் தவறான பகுதியில் எடுத்தெழுதுதல்.

(உ) தவறான கூட்டுப்புள்ளி.

(ஊ) மொத்தங்களைத் தூக்கியெழுதும் பொழுது ஏற்படும் தவறுகள்.

**இரு அல்லது அதற்கு மேற்பட்ட கணக்குகளைப் பாதிக்கும் பிழைகளாவன:**

(i) முழு - விடு பிழை

(ii) தவறான துணைப் பதிவேட்டில் பதிதல்

(iii) தக்க துணைப் பதிவேட்டில் தவறாகப் பதிதல்

(iv) தவறான கணக்கில் எடுத்தெழுதுதல்

(v) விதிப் பிழைகள்

(vi) ஈடுசெய் பிழைகள்

இந்த இரு வகையான பிழைகளை எவ்வாறு திருத்துவது எனப் பின்னர் காணும்பொழுது, தக்க எடுத்துக்காட்டுகளுடன் இப் பிழைகளைப் பற்றித் தெளிவாக அறிவோம்.

**பிழைகளைத் திருத்துதல்**

பிழைகளை இரு வழிகளில் திருத்தலாம். அவையாவன:

(i) **பிழையான பதிவுகளை அடித்தல் அல்லது அழித்து விடுதல்:** பிழையான பதிவுகளை பேனாகொண்டு அடித்து விட்டு அல்லது ரப்பர் கொண்டு அழித்துவிட்டு, அங்கு சரியான பதிவுகளைச் செய்வதை இது குறிக்கும். ஆனால் இது வரவேற்கத்தக்க வழியல்ல. இது மோசடிகளுக்கு இடம் கொடுப்பதோடல்லாமல், மற்றவர்கள் நமது ஏடுகளைப் பற்றி ஐயப்பாடு கொள்வதற்கும் வழி ஏற்படுத்திவிடும். மேலும், ஒரு பிழையைத் திருத்துவதற்குப் பல இடங்களில் அடிக்க வேண்டுவதாக இருப்பதால், இது ஏடுகளின் அழகைக் கெடுத்துவிடும். எனவே இது விரும்பத்தக்க வழியல்ல.

(ii) **தக்க திருத்தப் பதிவுகளைச் செய்து, பிழைகளை நீக்குதல்:** பிழைகளைத் திருத்துவதற்கு இதுவே சிறந்த முறையாகும். அனைத்து வகையான பிழைகளையும் இந்த முறையில் திருத்தலாம். இந்த முறையில் அமையும் பிழை திருத்தப் பதிவு, குறிப்பேட்டுப் பதிவாகவும் இருக்கலாம் அல்லது விளக்கக் குறிப்பாகவும் (Explanatory Note) இருக்கலாம். இரு கணக்கைப் பாதிக்கும் பிழைகள் குறிப்பேட்டுப் பதிவு மூலம் திருத்தப்படும். மாறாக, ஒரு கணக்கைப் பாதிக்கும் பிழைகள் விளக்கக் குறிப்பு மூலம் திருத்தப்படும். ஆனால் ஏடுகளில் அனாமத்துக் கணக்கு தோன்றும் நிலையில், இப் பிழைகளும் குறிப்பேட்டுப் பதிவு மூலமாகவே திருத்தப்படும்.

பிழை திருத்தப் பதிவின் அடிப்படை நோக்கம் விட்டுப் போன பதிவை அல்லது சரியான பதிவை இப்பொழுது செய்தலும், தவறான பதிவுக்கு நேர்மாறான பதிவைச் செய்து அதை இரத்துசெய்தலுமாகும்.

**பிழை திருத்தம் குறித்த செய்முறை**

பிழையைத் திருத்துவதற்குச் செய்யவேண்டுவன மூன்று:

(அ) கொடுக்கப்பட்டுள்ள நடவடிக்கைக்குச் சரியான பதிவு யாது என்பதை மனத்திற் கொள்க.

(ஆ) அந்த நடவடிக்கை எவ்வாறு பிழையாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது என்பதை உணர்க.

(இ) பிழையான பதிவைக் களைந்து, சரியான பதிவைக் கொண்டுவருவதற்கு என்ன செய்யவேண்டும் என்பதைக் கண்டுபிடி. இதுவே பிழை திருத்தப் பதிவாகும்.

**ஒரு கணக்கைப் பாதிக்கும் பிழைகளைத் திருத்துதல்**

**எடுத்துக்காட்டு 1:** (தவறான கூட்டுப்புள்ளி)

பின்வரும் பிழைகளைத் திருத்துக:

(i) கொள்முதல் ஏட்டை சனவரி மாத இறுதியில் கூட்டும்பொழுது, ரூ. 400 அதிகமாகக் கூட்டுப் புள்ளி போடப்பட்டது.

(ii) விற்பனை ஏடு ரூ. 150 குறைவாகக் கூட்டப் பட்டுள்ளது.

(iii) கொள்முதல் திருப்ப ஏடு ரூ. 75 அதிகமாகக் கூட்டப்பட்டுள்ளது.

(iv) விற்பனைத் திருப்ப ஏடு ரூ. 30 குறைவாகக் கூட்டப்பட்டுள்ளது.

**விடை:**

இப் பிழைகள் ஒவ்வொன்றும் ஒரு கணக்கைப் பாதிப்பவை ஆதலின், விளக்கக் குறிப்பு மூலம் இவற்றைத் திருத்த வேண்டும்.

| வரிசை எண் | செய்திருக்க வேண்டிய சரியான பதிவு | செய்யப்பட்ட தவறான பதிவு | திருத்தப் பதிவு |
|---|---|---|---|
| (1) | — | கொள்முதல் ஏடு ரூ. 400 அதிகமாகக் கூட்டப் பட்டிருப்பதால், கொள்முதல் கணக்கில் ரூ. 400 அதிகமாகப் பற்றுவைக்கப் பட்டிருக்கிறது. | கொள்முதல் கணக்கில் ரூ. 400 வரவு வைக்கப்பட வேண்டும். |
| (2) | — | விற்பனைக் கணக்கு ரூ. 150 குறைவாக வரவு வைக்கப்பட்டிருக் கிறது. | விற்பனைக் கணக்கில் ரூ. 150 வரவு வைக்க வேண் டும் (இது குறை-வரவை நிறைவு செய்யும்) |
| (3) | — | கொள்முதல் திருப்பக் கணக் கில் ரூ. 75 அதிகமாக வரவு வைக்கப்பட்டிருக் கிறது. | கொள்முதல் திருப்பக் கணக் கில் ரூ. 75 பற்று வைக்க வேண்டும். |
| (4) | — | விற்பனைத் திருப்பக் கணக் கில் ரூ. 30 குறைவாகப் பற்று வைக்கப் பட்டிருக்கிறது. | விற்பனைத் திருப்பக் கணக் கில் ரூ. 30 பற்று வைக்க வேண்டும் |

**குறிப்பு:** தேர்வுகளில் திருத்தப் பதிவுகளை மட்டும் எழுதினால் போதுமானது.

**எடுத்துக்காட்டு 2:** *(மொத்தங்களைத் தவறாகத் தூக்கி யெழுதுதல்)*

*பின்வரும் பிழைகளைத் திருத்துக:*

(i) கொள்முதல் ஏட்டின் ஒரு பக்க மொத்தமான ரூ. 596 அடுத்த பக்கத்திற்கு ரூ. 695 எனத் தூக்கியெழுதப்பட்டுள்ளது.

(ii) விற்பனை ஏட்டின் 15 ஆம் பக்க மொத்தமான ரூ. 484 அடுத்த பக்கத்திற்கு ரூ. 448 எனத் தூக்கியெழுதப்பட்டுள்ளது.

(iii) கொள்முதல் திருப்ப ஏட்டின் மொத்தமான ரூ. 1,120, ரூ. 1,220 எனத் தூக்கியெழுதப் பட்டுள்ளது.

(iv) விற்பனை ஏட்டின் மொத்தம் ரூ. 150 அதிக மாகத் தூக்கியெழுதப்பட்டுள்ளது.

(v) கொள்முதல் ஏட்டின் மொத்தம் ரூ. 10 குறை வாகத் தூக்கியெழுதப்பட்டுள்ளது.

விடை:

இப் பிழைகளும் ஒரு கணக்கைப் பாதிப்பவையாகும். ஏடுகளில் அனாமத்துக் கணக்கு இல்லாத நிலையில் இவை ஒவ்வொன்றையும் விளக்கக் குறிப்பு மூலமாகவே திருத்த வேண்டும்.

| வரிசை எண் | செய்திருக்க வேண்டிய சரியான பதிவு | செய்யப்பட்ட தவறான பதிவு | திருத்தப் பதிவு |
|---|---|---|---|
| (i) | கொள்முதல் கணக்கில் ரூ. 596 பற்று வைக்க வேண்டும். | கொள்முதல் கணக்கில் ரூ. 695 பற்று வைக்கப் பட்டுள்ளது. | கொள்முதல் கணக்கில் ரூ. 99 வரவு வைக்க. |
| (ii) | விற்பனைக் கணக்கில் ரூ. 484 வரவு வைக்க வேண்டும். | விற்பனைக் கணக்கில் ரூ. 448 வரவு வைக்கப் பட்டுள்ளது. | விற்பனைக் கணக்கில் மேலும் ரூ. 36 வரவு வைக்க. |
| (iii) | கொள்முதல் திருப்பக் கணக்கில் ரூ. 1,120 வரவு வைக்க வேண்டும். | கொள்முதல் திருப்பக் கணக்கில் ரூ. 1,220 வரவு வைக்கப் பட்டுள்ளது. | கொள்முதல் திருப்பக் கணக்கில் ரூ. 100 பற்றுவைக்க. |
| (iv) | — | விற்பனைக் கணக்கு ரூ. 150 அதிகமாக வரவு வைக்கப் பட்டுள்ளது. | விற்பனைக் கணக்கில் ரூ. 150 பற்றுவைக்க |
| (v) | — | கொள்முதல் கணக்கு ரூ. 10 குறைவாகப் பற்றுவைக்கப் பட்டுள்ளது. | கொள்முதல் கணக்கில் ரூ. 10 பற்றுவைக்க. |

**எடுத்துக்காட்டு 3**

*[பகுதி-விடு பிழை, கணக்கின் தவறான* ***மருங்கில்*** *(பகுதியில்) எடுத்தெழுதியதனால் ஏற்படும் பிழை,* ***தவறான*** *தொகையை எடுத்தெழுதுதல், தவறான* ***தொகையைத்*** *தவறான மருங்கில் (பகுதியில்) எடுத்தெழுதுதல்]*

*பின்வரும் பிழைகளைத் திருத்துக:*

*(அ) எஸ். பீட்டர் என்பவரிடமிருந்து ரூ. 200-க்குச் செய்த கொள்முதல், கொள்முதல் ஏட்டிலிருந்து பேரேட்டிலுள்ள அவருடைய கணக்கில் எடுத்தெழுதாமல் விடப்பட்டுள்ளது.*

*(ஆ) கே. குமாருக்குச் செய்த விற்பனை ரூ. 360, அவருடைய கணக்கில் ரூ. 630 என எடுத்தெழுதப் பட்டுள்ளது.*

*(இ) ஏ. பால் என்பவரிடமிருந்து செய்த கொள்முதல் ரூ. 150, அவருடைய கணக்கின் பற்று மருங்கில் (பகுதியில்) எடுத்தெழுதப்பட்டுள்ளது.*

*(ஈ) எஸ். சுந்தர் என்பவருக்குச் செய்த விற்பனை ரூ. 420, அவருடைய கணக்கின் வரவு மருங்கில் (பகுதியில்) ரூ. 240 என எடுத்தெழுதப்பட்டுள்ளது.*

விடை:

இதில் முதலாவது பிழை, பகுதி - விடு பிழை;

இரண்டாவது பிழை, தவறான தொகையை எடுத்தெழுதுவதை ஒட்டியது;

மூன்றாவது பிழை, (கணக்கின்) தவறான மருங்கில் (பகுதியில்) எடுத்தெழுதுவதைச் சார்ந்தது;

நான்காவது பிழை, தவறான தொகையைத் தவறான மருங்கில் (பகுதியில்) எடுத்தெழுதுவதைச் சார்ந்தது.

| வரிசை எண் | செய்திருக்க வேண்டிய சரியான பதிவு | செய்யப்பட்ட தவறான பதிவு | திருத்தப் பதிவு |
|---|---|---|---|
| (அ) | எஸ். பீட்டர் கணக்கில் ரூ. 200 வரவு வைக்க வேண்டும். | எஸ். பீட்டர் கணக்கில் ரூ 200 வரவு வைக்கப்படவில்லை. | எஸ். பீட்டர் கணக்கில் ரூ. 200 வரவு வைக்க. |
| (ஆ) | கே. குமார் கணக்கில் ரூ. 360 பற்று வைக்க வேண்டும். | கே. குமார் கணக்கில் ரூ. 630 பற்று வைக்கப்பட்டிருக்கிறது. | இந்த மிகு-பற்றை எடுக்க, கே. குமார் கணக்கில் ரூ. 270 வரவு வைக்க. |
| (இ) | ஏ. பால் கணக்கில் ரூ. 150 வரவு வைக்க வேண்டும். | ஏ. பால் கணக்கில் ரூ. 150 பற்று வைக்கப்பட்டுள்ளது. | தவறான பற்றை எடுக்கவும், உரிய வரவைக் கொடுக்கவும், ஏ. பால் கணக்கில் ரூ. 300 வரவு வைக்க. |
| (ஈ) | எஸ். சுந்தர் கணக்கில் ரூ. 420 பற்று வைக்க வேண்டும். | எஸ். சுந்தர் கணக்கில் ரூ. 240 வரவு வைக்கப்பட்டுள்ளது. | தவறான வரவை எடுக்கவும், உரிய பற்றைக் கொடுக்கவும், எஸ் சுந்தர் கணக்கில் ரூ. 660 பற்று வைக்க. (அதாவது 420+240) |

## இரு கணக்குகளைப் பாதிக்கும் பிழைகளைத் திருத்துதல்

இரு கணக்குகளைப் பாதிக்கும் பிழைகளை எவ்வாறு திருத்துவது எனத் தக்க எடுத்துக்காட்டுகளைக் கொண்டு பார்ப்போம். இப் பிழைகளைக் குறிப்பேட்டுப் பதிவு மூலமாகத் திருத்தவேண்டும் என்பதை நினைவுகூர்க.

### (1) விதிப் பிழை (Error of Principle)

**எடுத்துக்காட்டு**

'பேன்ஸி அறைகலன் மார்ட்' என்னும் நிலையத்திலிருந்து வாங்கிய ரூ. 500 மதிப்புள்ள அறைகலன் (Furniture), கொள்முதல் ஏடு வழியாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

**விடை :**

சரக்குகளைக் கடன் அடிப்படையில் கொள்முதல் செய்யும்பொழுதுதான் அவற்றைக் கொள்முதல் ஏடு வழியாகப் பதிவு செய்யவேண்டும். அறைகலன் போன்ற சொத்துகளை (Assets) வாங்கும்பொழுது அவற்றைக் கொள்முதல் ஏடு வழியாகப் பதிவு செய்தல் தவறானது. இங்கு ஒரு முதலினச் செலவு (Capital Expenditure) வருவாயினச் செலவாகப் (Revenue Expenditure) பதிவு செய்யப்பட்டிருப்பதால் இது ஒரு **விதிப் பிழை**யாகும்.

| செய்திருக்க வேண்டிய சரியான பதிவு | செய்யப்பட்ட தவறான பதிவு | திருத்தப் பதிவு |
|---|---|---|
| ரூ. ரூ.<br>அறைகலன் க/கு பற்று 500<br>பேன்ஸி அறைகலன் மார்ட் க/கு 500 | ரூ. ரூ.<br>கொள்முதல் க/கு பற்று 500<br>பேன்ஸி அறைகலன் மார்ட் க/கு 500<br>**குறிப்பு :**<br>(இத் தவறு இரு கணக்குகளைப் பாதிக்கும் என்பதை இதன் மூலம் அறிக) | ரூ. ரூ.<br>அறைகலன் க/கு பற்று 500<br>கொள்முதல் க/கு 500<br>(கொள்முதல் கணக்கில் வைத்த தவறான பற்றை நீக்கவும், அறைகலன் கணக்கில் உரிய பற்றைக் கொடுக்கவுமான பதிவு) |

## (2) முழு - விடு பிழை (Error of Complete Omission):

**எடுத்துக்காட்டு**

இரமேஷ் & கம்பெனியிடமிருந்து செய்த கடன் கொள் முதல் ரூ. 2,000 ஏடுகளில் பதிவே செய்யாமல் விடப்பட்டுள்ளது.

**விடை :**

| செய்திருக்க வேண்டிய சரியான பதிவு | செய்யப்பட்ட தவறான பதிவு | திருத்தப் பதிவு |
|---|---|---|
| ரூ. ரூ. | ரூ. ரூ. | ரூ. ரூ. |
| கொள்முதல் க/கு பற்று 2,000<br>இரமேஷ் & கம். க/கு 2,000 | ஏதுமில்லை | கொள்முதல் க/கு பற்று 2,000<br>இரமேஷ் & கம். க/கு 2,000<br>(செய்யாமல் விட்டதை இப்பொழுது செய்தல்) |

## (3) துணை ஏட்டில் தவறாகப் பதிதல் (Wrong Entries in Subsidiary Books)

துணை ஏட்டில் இரு அம்சங்களில் தவறான பதிவு ஏற்படலாம்:

(i) நடவடிக்கைத் தொகையைத் தவறாகப் பதிந்து விடுதல்;

(ii) மறு தரப்பாரின் பெயரைத் தவறாகப் பதிந்து விடுதல்.

இரு எடுத்துக்காட்டுகளைக்கொண்டு இவற்றைப் பார்ப்போம்.

**எடுத்துக்காட்டு**

(அ) இராமன் & கம்பெனிக்குச் செய்த கடன் விற்பனை ரூ. 3,000, விற்பனை ஏட்டில் ரூ. 300 எனப் பதியப்பட்டுள்ளது.

**விடை :**

| சரியான பதிவு | தவறான பதிவு | திருத்தப் பதிவு |
|---|---|---|
| ரூ. ரூ.<br>இராமன் & கம். க/கு பற்று 3,000<br>விற்பனைக் க/கு 3,000 | ரூ. ரூ.<br>இராமன் & கம். க/கு பற்று 300<br>விற்பனைக் க/கு 300 | ரூ ரூ.<br>இராமன் & கம். க/கு பற்று 2,700<br>விற்பனைக் க/கு 2,700<br>(தவறான தொகையை விற்பனை ஏட்டில் பதிவு செய்ததை யடுத்து எழுந்த பிழையைத் திருத்துதல்) |

**எடுத்துக்காட்டு**

(ஆ) குமார் என்பவருக்குச் செய்த கொள்முதல் திருப்பம் ரூ. 500 கொள்முதல் திருப்ப ஏட்டில் குகன் என்பவருக்குச் செய்ததாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

**விடை :**

| சரியான பதிவு | தவறான பதிவு | திருத்தப் பதிவு |
|---|---|---|
| ரூ. ரூ.<br>குமார் க/கு பற்று 500<br>கொள்முதல் திருப்பக் க/கு 500 | ரூ ரூ.<br>குகன் க/கு பற்று 500<br>கொள்முதல் திருப்பக் க/கு 500 | ரூ. ரூ.<br>குமார் க/கு பற்று 500<br>குகன் க/கு 500<br>(குகன் கணக்கில் தவறாகக் கொடுத்த பற்றை நீக்குதலும், குமார் கணக்கிற்கு உரிய பற்றைக் கொடுத்தலுமான பதிவு) |

### (4) தவறான துணை ஏட்டில் பதிதல் (Entry in a Wrong Subsidiary Book)

விற்பனைத் திருப்பத்தைக் கொள்முதல் என எண்ணிக் கொள்முதல் ஏட்டில் பதிவதும், கொள்முதல் திருப்பத்தை விற்பனை ஏட்டில் பதிவதும் அடிக்கடி செய்யப்படும் பிழைகளாகும். அதுபோலவே கொள்முதலை, விற்பனைத் திருப்ப ஏட்டில் பதிதலும், விற்பனையைக் கொள்முதல் திருப்ப ஏட்டில் பதிவதும் அடிக்கடி காணக்கூடிய பிழைகளாகும்.

**எடுத்துக்காட்டு**

வரதன் என்பவரிடமிருந்து பெற்ற விற்பனைத் திருப்பச் சரக்கு ரூ. 300, கொள்முதல் ஏட்டில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

**விடை:**

| சரியான பதிவு | தவறான பதிவு | திருத்தப் பதிவு |
|---|---|---|
| ரூ. ரூ. | ரூ. ரூ. | ரூ. ரூ. |
| விற்பனைத் திருப்பக் க/கு பற்று 300<br>வரதன் க/கு 300 | கொள்முதல் க/கு பற்று 300<br>வரதன் க/கு 300 | விற்பனைத் திருப்பக் க/கு பற்று 300<br>கொள்முதல் க/கு 300<br>(கொள்முதல் கணக்கிற்குத் தவறாகக் கொடுத்த பற்றை நீக்குதலும் உரிய பற்றை விற்பனைத் திருப்பக் கணக்கிற்குக் கொடுத்தலுமான பதிவு) |

**மற்றொரு எடுத்துக்காட்டு:**

குகன் என்பவருக்குச் செய்த கொள்முதல் திருப்பம் ரூ. 600 விற்பனைத் திருப்ப ஏட்டில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

**விடை:**

| சரியான பதிவு | | | தவறான பதிவு | | | திருத்தப் பதிவு | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | ரூ. | ரூ. | | ரூ. | ரூ. | | ரூ. | ரூ. |
| குகன் க/கு பற்று | 600 | | விற்பனைத் திருப்பக் க/கு பற்று | 600 | | குகன் க/கு பற்று | 1,200 | |
| கொள்முதல் திருப்பக் க/கு | | 600 | குகன் க/கு | | 600 | விற்பனைத் திருப்பக் க/கு | | 600 |
| | | | | | | கொள்முதல் திருப்பக் க/கு | | 600 |
| | | | | | | (குகன் கணக்கிற்குத் தவறாகக் கொடுத்த வரவை நீக்குதல், அக் கணக்கிற்கு உரிய பற்றைக் கொடுத்தல்; விற்பனைத் திருப்பக் கணக்கிற்குத் தவறாகக் கொடுத்த பற்றை நீக்குதல்; கொள்முதல் திருப்பக் கணக்கிற்கு உரிய வரவைத் தருதல் ஆகியவை குறித்த பதிவு) | | |

**(5) தவறான கணக்கில் எடுத்தெழுதுதல் (Posting to a Wrong Account)**

ஒரு கணக்கில் செய்யவேண்டிய வரவு அல்லது பற்றை வேறொரு கணக்கில் செய்வதை இது குறிக்கும். இதில் இரு வகையான பிழைகள் அடங்கும். அவையாவன:

(அ) எடுத்தெழுதப்பட்ட கணக்கு மட்டுமே தவறானது.

(ஆ) எடுத்தெழுதப்பட்ட கணக்கும் தொகையும் தவறானவை.

**எடுத்துக்காட்டு**

(அ) 'அழகன்' என்பவர் மீது ரூ. 5,000-க்கு எழுதிய மாற்றுச்சீட்டு, பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு ஏட்டில் (Bills Receivable Book) சரியாகப் பதிவு செய்யப்பட்டு அங்கிருந்து 'அமுதன்' என்பவரது கணக்கில் எடுத்தெழுதப்பட்டுள்ளது.

**விடை:**

**குறிப்பு:** 'எடுத்தெழுதப்பட்டுள்ளது' எனக் கொடுக்கப்பட்டிருப்பதால், அழகன், அமுதன் என்ற குழப்பத்தைத் தவிர ஏனையவை (அதாவது தொகை, கணக்கின் மருங்கு) சரியாகச் செய்யப்பட்டுள்ளன எனக் கொள்ள வேண்டும்.

| சரியான பதிவு | தவறான பதிவு | திருத்தப் பதிவு |
|---|---|---|
| அழகன் கணக்கில் ரூ. 5,000 வரவு வைக்க வேண்டும். | அமுதன் கணக்கில் ரூ. 5,000 வரவு வைக்கப் பட்டுள்ளது. | ரூ. ரூ.<br>அமுதன் க/கு பற்று 5,000<br>அழகன் க/கு 5,000<br>(அமுதன் கணக்கில் தவறாக வைத்த வரவை நீக்கலும், அழகன் கணக்கிற்கு உரிய வரவைக் கொடுத்தலுமான பதிவு) |

**எடுத்துக்காட்டு**

(ஆ) அன்பு என்பவர் நம் மீது ரூ. 2,000க்கு எழுதி, நாம் ஏற்ற மாற்றுச்சீட்டைச் செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு ஏட்டில் சரியாகப் பதிவு செய்துவிட்டு, அங்கிருந்து எடுத்தெழுதும் பொழுது அறிவு என்பவர் கணக்கில் ரூ. 200 என எடுத்தெழுதிவிட்டோம்.

**விடை:**

| சரியான பதிவு | தவறான பதிவு | திருத்தப் பதிவு |
|---|---|---|
| அன்பு கணக்கில் ரூ. 2,000 பற்று வைக்க வேண்டும். | அறிவு கணக்கில் ரூ. 200 பற்று வைக்கப்பட்டுள்ளது. | அன்பு கணக்கில் ரூ. 2,000 பற்று வைத்து, அறிவு கணக்கில் ரூ. 200 வரவு வைக்க வேண்டும். |

**குறிப்பு:** இது இரு கணக்கைப் பாதிக்கும் பிழையாக இருந்தாலும், இருப்பாய்வையும் பாதிக்கும் இயல்புடையது.

**(6) ஈடுசெய் பிழைகள்**

**எடுத்துக்காட்டு**

விற்பனைக் கணக்கில் கொடுக்கப்பட்டுள்ள ரூ. 600 மிகு-வரவை (Excess Credit) கூலிக் கணக்கில் வைக்கப்பட்டுள்ள ரூ. 400 மிகு-பற்றும், X என்பவர் கணக்கில் வைக்கப்பட்டுள்ள ரூ. 200 குறை-வரவும் (Short Credit) ஈடுசெய்கின்றன.

**விடை:**

| சரியான பதிவு | தவறான பதிவு | திருத்தப் பதிவு |
|---|---|---|
| — | (1) விற்பனைக் கணக்கில் ரூ. 600 அதிகமாக வரவு வைக்கப்பட்டுள்ளது.<br>(2) கூலிக் கணக்கில் ரூ. 400 அதிகமாகப் பற்று வைக்கப்பட்டுள்ளது.<br>(3) X கணக்கில் ரூ.200 குறைவாக வரவு வைக்கப்பட்டுள்ளது. | ரூ. ரூ.<br>விற்பனைக் க/கு 600<br>கூலிக் க/கு 400<br>X க/கு 200<br>(இந்த ஈடுசெய் பிழைகளைத் திருத்தற்குரிய பதிவு) |

## அநாமத்துக் கணக்கு (Suspense Account)

ஒரு கணக்கைப் பாதிக்கும் பிழைகள் அனைத்தும் இருப்பாய்வையும் பாதிப்பவையாக இருக்கும். இரு கணக்கைப் பாதிக்கும் பிழைகளில் ஒன்றே ஒன்று (அதாவது தவறான கணக்கில் தவறான தொகையை எடுத்தெழுதுதல்) இருப்பாய்வைப் பாதிக்கும் இயல்புடையது. எனவே ஏடுகளில் இப் பிழைகள் இருக்கும்பொழுது நாம் இருப்பாய்வைத் தயாரித்தால் அது சமன்பாட்டைக் கொண்டிருக்காது. (அதிலுள்ள பற்று இருப்புகளின் மொத்தமும் வரவு இருப்புகளின் மொத்தமும் சமமாக இருக்காது).

இருப்பாய்வைச் சமன்படுத்தாமல் நாம் இறுதிக் கணக்குகளைத் தயாரிக்கவியலாது. அந் நிலையில் இருப்பாய்வைச் சமன்படுத்துவதற்கு இரு வழிகளே உள்ளன:

(i) பிழைகளைக் கண்டுபிடித்து அவற்றை நீக்கினால் (திருத்தினால்) இருப்பாய்வு சமன்படும். ஆனால் இதற்குப் பல நாள்கள் தேவைப்படும். அதுவரை காத்திருந்து, பிறகு இறுதிக் கணக்குகளைத் தயாரிக்கலாம் என்றால் இந்த வழியைப் பின்பற்றலாம்.

(ii) பெரும்பாடலான நேரங்களில் பிழைகளைக் கண்டுபிடித்துத் திருத்தும்வரை இறுதிக் கணக்குகள் தயாரிப்பதை நிறுத்தி வைக்க முடிவதில்லை. எனவே இருப்பாய்வை வலுக்கட்டாயமாகச் சமன்படுத்தும்பொருட்டு அதில் அனாமத்துக் கணக்கு புகுத்தப்படுகிறது.

அநாமத்துக் கணக்கு இருப்பாய்வின் இரு மொத்தங்களிடையேயுள்ள வேறுபாட்டைத் தனது இருப்பாகக் கொண்டு எழுச்சிபெறுகிறது.

இருப்பாய்வின் பற்று - மொத்தம் (Debit) குறைவாக இருப்பின், அநாமத்துக் கணக்கு பற்று-இருப்பைக் கொண்டு துவங்கும்.

இருப்பாய்வின் வரவு - மொத்தம் குறைவாக இருப்பின், அது (அநாமத்து கணக்கு) வரவு - இருப்பைக் கொண்டு துவங்கும்.

இவ்வாறு தோற்றுவிக்கப்படும் அநாமத்துக் கணக்கு, அந்த ஆண்டின் இருப்புநிலைக் குறிப்பில் இடம்பெறும்; அது வரவு-இருப்பைக் கொண்டிருந்தால் இருப்புநிலைக் குறிப்பின் 'பொறுப்புகள்' மருங்கிலும், பற்று - இருப்பைக் கொண்டிருந்தால் 'சொத்துகள்' மருங்கிலும் காண்பிக்கப்பெறும்.

அடுத்த ஆண்டு தொடக்கத்தில் சென்றைய ஆண்டு ஏடுகளிலுள்ள பிழைகள் அனைத்தும் கண்டுபிடிக்கப்பட்டுத் திருத்தப்படும் நிலையில் அனாமத்துக் கணக்கு முடிவுறும் (closed); அவ்வாறு முடிவுறாமல் இருந்தால் ஏடுகளில் இன்னும் பிழைகள் இருக்கின்றன எனப் பொருள்.

## அநாமத்துக் கணக்கு இருக்கும்பொழுது பிழைகளைத் திருத்துதல்

அநாமத்துக் கணக்கு இருக்கும்பொழுது செய்யப்படும் திருத்தப் பதிவுகள் (Rectification Entries) அனைத்தும் குறிப்பேட்டுப் பதிவுகளாகவே இருத்தல் வேண்டும். பிழைகள் ஒரு கணக்கை மட்டும் பாதித்து, குறிப்பேட்டுப் பதிவுக்கு வழி செய்யாத பொழுது, அநாமத்துக் கணக்கைப் பற்றோ வரவோ வைத்துக் குறிப்பேட்டுப் பதிவை உருவாக்குக.

எடுத்துக்காட்டாக, ஒரு பிழையின் விளைவாக விற்பனைக் கணக்கு மட்டும் ரூ. 500 மிகுதியாக வரவு வைக்கப்பட்டுள்ளது எனக் கொள்வோம். இதைத் திருத்துவதற்கு விற்பனைக் கணக்கில் ரூ. 500 பற்று வைக்க வேண்டும். இத்துடன் திருத்தப் பதிவு முற்றுப் பெறுகிறது; அதைக் குறிப்பேட்டுப் பதிவாகச் செய்ய வழியில்லை. அந்நிலையில் ஏடுகளில் அநாமத்துக் கணக்கு இருந்தால், திருத்தப் பதிவைப் பின்வருமாறு குறிப்பேட்டுப் பதிவாக மாற்றலாம்:

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| விற்பனைக் க/கு | பற்று | 500 | |
| அநாமத்துக் க/கு | | | 500 |

**எடுத்துக்காட்டு 4**

*இருப்பாய்வு சமன்பாடு அடையாமல் இருந்ததால் கணக்கர் அதன் வேறுபாட்டுத் தொகையான ரூ. 1,709ஐ வரவு வைத்து அநாமத்துக் கணக்கு துவக்கினார். பிறகு பின்வரும் பிழைகள் கண்டுபிடிக்கப்பட்டன. குறிப்பேட்டுப் பதிவுகள் தருவதோடு அநாமத்துக் கணக்கையும் காட்டுக:*

*(அ) விற்பனை ஏடு ரூ. 2,000 குறைவாக மொத்தமிடப்பட்டது.*

*(ஆ) ரூ. 3,000க்கு இயந்திரம் வாங்கியது, கொள்முதல் ஏடு வழியாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது.*

*(இ) இராஜ் என்பவருக்கு ரூ. 45க்குச் சரக்கு விற்றது அவருடைய கணக்கில் ரூ. 54 என எடுத்தெழுதப் பட்டுள்ளது.*

*(ஈ) கொள்முதல் திருப்ப ஏடு ரூ. 200 அதிகமாக மொத்தமிடப்பட்டுள்ளது.*

*(உ) விற்பனை ஏட்டின் 3-ஆம் பக்க மொத்தம் ரூ. 1,122 அடுத்த பக்கத்தில் ரூ. 1,222 எனத் தூக்கியெழுதப்பட்டுள்ளது.*

**விடை :**

| வரிசை எண் | செய்திருக்க வேண்டிய சரியான பதிவு | செய்த தவறான பதிவு | திருத்தப் பதிவு |
|---|---|---|---|
| (அ) | — | விற்பனைக் கணக்கு ரூ. 2,000 குறைவாக வரவு வைக்கப் பட்டுள்ளது | ரூ. ரூ.<br>அநாமத்துக் க/கு பற்று 2,000<br>விற்பனைக் க/கு 2,000<br>(விற்பனைக் கணக்கு ரூ. 2,000 குறைவாக வரவு வைக்கப் பட்டது திருத் தப்படுகிறது) |
| (ஆ) | இயந்திரக் கணக்கில் ரூ. 3,000 பற்று வைக்கப் பட்டிருக்க வேண்டும் | கொள்முதல் கணக்கில் ரூ. 3,000 தவறாகப் பற்று வைக்கப் பட்டுள்ளது | இயந்திரக் க/கு பற்று 3,000<br>கொள்முதல் க/கு 3,000<br>(இயந்திரக் கணக்கிற்குப் பதிலாகக் கொள் முதல் கணக்கில் வைக்கப்பட்ட பற்று திருத்தப் டது) |
| (இ) | இராஜ்கணக்கில் ரூ. 45 பற்று வைக்கப் பட்டிருக்க வேண்டும் | இராஜ்கணக்கில் ரூ. 54 பற்று வைக்கப் பட்டுள்ளது | அநாமத்துக் க/கு பற்று 9<br>இராஜ் க/கு 9<br>(இராஜ் கணக்கில் வைக்கப்பட்ட மிகு-பற்று ரூ. 9. திருத்தப்பட்டது) |

| வரிசை எண் | செய்திருக்க வேண்டிய சரியான பதிவு | செய்த தவறான பதிவு | திருத்தப் பதிவு |
|---|---|---|---|
| (ஈ) | — | கொள்முதல் திருப்பக் கணக்கு ரூ. 200 அதிகமாக வரவு வைக்கப்பட்டுள்ளது | ரூ. ரூ.<br>கொள்முதல் திருப்பக்க/கு பற்று 200<br>அனாமத்துக் க/கு 200<br>(கொள்முதல் திருப்பக் கணக்கில் வைக்கப்பட்ட மிகு-வரவு திருத்தப்பட்டது) |
| (உ) | விற்பனைக் கணக்கில் ரூ. 1,122 வரவு வைக்கப்பட்டிருக்க வேண்டும் | விற்பனைக் கணக்கில் ரூ. 1,222 வரவு வைக்கப்பட்டுள்ளது | விற்பனைக் க/கு பற்று 100<br>அநாமத்துக் க/கு 100<br>(விற்பனை ஏட்டு மொத்தம் தவறாகத் தூக்கியெழுதப்பட்டது திருத்தப்படுகிறது) |

**குறிப்பு :** தேர்வுகளில் திருத்தப் பதிவுகளை மட்டும் காண்பித்தால் போதுமானது; மேலே இருப்பது போலச் 'சரியான பதிவு' 'தவறான பதிவு' இவற்றைக் காண்பிக்கத் தேவையில்லை.

**அனாமத்துக் கணக்கு**

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | ஏடுகளில் தோன்றிய வேறுபாடு க/கு | ரூ. 1,709 |
| | விற்பனைக் க/கு | 2,000 | | | |
| | இராஜ் க/கு | 9 | | கொள் முதல் திருப்பக் க/கு | 200 |
| | | | | விற்பனைக் க/கு | 100 |
| | | 2,009 | | | 2,009 |

**எடுத்துக்காட்டு 5**

1976 திசம்பர் 31ஆம் நாளன்று திரு. எ. ஜான் என்பவரது ஏடுகளில் பின்வரும் பிழைகள் கண்டுபிடிக்கப்பட்டன:

(i) கொள்முதல் ஏட்டின் திசம்பர் மாதத்திய மொத்தம் ரூ. 100 குறைவாகக் கூட்டப்பட்டுள்ளது.

(ii) இயந்திரத்தைப் பழுது பார்த்த வகையில் செலவழித்த ரூ. 76 இயந்திரத்தின் கணக்கில் பற்று வைக்கப்பட்டுள்ளது.

(iii) எஸ். கோஷ் என்பவரிடமிருந்து பெற்ற ரொக்கம் ரூ. 39 ரொக்க ஏட்டில் பதியப்பட்டிருந்தும், கோஷின் கணக்கில் எடுத்தெழுதப்படவில்லை.

(iv) விற்பனை ஏடு ரூ. 50 அதிகமாக மொத்தமிடப்பட்டுள்ளது.

(v) எஸ். இராம் என்பவருக்குச் செய்த விற்பனை ரூ. 400 கொள்முதல் ஏடு வழியாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

(vi) எஸ். சுரேஷ் என்பவரால் திருப்பியனுப்பப்பட்ட சரக்கு ரூ. 75 வெளித் திருப்ப ஏட்டில் பதிவு செய்யப் பட்டுள்ளது. இருப்பினும், எஸ். சுரேஷின் கணக்கில் அது சரியாக எடுத்தெழுதப்பட்டுள்ளது.

(அ) அநாமத்துக் கணக்கு துவக்கப்படவில்லை எனக் கொண்டு இப் பிழைகளைத் திருத்துக.

(ஆ) இருப்பாய்வின் வேறுபாட்டுத் தொகையான ரூ. 261 அநாமத்துக் கணக்கில் பற்று வைக்கப்பட்டுள்ளது எனக் கொண்டு இப் பிழைகளைத் திருத்துக.

(இ) அநாமத்துக் கணக்கைக் காட்டிடுக.

**விடை:**

**(அ) அனாமத்துக் கணக்கு இல்லாத நிலையில் திருத்தப் பதிவுகள்**

| வரிசை எண் | செய்திருக்க வேண்டிய பதிவு | செய்த தவறான பதிவு | திருத்தப் பதிவு |
|---|---|---|---|
| (i) | — | கொள்முதல் கணக்கில் ரூ. 100 குறைவாகப் பற்று வைக்கப்பட்டுள்ளது | கொள்முதல் கணக்கில் இப்பொழுது ரூ. 100 பற்று வைக்க. |
| (ii) | பழுதுபார்ப்புக் கணக்கில் (Repair A/c) ரூ 76 பற்று வைக்கப்பட்டிருக்க வேண்டும் | இயந்திரக் கணக்கில் ரூ. 76 பற்று வைக்கப் பட்டுள்ளது | ரூ. ரூ.<br>இயந்திரப் பழுதுபார்ப்புக் க/கு பற்று 76<br>இயந்திரக் க/கு 76<br>(இயந்திரக் கணக்கில் தவறாக வைக்கப்பட்ட பற்றை நீக்கவும், பழுதுபார்ப்புக் கணக்கிற்கு உரிய பற்றைக் கொடுக்கவுமான பதிவு) |

| வரிசை எண் | செய்திருக்க வேண்டிய பதிவு | செய்த தவறான பதிவு | திருத்தப் பதிவு |
|---|---|---|---|
| (iii) | எஸ். கோஷின் கணக்கில் ரூ. 39 வரவு வைக்கப்பட்டிருக்க வேண்டும் | — (விடு பிழை) | எஸ். கோஷின் கணக்கில் ரூ. 39 வரவு வைக்க. |
| (iv) | — | விற்பனைக் கணக்கில் ரூ. 50 அதிகமாக வரவு வைக்கப்பட்டுள்ளது. | விற்பனைக் கணக்கில் ரூ. 50 பற்று வைக்க. |
| (v) | ரூ ரூ<br>எஸ். இராம் க/கு பற்று 400<br>விற்பனைக் க/கு 400 | ரூ ரூ.<br>கொள்முதல் க/கு பற்று 400<br>எஸ். இராம் க/கு 400 | ரூ. ரூ.<br>எஸ். இராம் க/கு பற்று 800<br>கொள்முதல் க/கு 400<br>விற்பனை க/கு 400<br>(தவறான துணை ஏடு வழியாகச் செய்யப்பட்ட பதிவு திருத்தப்பட்டது) |
| (vi) | ரூ. ரூ.<br>உள்திருப்பக் க/கு பற்று 75<br>சுரேஷ் க/கு 75 | வெளித் திருப்பக் கணக்கில் ரூ. 75 வரவு வைக்கப்பட்டுள்ளது; உள்திருப்பக் கணக்கில் செய்ய வேண்டிய பற்று ரூ. 75 விடப்பட்டுள்ளது | வெளித் திருப்பக் க/கு, உள்திருப்பக் க/கு இவை ஒவ்வொன்றிலும் ரூ 75 பற்று வைக்கப்பட வேண்டும். |

**(ஆ) அனாமத்துக் கணக்குகள் இருக்கும் நிலையில் திருத்தப் பதிவுகள்**

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1976<br>(i) திச 31 | கொள் முதல் க/கு பற்று<br>அநாமத்துக் க/கு<br>(கொள்முதல் ஏடு குறைவாகக் கூட்டியது திருத்தப்பட்டது) | | ரூ.<br>100 | ரூ.<br>100 |
| (ii) ,, | இயந்திரப் பழுது பார்ப்புக் க/கு பற்று<br>இயந்திரக் க/கு<br>(பழுதுபார்ப்புக் கணக்கிற்குப் பதிலாக இயந்திரக் கணக்கைப் பற்று வைத்தது திருத் தப்பட்டது) | | 76 | 76 |
| (iii) ,, | அநாமத்துக் க/கு பற்று<br>எஸ். கோஷ் க/கு<br>(கோஷ் கணக்கில் செய்யாமல் விடப் பட்ட வரவு இப் பொழுது செய்யப் படுகிறது) | | 39 | 39 |
| (iv) ,, | விற்பனைக் க/கு பற்று<br>அநாமத்துக் க/கு<br>(விற்பனை ஏடு அதிக மாக மொத்த மிடப்பட்டது திருத்தப்படுகிறது) | | 50 | 50 |
| (v) ,, | எஸ். இராம் க/கு பற்று<br>கொள்முதல் க/கு<br>விற்பனைக் க/கு<br>(தவறான துணை ஏடு வழியாகச் செய்யப் பட்ட பதிவு திருத்தப்படுகிறது) | | 800 | 400<br>400 |

| தேதி | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| (vi) .. | வெளித் திருப்பக் க/கு பற்று<br>உள் திருப்பக் க/கு பற்று<br>அநாமத்துக் க/கு<br>(உள் திருப்பக் கணக்கில் செய்யாமல் விடப்பட்ட பற்றும், வெளித் திருப்பக் கணக்கில் தவறாக வைக்கப்பட்ட வரவும் திருத்தப் படுகின்றன) .. | | 75<br>75 | <br><br>150 |

**குறிப்பு :** அநாமத்துக் கணக்கு இருந்தாலும் இல்லாவிட்டாலும், இரு கணக்குகளைப் பாதிக்கும் பிழைகளான (ii)வது, (v)வது பிழைகளுக்குத் திருத்தப் பதிவு வேறுபடுவதில்லை.

**(இ) அனாமத்துக் கணக்கு**

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| 1976 திச 31 | ஏடுகளிலுள்ள வேறுபாடு | ரூ. 261 | 1976 திச 31 | கொள் முதல் க/கு | ரூ. 100 |
| .. | எஸ். கோஷ் க/கு | 39 | .. | விற்பனைக் க/கு | 50 |
| | | | .. | வெளித் திருப்பக் க/கு | 75 |
| | | | .. | உள் திருப்பக் க/கு | 75 |
| | | 300 | | | 300 |

## வினாக்கள்

**ஒரு விடை வினாக்கள் : (Objective Type Questions)**

(1) பின் வரும் பிழைகளில் எவ்வெவற்றை இருப்பாய்வு வெளிப்படுத்தாது?

(அ) முழு-விடு பிழைகள்.

(ஆ) ஒரு கணக்கைத் தப்பாக இருப்புக் கட்டுதல்.

(இ) கொள்முதல் ஏட்டைத் தப்பாக மொத்தமிடுதல்.

(ஈ) விற்பனை ஏட்டிலிருந்து ஆள்சார் கணக்கிற்குத் தவறான தொகையை எடுத்தெழுதுதல்.

(உ) ஈடு செய் பிழைகள்.

2. பின்வரும் வினாக்கள் ஒவ்வொன்றின் கீழும் பல விடைகள் கொடுக்கப்பட்டுள்ள, அவற்றில் ஒவ்வொன்றே சரியானது. சரியான விடைகளைக் குறிப்பிடுக:

(அ) மேலாண்மையருக்குச் செலுத்தப்பட்ட சம்பளம் ரூ. 1,000ஐப் பற்று வைக்க வேண்டியது.

(i) மேலாண்மையர் கணக்கில்

(ii) அலுவலகச் செலவுக் கணக்கில்

(iii) சம்பளக் கணக்கில்

(ஆ) புதிய இயந்திரத்தை நிறுவுவதற்காக வேலையாள்களுக்குத் தரப்பட்ட கூலி ரூ. 500ஐப் பற்று வைக்க வேண்டியது.

(i) கூலிக் கணக்கில்

(ii) இயந்திரக் கணக்கில்

(iii) ஆலைச் செலவுக் கணக்கில்.

(இ) அலுவலகத் தட்டச்சைச் சீர்க்காப்பு செய்வதற்குச் (Servicing) செலவிட்ட ரூ. 100ஐப் பற்று வைக்க வேண்டியது.

(i) சில்லறைச் செலவுக் கணக்கில்

(ii) தட்டச்சுக் கணக்கில்

(iii) பழுதுபார்ப்புக் கணக்கில்

(ஈ) ரூ. 250 பெறுமானமுள்ள சரக்குகளை உரிமையர் அவருடைய குடும்பப் பயனுக்காக எடுத்துக் கொண்டதை வரவு வைக்க வேண்டியது.

(i) உரிமையரது எடுப்புக் கணக்கில்

(ii) விற்பனைக் கணக்கில்

(iii) கொள்முதல் கணக்கில்

(உ) முன்னர் வாராக்கடன் எனப் போக்கெழுதப்பட்ட கடனை, எஸ். இரமேஷ் என்னும் கடனாளி இப்பொழுது தர, அதைப் பெறும்பொழுது வரவு வைக்க வேண்டியது.

(i) எஸ். இரமேஷின் கணக்கில்

(ii) சில்லறை வருமானக் கணக்கில்

(iii) திரும்பப்பெற்ற வாராக் கடன் கணக்கில்

**விடை:**

அ (iii); ஆ (ii); இ (iii); ஈ (iii); உ (iii).

(3) இரு மருங்கில் தோன்றுபவற்றைப் பொருத்திக் காட்டுக:

| **மருங்கு: அ** | **மருங்கு: ஆ** |
|---|---|
| (i) கொள்முதல் ஏட்டில் செய்யும் பதிவுகளை | (அ) வட்டக் கணக்கில் வரவு வைக்க வேண்டும் |
| (ii) விற்பனை ஏட்டின் மொத்தத்தை | (ஆ) ஆள்சார் கணக்குகளில் பற்று வைக்க வேண்டும் |
| (iii) உள்திருப்பத்தை | (இ) சேகரித்தளிப்பவர்கள் கணக்குகளில் வரவு வைக்க வேண்டும் |
| (iv) ரொக்க ஏட்டின் செலுத்துகள் மருங்கிலுள்ள (பகுதியிலுள்ள) வட்டப் பத்தியின் (Column) மொத்தத்தை | (ஈ) விற்பனைக் கணக்கில் வரவு வைக்க வேண்டும் |
| (v) கொள்முதல் திருப்ப ஏட்டில் பதிவு செய்தவற்றை | (உ) விற்பனைத் திருப்ப ஏட்டில் பதிவு செய்ய வேண்டும். |

**விடை:** (i) இ; (ii) ஈ; (iii) உ; (iv) அ; (v) ஆ.

(4) 'வரவு வைக்க', 'பற்றுவைக்க' என்னும்சொற்றொடர்களில் பொருத்தமானவற்றைக் கொண்டு பின் வருவனவற்றிலுள்ள கோடிட்ட இடங்களை நிரப்புக :

(அ) பழைய அறைகலன் விற்றதை அறைகலன் கணக்கில்——————

(ஆ) நிலக்கிழாருக்குச் செலுத்திய வாடகையை வாடகைக் கணக்கில்——————

(இ) வட்டியாகப் பெற்ற ரொக்கத்தை வட்டிக் கணக்கில்——————

(ஈ) கடனாளிக்கு அனுமதித்த வட்டத்தை வட்டக் கணக்கில்——————

(உ) இயந்திரத்தின் மீது போக்கெழுதிய தேய்மானத்தைத் தேய்மானக் கணக்கில்——————

## குறுவிடை வினாக்கள் (Short Answer Questions)

(5) பிழைத் திருத்தம் என்றால் என்ன? அதைச் செய்ய வேண்டிய தேவையாது?

(6) அநாமத்துக் கணக்கு என்றால் என்ன? அது எப்பொழுது துவக்கப்படுகிறது?

(7) பிழைகளை எவ்வாறு திருத்துவது என்பதை (செய்முறையை) விளக்குக.

(8) ஒரு நிறுவனத்தின் கணக்கர் எடுத்தெழுதுவதில் பின்வரும் தவறுகளைச் செய்து விட்டார்:

(அ) வாடகையாகச் செலுத்திய ரூ. 160ஐ, நிலக்கிழாரின் கணக்கில் பற்று வைத்துவிட்டார்.

(ஆ) ரூ. 800க்கு அறைகலன் விற்றதை, விற்பனைக் கணக்கில் எடுத்தெழுதி விட்டார்.

(இ) உரிமையர் அவரது சொந்தச் செலவுக்காகத் திருப்பியெடுத்த ரூ. 400ஐ வியாபாரச் செலவுக் கணக்கில் பற்று எழுதிவிட்டார்.

(ஈ) ஓர் அறையின் நிலத்தளத்தைப் பழுதுபார்ப்பதற்காகச் செய்யப் பட்ட செலவு ரூ. 45ஐக் கட்டிடக் கணக்கில் எடுத்தெழுதிவிட்டார்.

(உ) (உரிமையரது) சொந்த செலவுகள் ரூ. 210ஐப் பொதுச் செலவுக் கணக்கில் எடுத்தெழுதிவிட்டார்.

இப்பிழைகளைத் திருத்துவதற்குரிய பதிவுகள் செய்க. இப்பிழைகள் இருக்கும் பொழுது இருப்பாய்வு சமன் படுமா?

(டெல்லி மேல் நிலைப் பள்ளி ஓராண்டுப் படிப்பு, 1970)

(9) பின்வரும் பிழைகளைத் திருத்துவதற்குத் தக்க பதிவுகள் செய்க:

(அ) ரூ. 1,000க்கு அறைகலன் வாங்கியது கொள்முதல் கணக்கில் எடுத்தெழுதப் பட்டுள்ளது.

(ஆ) உள் திருப்ப ஏடு ரூ. 1 குறைவாக மொத்த மிடப்பட்டுள்ளது.

(இ) அறைகலனிலிருந்து போக்கெழுதிய (Written off) தேய்மானம் ரூ. 62 தேய்மானக்கணக்கில் இன்னும் எடுத்தெழுதப்படாமலுள்ளது.

(டில்லி மேல்நிலைப் பள்ளி ஓராண்டு படிப்பு 1969)

(10) பின்வரும் பிழைகளை எவ்வாறு திருத்துவது எனக் காட்டுக. அவை குறித்துக் குறிப்பேட்டுப் பதிவுகள் தருக:

(அ) ஹெச். பி. குப்தா என்பவருக்குச் செய்த கடன் விற்பனை ரூ. 105-94 விற்பனை ஏட்டில் சரியாகப் பதிவு செய்யப் பட்டிருப்பினும், ரூ. 115-31 என எடுத்தெழுதப்பட்டுள்ளது.

(ஆ) விக்ரம் & கம்பெனியிடமிருந்து செய்த கடன் கொள்முதல் ரூ. 125, கொள்முதல் ஏட்டில் பதிவு செய்யப்படவே இல்லை.

(இ) புதிய இயந்திரத்தைப் பொருத்தியதற்காகச் செலுத்திய கூலி ரூ. 267-50, சம்பளம் - கூலிக் கணக்கில் பற்று வைக்கப்பட்டுள்ளது.

(ஈ) உரிமையர் அவரது சொந்தப் பயனுக்காக ரூ. 750 கொடுத்து வானொலிப் பெட்டி வாங்கியது, பொதுச் செலவுகள் கணக்கில் பற்று வைக்கப்பட்டுள்ளது.

(உ) ஓர் எழுத்தருக்கு உரிய சம்பளம் ரூ. 125 கொடுத்தது, அவருடைய சொந்தக் கணக்கில் பற்று வைக்கப்பட்டுள்ளது.

(டெல்லி மேல்நிலைப் பள்ளி வாரியம்)

(11) பின்வரும் பிழைகளைத் திருத்துவதற்குரிய குறிப்பேட்டுப் பதிவுகள் தருக;

(அ) ரூ. 150 பெறுமானமுள்ள சரக்குகள் டேவிட் என்பவரிடமிருந்து கடன் கொள்முதல் செய்தது, விற்பனை ஏடு வழியாகத் தவறாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

(ஆ) பீட்டர் என்பவருக்குச் செய்த கடன் விற்பனை ரூ. 120, கொள்முதல் ஏடு வழியாகத் தவறாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

(இ) காசாளர் பி. நாயுடு என்பவருக்குச் செலுத்திய சம்பளம் ரூ. 300, அவருடைய சொந்தக் கணக்கில் பற்று வைக்கப்பட்டுள்ளது.

(ஈ) பல்லவன் & கம்பெனியிடமிருந்து பெற்ற ரூ. 100, வல்லவன் & கம்பெனியிடமிருந்து பெற்றதாகத் தவறாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

(மேல்நிலைப் பள்ளிப் படிப்பு, 1968)

(12) பின்வரும் பிழைகளைத் திருத்துக:

(அ) ரூ. 250க்கு அறைகலன் வாங்கியது, கொள்முதல் கணக்கில் பற்று வைக்கப்பட்டுள்ளது.

(ஆ) இராம் என்பவருக்குச் செலுத்திய ரூ. 100, ஷ்யாம் கணக்கில் பற்று வைக்கப்பட்டுள்ளது.

(இ) இராம் என்பவரிடமிருந்து ரூ. 500 க்குப் பெறு தற்குரிய மாற்றுச்சீட்டு பெற்றது, ஏடுகளில் பதிவே செய்யாமல் விடப்பட்டுள்ளது.

(ஈ) உரிமையர் எடுத்துச் சென்ற ரூ. 200 பெறுமான முள்ள சரக்கு, B என்பவர் கணக்கில் பற்று வைக்கப்பட்டுள்ளது.

(உ) ரூ. 1,250 மதிப்புள்ள பொறி (Engine) வாங் கியது, கொள்முதல் கணக்கில் எடுத்தெழுதப்பட் டுள்ளது.

(டில்லி மேல்நிலைப் பள்ளிப் படிப்பு 1967)

(13) பின்வரும் பிழைகளை நீவிர் எவ்வாறு திருத்துவீர்?

(அ) உரிமையர் அவரது சொந்தப் பயனுக்காகத் திரும்பப் பெற்ற ரூ. 500, வியாபாரச் செலவுகள் கணக்கில் பற்று வைக்கப்பட்டுள்ளது.

(ஆ) மோகன் என்பவரிடமிருந்து பெற்ற ரூ. 100, சோகன் என்பவருக்கு வரவு வைக்கப்பட்டுள்ளது.

(இ) சீதா என்பவருக்கு ரூ. 150க்குச் செய்த கடன் விற்பனை, கொள்முதல் ஏடு வழியாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

(ஈ) கூலியாகச் செலுத்திய ரூ. 50, கூலிக் கணக்கின் பற்றுப் பகுதியில் இரு முறை எடுத்தெழுதப் பட்டுள்ளது.

(உ) விற்பனை ஏட்டின் மொத்தம் ரூ. 100 குறை வாகக் கூட்டப்பட்டுள்ளது.

(ஊ) அலுவலக அறைகலன் வாங்கியதற்காகச் செலுத் திய ரூ. 750, கொள்முதல் கணக்கில் பற்று வைக்கப்பட்டுள்ளது.

(அனைத்திந்திய மேல்நிலைப் பள்ளிப் படிப்பு, 1968)

(14) பின்வரும் பிழைகளை எவ்வாறு நீவிர் சரிப்படுத்து வீர்?

(அ) இராகவனிடமிருந்து பெற்ற ரூ. 3,000, இராமனு டைய கணக்கில் வரவு வைக்கப்பட்டுள்ளது.

(ஆ) சம்பளமாகச் செலுத்திய ரொக்கம் ரூ. 280க்குப் பதிவு ஏதும் செய்யவில்லை.

(இ) ரூ. 2,200க்கு வாங்கிய தட்டச்சு, விடுகருவிகள் கணக்கில் (Tools Account) பதிவு செய்யப் பட்டுள்ளது.

(ஈ) கருணாகரனுக்குச் செலுத்த வேண்டிய ரூ. 3,200, ரூ. 3,100 செலுத்தித் தீர்க்கப்பட்டது. இதற்குச் செய்யப்பட்டுள்ள பதிவு:

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| கருணாகரன் க/கு பற்று | 3,100 | |
| ரொக்கக் க/கு | | 3,100 |

(உ) பழுதுபார்த்ததற்காகக் கோபால் என்பவருக்குச் செலுத்திய ரூ. 250 அவருடைய சொந்தக் கணக் கில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

(சென்னைப் பல்கலைக்கழகம், மார்ச் 1970)

(15) பின்வரும் பிழைகளை எவ்வாறு நீவிர் திருத்துவீர்?

(அ) ரூ. 600 மதிப்புள்ள சரக்குகளை இராஜு என்ப வருக்கு விற்றது, இராகவனுக்குப் பற்று வைக்கப் பட்டுள்ளது.

(ஆ) மோகன் என்பவரிடமிருந்து செய்த கொள்முதல் ரூ. 2,500, அவருடைய கணக்கில் தவறாகப் பற்று வைக்கப்பட்டுள்ளது.

(இ) மனோகரன் என்பவரிடமிருந்து செய்த கொள் முதல் ரூ. 1,500 அவருடைய கணக்கில் பற்று வைக்கப்பட்டுள்ளது.

(ஈ) மேலாளருக்குச் சம்பளமாகச் செலுத்திய ரூ. 600 அவருடைய கணக்கில் பற்று வைக்கப்பட்டுள்ளது

(உ) ரொக்க ஏட்டின் பற்றுப் பகுதியிலுள்ள வட்டப் பத்தியின் (Column) மொத்தம் ரூ. 40 குறைவாகக் கூட்டப்பட்டுள்ளது.

(சென்னைப் பல்கலைக்கழகம், செப்டம்பர் 1960)

(16) படேல் & கம்பெனியின் இருப்பாய்வு சமன்படாமல் போகவே, அதன் வேறுபாட்டுத் தொகை தற்காலிக மாக அநாமத்துக் கணக்கில் இடப்பட்டது. பிறகு பின்வரும் பிழைகள் கண்டுபிடிக்கப்பட்டன. அவற் றிற்குத் திருத்தப் பதிவுகள் தருக:

(அ) சரக்கு விற்பனை ரூ. 30 விற்பனைத் திருப்ப ஏட்டில் தவறாகப் பதிவு செய்யப்படினும், அதி லிருந்து எடுத்தெழுதும் பொழுது வாடிக்கையர் கணக்கில் சரியாகப் பற்று வைக்கப்பட்டுள்ளது.

(ஆ) விற்பனை ரூ. 12-58 அந்த வாடிக்கையர் கணக் கில் ரூ. 9-78 என எடுத்தெழுதப்பட்டுள்ளது.

(இ) அந்த மாதத்திய விற்பனை ஏட்டின் மொத்தம் ரூ. 100 குறைவாகக் கூட்டப்பட்டுள்ளது.

(ஈ) வெளித் திருப்ப ஏட்டில் சரியாகப் பதிவு செய்த ரூ. 40க்குரிய நடவடிக்கையொன்றை எடுத்தெழு தும்பொழுது உரிய தரப்பாரின் கணக்கில் (Party's Account) தவறாக வரவு வைக்கப் பட்டுள்ளது.

(உ) கொள்முதல் ஏட்டில் பதிவு செய்த ரூ. 105-62க் குரிய நடவடிக்கை அந்த ஏட்டிலிருந்து ரூ. 110-31 என எடுத்தெழுதப்பட்டுள்ளது.

(ஊ) ரொக்க ஏட்டின் பெறுதல்கள் மருங்கில் (பகு யில்) (Receipt side) பதிவு செய்த ரொக்க வட்டம் ரூ. 20 அங்கிருந்து வாடிக்கையரின் கணக் கில் எடுத்தெழுதப்படாமல் விடப்பட்டுள்ளது.

(சென்னை பல்கலைக் கழகம், ஏப்ரல் 1973)

(17) பின்வரும் பிழைகள் எந்தெந்த வகையைச் சேர்ந்தவை என எடுத்துரைத்து, அவற்றை எவ்வாறு திருத்துவது என விளக்குக:

(அ) கண்ணனுக்குச் செய்த சரக்கு விற்பனை ரூ. 960 விற்பனை ஏட்டில் ரூ. 600 எனப் பதிவு செய்யப் பட்டுள்ளது.

(ஆ) தட்டச்சு ரூ. 1,200-க்கு வாங்கியது, கொள்முதல் ஏட்டில் ரூ. 600 எனப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

(இ) செந்தில் என்பவருக்கு அனுமதித்த வட்டம் ரூ. 50, ரொக்க ஏட்டில் பதிவு செய்யப்படவே இல்லை.

(ஈ) விற்பனை ஏட்டின் மொத்தம் ரூ. 50 குறைவாகக் கூட்டப்பட்டுள்ளது.

(உ) ரூ. 250-க்குப் பசுபதிக்கு விற்ற சரக்கு, இரசபதி கணக்கில் பற்று வைக்கப்பட்டுள்ளது.

(மதுரை - காமராசர் பல்கலைக்கழகம்,
செப்டம்பர், 1968)

(18) பின்வரும் பிழைகளைச் சரிசெய்வதற்கு நீவிர் செய்யும் குறிப்பேட்டுப் பதிவுகள் அல்லது சரிக்கட்டுகள் யாவை?

(அ) பி. சிவராம் என்பவரிடமிருந்து ரூ. 300-க்குப் பெற்ற இடாப்பு (Invoice) ஏடுகளில் ரூ. 30-க்கு எனப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

(ஆ) இயந்திரத்தை ரூ. 200-க்கு விற்றது, விற்பனை ஏட்டில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

(இ) இயந்திரத்தைப் பழுதுபார்த்தற்கான ரூ. 150-க்குரிய கட்டணச்சீட்டு (Bill) பெற்றது, இடாப்பு ஏட்டில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

(ஈ) கிருஷ்ணா என்பவருக்குச் செய்த ரூ. 50-க்குரிய சரக்கு விற்பனை, அவருடைய கணக்கில் ரூ. 500 எனப் பற்று வைக்கப்பட்டுள்ளது.

(உ) சிவராம் என்பவருக்கு அனுமதித்த வட்டம் ரூ.20 அவருடைய கணக்கில் எடுத்தெழுதப்படவில்லை.

(சென்னைப் பல்கலைக்கழகம், 1964)

உதவிக்குறிப்பு : (1) இடாப்பு என்பது கொள்முதல் செய்த சரக்கு குறித்து நாம் செலுத்த வேண்டிய தொகையைக் காட்டும் பட்டி.

(2) இடாப்பு ஏடு என்பது கொள் முதல் ஏடாகும்.

(19) ஒரு கணக்கர் தனது இருப்பாய்வு சமன்படாமல், வரவு இருப்புகளின் மொத்தம் ரூ. 922 அதிகமாக இருப் பதைக் காண்கிறார். அவர் அந்த வேறுபாட்டை அநாமத்துக் கணக்கில் இடுகிறார். பிறகு அவர் அலசியாராய்ந்து கண்டுபிடித்த பிழைகளாவன:

(அ) ரொக்க ஏட்டின் வரவுப் பகுதியிலுள்ள வட்டப் பத்தியின் மொத்தம் ரூ. 130, பேரேட்டில் எடுத் தெழுதப்படவில்லை.

(ஆ) ரொக்க ஏட்டின் பற்றுப் பகுதியிலுள்ள வட்டப் பத்தியின் மொத்தம் ரூ. 52, பேரேட்டில் எடுத் தெழுதப்படாமல் விடுபட்டுள்ளது.

(இ) கொள்முதல் ஏட்டின் மொத்தம், ரூ. 1,000 குறை வாகக் கூட்டப்பட்டுள்ளது.

(ஈ) ஆர். கிருஷ்ணா என்பவருக்கு ரூ. 375-க்குச் செய்த விற்பனை, ரூ. 735-க்குச் செய்தது என விற்பனை ஏட்டில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

(உ) எஸ். பீட்டர் என்பவருக்கு ரூ. 700-க்குச் செய்த விற்பனை, கொள்முதல் ஏட்டில் பதிவு செய்யப் பட்டுள்ளது.

இப் பிழைகளை அனாமத்துக் கணக்கு வழியாகத் திருத்துவதற்குரிய குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக. அநாமத்துக் கணக்கையும் காட்டிடுக.

(20) ஒரு கணக்கர் தனது இருப்பாய்வைச் சமன்படுத்த இயலாத நிலையில், அதன் வரவுப் பகுதியின் மொத்தம் பற்றுப் பகுதியின் மொத்தத்தைக் காட்டிலும் ரூ. 250 அதிகமாக இருந்தது. இந்த வேறுபாடு அநாமத்துக் கணக்கில் இடப்பட்டது. பிறகு பின்வரும் பிழைகள் அந்த ஏடுகளிருந்து கண்டுபிடிக்கப்பட்டன:

(அ) D & கம்பெனிக்கு ரூ. 620-க்குச் செய்த சரக்கு விற்பனை, விற்பனை ஏட்டில் சரியாகப் பதிவு செய்யப்பட்டு, D & கம்பெனி கணக்கில் ரூ. 260 என எடுத்தெழுதப்பட்டுள்ளது.

(ஆ) மோகன் என்பவருக்கு ரூ. 75 ரொக்கத்திற்குச் சரக்கு விற்கப்பட்டது. இது ரொக்க ஏட்டில் சரியாகப் பதிவு செய்யப்பட்டிருப்பினும், தவறாக மோகன் கணக்கில் எடுத்தெழுதப்பட்டுள்ளது.

(இ) பெறுதற்குரிய வாடகைக் கணக்கின் (Rent Receivable Account) வரவு இருப்பாகிய ரூ. 755, இருப்பாய்வில் ரூ. 570 எனத் தவறாகக் காண்பிக்கப்பட்டுள்ளது.

(ஈ) வெளித் திருப்ப ஏட்டின் மொத்தம் ரூ. 200, பேரேட்டில் எடுத்தெழுதப்படவில்லை.

(உ) பிரகாஷ் பிரகாசன் என்பவரிடமிருந்து ரூ. 100 பெறுமானமுள்ள சரக்கு கொள்முதல் செய்யப் பட்டது. இது விற்பனை ஏட்டில் பதிவு செய்யப் பட்டுள்ளது. இருப்பினும் பிரகாஷ் பிரகாசன் கணக்கில் அது சரியாக வரவு வைக்கப்பட்டுள்ளது.

(ஊ) விற்பனை ஏடு ரூ. 100 குறைவாக மொத்தமிடப் பட்டுள்ளது.

(எ) சோகன் என்பவரது கணக்கின் வரவுப் பகுதி மொத்தம் ரூ. 100 அதிகமாகக் கூட்டப் பட்டுள்ளது.

இப் பிழைகளைத் திருத்துவதற்குரிய குறிப் பேட்டுப் பதிவுகள் தந்து, அனாமத்துக் கணக்கையும் தயாரிக்க.

(டில்லி மேல்நிலைப் பள்ளிப் படிப்பு, 1971)

(21) சமன்படாமல் வேறுபாடு காட்டிநிற்கும் இருப்பாய்வு உமக்குத் தரப்படுகிறது. அதிலுள்ள வேறுபாடு அனா மத்துக் கணக்கில் இடப்பட்டுள்ளது. பின்வரும் பிழைகள் பிறகு கண்டுபிடிக்கப்பட்டன:

(அ) 'வெள்ளைச்சாமி என்பவருக்கு ரூ. 660-க்குச் செய்த சரக்கு விற்பனை, விற்பனை ஏட்டில் சரியாகப் பதிவு செய்யப்பட்டது. ஆனால் அது வெள்ளைச்சாமியின் கணக்கில் ரூ. 760 என எடுத்தெழுதப்பட்டதோடு, அந்த மாதத்திய விற்பனை ஏட்டின் மொத்தமும் ரூ. 100 அதிக மாகக் கூட்டப்பட்டுள்ளது.

(ஆ) பழனி என்பவருக்கு ரூ. 150-க்குச் செய்த ரொக்க விற்பனை, ரொக்க ஏட்டில் முறையாகப் பதிவு செய்யப்பட்டு, பழனியின் கணக்கில் வரவு வருமாறு எடுத்தெழுதப்பட்டுள்ளது.

(இ) பச்சையப்பன் என்பவரிடமிருந்து விற்பனைத் திருப்பமாகப் பெற்ற ரூ. 130 பெறுமானமுள்ள சரக்குகள், விற்பனை ஏட்டில் பதிவு செய்யப் பட்டு, அங்கிருந்து பச்சையப்பனின் கணக்கில் வரவு வைக்கப்படுமாறு எடுத்தெழுதப்பட் டுள்ளது.

(ஈ) ஜேக்கப் என்பவருக்கு விற்கப்பட்ட சரக்குகள் ரூ. 1,240-க்கு இடாப்பு இடப்பட்டு, அவருடைய கணக்கில் திசம்பர் 20 ஆம் நாளன்று பற்று வைக்கப்பட்டன. ஆனால் அவை திசம்பர் 23-ம் நாளன்று திருப்பியனுப்பப்பட்டு, திசம்பர் 31 ஆம் நாளன்று எடுக்கப்பட்ட இறுதிச் சரக்கிருப்புப் பட்டியலில் சேர்க்கப்பட்டன. இந்த விற்பனைத் திருப்பம் குறித்துப் பதிவுகள் ஏதும் ஏடுகளில் செய்யப்படவில்லை.

(உ) விற்பனைத் திருப்ப ஏடு ரூ. 1,000 அதிகமாக மொத்தமிடப்பட்டுள்ளது. மேலும் அந்த ஏட்டின் ஒரு பக்கத்தின் மொத்தம் ரூ. 17,300 அடுத்த பக்கத்திற்கு ரூ. 17,030 எனத் தூக்கியெழுதப் பட்டுள்ளது.

(ஊ) ஹென்றி என்பவரிடமிருந்து பெற்ற ரூ. 1,600-க் கான பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு, செலுத்தற் குரிய மாற்றுச்சீட்டுக் கணக்கிலும், ஹென்றியின் கணக்கிலும் வரவு வைக்கப்பட்டிருக்கிறது.

இப் பிழைகளைத் திருத்துவதற்குரிய பதிவு களைச் செய்வதோடு, அநாமத்துக் கணக்கையும் காட்டிடுக.

(டில்லி மேல்நிலைப் பள்ளிப் படிப்பு, 1966)

**உதவிக்குறிப்பு :**

இருப்பாய்வின் வேறுபாட்டுத் தொகை என்ன, எத்தகையது என்பவை தெரியாததால், திருத்தப் பதிவுகள் செய்து, அவற்றை அநாமத்துக் கணக்கில் எடுத்தெழுதுக. பிறகு அநாமத்துக் கணக்கில் தோன்றும் வேறுபாடே இருப்பாய்வின் வேறுபாடாகும். அத்தொகையை அநாமத் துக் கணக்கின் முதல் வரியில் ''இருப்பு சீ/கொ—இருப்பாய்வு வேறுபாடு'' எனப் புகுத்துக.

